உடலபூராவும் சருமத்திற்கு பாதுகாப்பளிப்பது...
தென்றலைப்போல் குளுமையானது...
புத்துணர்ச்சி யூட்டுவது...

## ப்ளூ ஸீல் டால்க்—ஹெக்ஸக்ளோரோஃபீன் கலந்தது

நம்முடைய நாடு உஷ்ண பிரதேசமானதினால் வியர்வை ஒரு பெரிய பிரச்னையை விளைவிக்கிறது. வியர்வையின் காரணமாக, சருமத்தின் மீதுள்ள கிருமிகள் துர்நாற்றத்தை உண்டு பண்ணுகின்றன. இந்தக் கிருமிகளிலிருந்து ப்ளூ ஸீல் டால்க் சருமத்திற்கு பாதுகாப்பளிக்கிறது. ஏனென்றால் ப்ளூ ஸீல் டால்க்கில் உலகமெங்கும் அங்கீகாரம் பெற்ற துர்க்கந்த நாசினியான ஹெக்ஸக்ளோரோஃபீன் கலந்திருக்கிறது □ இனிய மணத்துடன் கூடிய ப்ளூ ஸீல் டால்க்கை தினமும் உடல் பூராவும் தூவிக் கொள்ளுங்கள். அது உங்களுக்கு புத்துணர்ச்சியூட்டி சருமத்திற்கு இதத்தையும் பூர்ண பாதுகாப்பையும் அளிக்கும்.

**ப்ளூ ஸீல் டால்க் — *சீஸ்ப்ரோ-பாண்ட்ஸின்***
**மற்றுமொரு மகோன்னத டால்க்**

*சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பொரேடெட்*
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏ.யில் இணைக்கப்பட்டது)



# கல்கி

## பொருளடக்கம்

ஜெய ஆனி 24 — ஜூலை 7



கல்கியில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே



பட விளக்கம் 7ம் பக்கத்தில்


'தேசிய ஒருமைப்பாடு'
பொருளாதார நெருக்கடி
வகுப்பு வாதம்
Rath



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

மலர் 27 □ இதழ் 49



# பணக்காரர் கட்சி அல்ல

சுதந்திரக் கட்சி பணக்காரர் நலனுக்குப் பாடுபடுகிறது என்ற கூற்றைப் போன்ற அசத்தியம் வேறெதுவும் கிடையாது. எனினும் விஷய ஞானம் இருக்கக் கூடிய சிலரும் உண்மையை ஆழ்ந்து விசாரிக்காததால் இந்தப் பொய்யான கருத்தை நம்பி வருகிறார்கள். சத்தியத்தைப் பரப்பவே சுதந்திரக் கட்சி பாடுபடுகிறது. 'தொழில் துறையினர் உற்பத்தியைப் பெருக்கித் தேசத்துக்கு நன்மை புரியும் போதே தாங்களும் லாபம் பெறுவதற்கு வழி வகுக்கும் சுதந்திரப் போட்டியினால் தான் பொருளாதாரம் முன்னேற்றம் காணும்' என்கிற உண்மையை மக்களுக்கு உணர்த்துகிற கடுமையான பணியைச் சுதந்திரக் கட்சி மேற்கொண்டுள்ளது. தனித் தொழிலதிபர்களுக்குப் பதில் தொழில் துறையில் சர்க்காரின் ஆதிக்கம் ஏற்பட்டால் திறமையற்ற, அக்கறையற்ற அதிகாரிகளிடம் தொழில் நிர்வாகத்தைத் தந்ததாகவே ஆகும்; அல்லது சலுகை பெற்ற லைசென்ஸ் தாரர்களுக்கு மட்டும் ஏகபோக்கியம் தருவதாகவே முடியும். இப்படிச் சர்க்காரிடமிருந்து ஏகபோக்கியம் பெறுகிறவர்கள் தங்கள் வாடிக்கைக்காரர்களுக்கோ, பொதுமக்களுக்கோ நன்மையை நாடாமல், தமது நன்மையை மட்டுமே கருதுபவர்களாகத்தான் இருப்பார்கள்.

பணம் படைத்த சிலரிடமிருந்து சுதந்திரக் கட்சி சிறிதளவு உதவி பெறுவது வாஸ்தவம். கட்சி என்றால் பணம் தேடித்தானாக வேண்டும். தங்கள் நலனுக்கோ, தங்கள் கோஷ்டியின் நலனுக்கோ பிரதியுபகாரம் செய்யக்கூடிய அரசியல்வாதிகளைக் கையில் போட்டுக் கொள்கிற எண்ணத்துடன் சுதந்திரக் கட்சிக்கு எவரும் உதவி தரவில்லை. சுதந்திரக் கட்சி கூறும் பொருளாதாரக் கொள்கைகளே சரியானவை; தேச நலனுக்கு அவையே உதவும் என்று திடமாகக் கருதுவதால்தான் இவர்கள் சுதந்திரக் கட்சிக்கு உதவுகிறார்கள். ஆயினும், செல்வந்தர்கள் ஒரு கொள்கையைச் சரியானது என்று ஏற்றபோதிலும் கூட நல்ல காரியத்துக்காக அவர்களிடமிருந்து பணம் பெறுவது கடினமாகவே உள்ளது. சர்க்காரின் அத்துமீறிய தொழில் பிரவேசத்தை எதிர்த்துச் சுதந்திரக் கட்சி நடத்தும் போராட்டத்துக்குத் துணை புரிவதற்காகப் பெரிய தொழிலதிபர்களை நம்பிப் பயனில்லை என்ற படிப்பினையைச் சுதந்திரக் கட்சி பெற்றுள்ளது. காப்பு வரி, இறக்குமதித் தடை, வியாபாரப் போட்டிக்குத் தடை முதலியவற்றைத் தொழில் துறையினரே வரவேற்பதையும் காண முடிகிறது. ஏனெனில் இம்மாதிரிச் சர்க்கார் தலையிடும்போதே தங்கள் சொந்த நலனோ, தங்களுடைய நிறுவனத்தின் நலனோ கிடைக்குமாறு சர்க்காரிடமிருந்து சலுகை பெற்று விடலாம்என்று இவர்கள் நினைக்கிறார்கள். (இப்படி நினைப்பது சரியா தவறா என்பது வேறு விஷயம்). எனவே பொதுமக்களின் நலனைக் கவனியாமல், தங்கள் விஷயத்தில் மட்டும் அக்கறை கொண்ட தொழில் துறையினர் சர்க்கார் தலையீட்டைக்கூட ஆதரிக்கிறார்கள். தாங்கள் ஆதரிக்கின்ற நடவடிக்கைகளின் உண்மையான விளைவு என்ன என்பதை அவர்கள் சிந்தித்துப் பார்ப்பதில்லை. மனித சுதந்திரத்துக்கு விதிக்கும் கட்டுப்பாடுகள் அதிகமாகிக் கொண்டே போனால் அவை ஒன்று சேர்ந்து எத்தகைய தீய விளைவை உண்டாக்கும் என்பதைக் காணத் தவறுகிறார்கள்.

இதோடு, பெரும்பாலும் பயத்தின் மீதே தொழில் துறையினர் பலர் கட்டுப்பாடுகளை எதிர்க்காதிருக்கின்றனர். சுய நாசத்துக்கே அழைத்துச் செல்லக் கூடிய ஒரு போக்கு முதலாளித்துவ முறையில் ஏற்பட்டு விட்டது. நேரடியான தாக்குதலுக்கு முகம் கொடுக்க வேண்டிய பெரிய தொழிலதிபர்களும் தைரியமற்றிருக்கின்றனர்.

இறுதியில் சத்தியம் வென்றேயாக வேண்டும்; வெல்லவும் செய்யும். ஆனால்

இதற்கு மிகுந்த காலம் பிடிக்கலாம். அது வரை தேசப் பொருளாதாரம் காத்துக் கொண்டிருப்பதற்கில்லை. எனவேதான் சத்தியத்தின் வெற்றியை விரைவு படுத்துவதற்காகச் சுதந்திரக் கட்சியும் தேர்தல்களில் வென்று சட்டசபைகளில் பலம் பெற விரும்புகிறது. பார்லிமெண்ட் முறைப்படி நடக்கும் ஜனநாயகம் இப்படிப்பட்ட தேவையை உண்டாக்குகிறது. இந்த ஆட்சி முறையில் அவ்வளவாக விஷய ஞானமல்லாதவர்கள் ஆட்சியதிகாரத்தைப் பெற்று விடுகின்றனர். இந்தியாவிலோ இது தீவிர கட்டத்தை அடைந்திருக்கிறது. வாக்காளர்களை விஷயஞானமற்றவர்கள், எழுத்தறிவற்றவர்கள் என்று சாதாரணமாகச் சொல்லுகிறோம். ஏறக்குறைய அதே அளவுக்கு உள்ளார்த்தத்தில் இந்திய சர்க்காருக்கும் விஷய ஞானமில்லை எனலாம். நான் யாரையும் அவமதிக்கும் எண்ணமின்றியே இப்படிச் சொல்லலாம் என நினைக்கிறேன்: இப்போது நடப்பது விஷயஞானமற்றவர்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களின் சர்க்கார்; விஷயஞானமற்றவர்களால் நடத்தப்படும் சர்க்கார். ஆனால் இந்த சர்க்கார் விஷயஞானமற்றவர்களுக்காக மட்டும் நடக்காமல், எல்லோருக்காகவும் நடப்பதுதான் பரிதாபம். உண்மையான கல்வியறிவு பெற்றவர்களால்தான் தேச நலனுக்குப் பணி புரிய முடியும். கட்சி நலனையோ சொந்த நலனையோ கருதாமல், நாட்டை வறுமையிலிருந்தும் திவாலா நிலையிலிருந்தும் மீட்க வேண்டும் என்று தீவிரமாக உணர்பவர்களே நாட்டுக்கு நன்மை செய்ய முடியும்.

உண்மையில் சுதந்திரக் கட்சிக்கும் செல்வந்தர்களுக்குமுள்ள தொடர்பு இவ்வாறிருக்க எப்படியோ அவதூறு பேசத் தொடங்கி, 'சுதந்திரக் கட்சி பணக்காரரின் கட்சி' என்ற பொய் நிலைநாட்டப்பட்டு வருகிறது. பணக்காரர்களுக்கு யாரை நாட வேண்டுமென்பது தெரியும்; அவர்கள் ஆட்சியில் உள்ள கட்சியைத்தான் நாடுவார்கள். நியாயத்தையோ, நேர்மையையோ பலி கொடுத்து எந்தப் பணக்காரர் ஆதாயம் பெறுவதற்கும் சுதந்திரக் கட்சி ஒருபோதும் உதவியதில்லை; அது ஒரு நாளும் அசத்தியத்தை ஆதரித்ததில்லை என்று உறுதியாகச் சொல்வேன்.

வரிகளும் குறைய வேண்டும்; சர்க்காரின் செலவும் குறைய வேண்டும் என்பதற்கே சுதந்திரக் கட்சி பாடுபட்டு வருகிறது. இப்படி நடந்தால்தான் சேமிப்புப் பெருகி, உற்பத்திகரமான முதலீட்டில் ஈடுபடுத்தப் பெற்று நாடு நலன் பெறும். பொதுமக்களின் நலனும் தேச முன்னேற்றமும் வேண்டுமாயின் சுதந்திரக் கட்சிக் கொள்கைகள்தாம் உதவும்.

**(ராஜாஜி 'ஸ்வராஜ்யா'வில் எழுதியது.)**

# என்ன சேதி?

## நல்ல ஆட்சி

ஒரிஸ்ஸா மந்திரிசபைமீது கொண்டுவரப்பட்ட நம்பிக்கையில்லாத் தீர்மானம் படுதோல்வி அடைந்தது. தீர்மானத்துக்குச் சாதகமாக 56 வோட்டுகளும் எதிராக 74 வோட்டுக்களும் கிடைத்தன. சுயேச்சை அங்கத்தினர்கள் நால்வரில் மூவர் அரசாங்கத்துக்கு ஆதரவாக, தீர்மானத்தை எதிர்த்து வோட்டளித்திருக்கின்றனர். தேசமெங்கிலும் கூட்டுச் சர்க்கார்கள் கவிழ்ந்து, ஜனாதிபதி ஆட்சி நடந்து வருகையில் சுதந்திரக் கட்சித் தலைவர் ஒருவர் முதல் மந்திரியாக இருந்து ஆட்சி நடத்தும் ராஜ்யத்தில் பெருவாரியான சட்டசபை அங்கத்தினர்கள் நம்பிக்கை தெரிவித்திருப்பது சுதந்திரக் கட்சி ஆதரவாளர்கள் அனைவருக்கும் பெரு மகிழ்ச்சியளிப்பதாகும். ஒரிஸ்ஸா ராஜ்ய முதன்மந்திரி திரு ஆர். என். ஸிங்தேவ், சுதந்திரக் கட்சியாளராக இருந்தும், எல்லாத் தரப்பு மக்களுக்கும் நியாயமும் நன்மையும் கிடைக்கும் வகையில் நல்லபடி ஆட்சி நடத்துவதினாலேதான், அவர் மந்திரிசபை தேசத்தில் எல்லாருடைய நன்மதிப்பையும் பெற்றுள்ளது.

## வருக, வருக, சுதேசமித்திரனே!

நல்வரவு கூறுகிறோம். சில மாதங்களாக, தொழில் தகராறு காரணமாக வெளிவராதிருந்த ''சுதேசமித்திரன்'' தினப் பத்திரிகை எல்லாத் தகராறுகளும் சுமுகமாகத் தீர்ந்து மீண்டும் வெளிவர விருப்பதை அறிந்து மகிழ்கிறோம். சுதேசமித்திரன் தமிழ் நாட்டின் பழம் பெரும் பத்திரிகை. தமிழக மக்களின் அரசியல், பொருளாதார வாழ்வில் முக்கிய பங்கு கொண்டு, அவர்களுடைய கருத்துக்களை உருவாக்கிய பத்திரிகை. ஜி. சுப்பிரமணிய அய்யர், மகாகவி சுப்பிரமணிய பாரதி, ஸி. ஆர். சீனிவாசன் போன்ற பெரியவர்கள் எல்லாம் சிறப்பான பணியாற்றிய பத்திரிகை. அப்படிப்பட்ட பத்திரிகை இனி வெளிவராது என்று பேசப்பட்டபோது தமிழகத்தில் உள்ள லட்சோபலட்சம் தமிழர்கள் வருத்தமுற்றனர். நாட்டுச் செய்திகளையும் உலகச் செய்திகளையும் தமிழில் அளிக்கும் பத்திரிகை நின்று விட்டதே என்று ஏக்கமுற்றனர். இப்போது எப்படியோ நல்ல எண்ணம் இரு பக்கமும் உதயமாகி அவிந்து போன விளக்கு மீண்டும் சுடர்விட்டுப் பிரகாசிக்கும் என்று கேள்வியுறும்போது, தொழிலாள நண்பர்களையும், நிர்வாகஸ்தர்களையும் மனமாரப் பாராட்டவும் வாழ்த்தவும் மனம் விழைகிறது. இந்தச் சுமுக உறவு நீடிக்கட்டும். சுதேச மித்திரன் இன்னும் பல காலம் வாழ்வதாக!

## யாருக்கு அடுக்கும்?

இப்பொழுது தேசமெங்கிலும் நல்ல விளைச்சல் என்று பெருமைப்பட்டுக் கொள்கிறார்கள். ஆனால் அதே சமயம் விவசாயிகளிடமிருந்து வாங்கும் நெல்லையும் கோதுமையையும் பாதுகாப்பாக வைக்கப் போதிய

யிடங்கு வசதியில்லே என்று அங்கலாய்க்கிறார்கள். அது மட்டுமல்ல; பஞ்சாபிலிருந்து வாங்கிய கோதுமையை வங்கத்துக்குத் திறந்த ரயில்வே வாகன்களில் அப்படியே போட்டு அனுப்புகிறார்கள். தென்மேற்கு பருவ மழை தொடங்கி விட்ட இந்தச் சமயத்தில், இப்படி அனுப்பி வைப்பது நியாயமா? ரயில்வே நிர்வாகத்தினர் மூடிய வாகன்கள் கிடைக்கவில்லே என்றும், திறந்த வாகன்களை மூடக்கூடிய டார்பாலின் படுதாக்கள் கிடைக்கவில்லே என்றும் கைவிரித்து விட்டனர். உணவு கார்ப்பொரேஷனே, பஞ்சாப் அரசாங்கமோ திறந்தபடியே தானியத்தை அனுப்பியிருக்கின்றன! உணவுதானிய வியாபாரத்தில் ஈடுபட்டுள்ள தனி வியாபாரி என்றாவது இப்படிச் செய்வாரா? இப்படித் தானியத்தைப் பாழடிக்கும் மக்களுக்கு உதவ எந்த அந்நிய நாட்டு மக்களுக்காகிலும் மனம் வருமா ?

இதையெல்லாம் பார்க்கும்போது உணவு தானிய போக்குவரத்துக் கட்டுப்பாடுகளை அறவே நீக்கிவிட்டு, விநியோகத்தை வியாபாரிகளிடமே ஒப்படைப்பதுதான் சாலச் சிறந்தது என்று உறுதிப்படுகிறது.

## வேங்கடேசுவரன் மறைவு

ஸ்ரீ எஸ். வேங்கடேசுவரன் அவர்கள் பழைய ஐ. ஸி. எஸ். வர்க்கத்தைச் சேர்ந்தவராயினும், முற்றிலும் மாறுபட்ட மனோபாவம் கொண்டவர். பல உயர் பதவிகள் வகித்த போதிலும் அடக்கமே உருவமாகத் திகழ்ந்தார். நமது பண்பாட்டில் உறுதியான பற்றுக் கொண்டிருந்தார். வடமொழிப் பயிற்சிக்கு ஊக்கம் அளித்து வந்தார். நல்ல சங்கீத ரஸிகர். ''சங்கீதம் வீசை என்ன விலே ?'' என்று கேட்கும் உத்தியோக வர்க்கத்தினரிடையே நல்ல கர்நாடக சங்கீதத்தை ரஸித்துப் போற்றி வளர்க்கத் தம்மாலான உதவியெல்லாம் செய்து வந்தார். அவர் மறைவு கலே உலகுக்கு ஒரு நஷ்டம். அவர் மறைவால் வருந்தும் குடும்பத்தாருக்கு நமது ஆழ்ந்த அனுதாபங்களைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

## சர்க்கார் துறை இலட்சணம்!

'சிந்தனைக்கு உணவாக' அடியிற் கண்ட தகவலைச் சுதந்திர முதலீட்டுக் கழகம் (Forum of Free Enterprise) வெளியிடுகிறது :

அரசியல் சாஸனத்தின் கீழ் சுதந்திர அதிகாரம் பெற்ற இந்திய கம்ப்ட்ரோலர் ஆடிட்டர் ஜெனரல் ஒவ்வோராண்டும் சர்க்கார் தொழில் நிறுவனங்கள் பற்றிப் பார்லிமெண்டுக்கு அறிக்கை சமர்ப்பிக்கிறார். மத்திய சர்க்கார் தொழிலகங்களின் மூலதனம் குறித்தும் நிகர விளைவு குறித்தும் அவரது அறிக்கையில் காணும் அடியிற்கண்ட புள்ளி விவரம் வரி செலுத்தும் பொதுமக்களுக்குச் சுவாரசியமாக இருக்கும் :

| ஆண்டு | மூலதனம் ( கோடி ரூ. ) | லாபம் (+) அல்லது நஷ்டம் (−) |
|---|---|---|
| 1961 | 920.43 | + 6.34 |
| 1962 | 1090.75 | −10.60 |
| 1963 | 1294.11 | −12.38 |
| 1964 | 1573.59 | − 0.50 |
| 1965 | 1820.75 | +10.32 |
| 1966 | 2166.73 | + 9.93 |
| 1967 | 2596.63 | −21.60 |

சர்க்கார் துறை முதலீடு செய்த இந்த மூலதனத் தொகை தனியாரிடம் இருந்திருந்தால் குறைந்தபட்சம் பத்து சதவிகிதமாவது லாபம் கிடைத்திருக்கும். அதாவது 1961லிருந்து 1967 வரை ரூ. 1150 கோடியாவது லாபம் கிடைத்திருக்கும். ஆனல் இப்போதோ தேசம் பெற்றுள்ள நிகர விளைவு சுமார் இருபது கோடி ரூபாய் நஷ்டமேயாகும்.



### காமகோடியின் கருணைமொழி

அந்நிய நிலத்தில் மேயக்கூடாது என்பதற்காகப் பசுவைக் கட்டிப் போடுகிறோம். அந்த நிலத்தின் பயிர் சேதம் ஆகாமல் இருக்க வேண்டும் என்பதற்காக மட்டும் கட்டிப் போடுவதில்லை. பசு அடிபடாமல் இருக்க வேண்டும் என்று அதைக் காக்கவே கட்டிப் போடுகிறோம். இவ்வாறே எல்லா சமயக் கட்டுப்பாடுகளும் நாம் பிறருக்கு இன்னல் விளைவிக்காமல் காப்பாற்றுவதோடு நம்மைக் காப்பாற்றிக் கொள்ளவும் விதிக்கப்பட்டவை. முக்கியமாக, நம்மை நம்மிடமிருந்தே காப்பாற்ற விதிக்கப்பட்டவை.

# ராஜாஜியின் கருத்துக்கள்

தனியாரின் சுதந்திரமான தொழிற் போட்டி என்ன சாதிக்க முடியும் என்பதை மேற்கு ஜெர்மனி நிரூபித்துள்ளது. அங்கு எவ்வளவு வேலை வாய்ப்புக்கள் மக்களுக்குத் தேவைப்படுகின்றனவோ அதைப் போல் இரண்டு மடங்கு வேலைகள் காலியாயிருக் கின்றன. இது தவிர வெளிநாடுகளிலிருந்து பத்து லட்சம் தொழிலாளிகள் அங்கு வந்து வேலை பார்க்கின்றனர். அதாவது அந்நாட் டில் கிடைக்கும் ஊழியர்களைவிட அதிகப்பேர் தேவைப்படும் அளவுக்கு அங்கு வேலை வாய்ப்புக்கள் உயர்ந்தபடி உள்ளன.

ஃஃஃ

குடும்பத்தில் ஒருவர் தொண்டு கிழவ ராகப் போன பிற்பாடும் தாமே எஜமானர் என்றும் தம்மால் வீட்டு விவகாரங்களை எல்லாம் சரிசெய்துவிட முடியும் என்றும் நினைத்துக் கொள்வது வழக்கம். காங்கிரஸும் இப்படித்தான் நினைக்கிறது. கிழவனிடம் அவரது காலம் முடிஞ்சு போச்சு என்று உணர்த்த மற்றவர்களுக்குத் தைரியம் தேவையா யிருக்கிறது.

ஃஃஃ

அமெரிக்கச் சிறுவர்களில் நூற்றுக்குப் பத்துப் பேர் தமது பதினெட்டாவது வயதுக்குமுன் ஏதாவது குற்றம் செய்து கோர்ட்டில் ஆஜர் செய்யப்படுகிறார்கள் என்று சமீபத்தில் ஜனாதிபதி ஜான்ஸன் கூறியுள் ளார். இது ராய்ட்டர் தரும் செய்தியில் காண்கிறது.

லௌகிக உயர்வைப் பற்றியே அனவரத மும் பெற்றோர்கள் சிந்திப்பதால் குழந்தை களிடம் போதிய கவனம் இல்லை. குழந் தைகள் சுதந்திரம் என்ற பெயரில் மனம் போனபடி இருக்கிறார்கள். ஜனாதிபதி ஏனோ தானோ என்று பேசவில்லை ; புள்ளி விவரம் தந்து தம் கருத்தை வலுப்படுத்தியிருக் கிறார். இதிலிருந்து இந்தியாவிலுள்ள நாம் படிப்பினை பெறுவோம். இதுவரை ஒழுக்கக் குறைவுகளுக்கு வறுமையே காரணம் என்று சொல்லி வந்தோம். செல்வச் செழிப்புக்காகப் பேராசை கொண்டிருப்பதும் இதே அள வுக்கு ஒழுங்கீனத்துக்குக் காரணம் என்று அமெரிக்காவைப் பார்க்கும்போது தோன்று கிறது.

நாம் அன்றாடம் செய்யும் வீட்டு வேலை களிலும் ஆண்டவனை ஏற்க வேண்டும். 'ஆண்டவனை ஏற்பது' என்பதை ஒரு பகட்டுக் காட்சியாகச் செய்யாமல், சத்திய மாகச் செய்வதற்குக் குழந்தைகளையும் பழக்க வேண்டும்.

எல்லாவற்றிலுமே மிதமாக இருப்பது அவ சியம். எதுவுமே 'அதி'யாகிவிட்டால் அதை ஓர் உதாரணமாகக் கொண்டு மற்றவர் பின்பற்ற முடியாமல் போகும். உண்பது, உறங்குவது, உழைப்பது சுகாநுபவம் எல்லா வற்றிலுமே கீதை ஐயம் திரிபற மிதத் தன்மை யைத்தான் விதிக்கிறது.

நாத்யச்னதஸ்து யோகாஸ்தி நசைகாந்த மனச்னத:
ந சாதி ஸ்வப்ன சீலஸ்ய ஜாக்ரதோ நைவ சார்ஜுன
யுக்தாஹார விஹாரஸ்ய யுக்தசேஷ்டஸ்ய கர்மஸு
யுக்தஸ்வப்னவபோதஸ்ய யோகோ பவதி து:கஹா

மிக அதிகமாக உண்பவனுக்கும் யோகம் கைகூடாது; அடியோடு பட்டினி போடுபவனுக்கும் யோகம் கைகூடாது. மிகவும் தூங்குபவனுக்கும் யோகமில்லை; தூங்காமலே விழித்திருப்பவனுக்கும் யோக மில்லை.

துயரத்தை ஒழிக்கும் யோகமானது உணவு, பொழுதுபோக்கு, உழைப்பு, உறக்கம், விழிப்பு இவை எல்லாவற்றை யும் மிதமாகக் கட்டுப்படுத்தியவனுக்கே உரித்தானது.

ஃஃஃ

''காலை வாரிவிட்டு விளையாடுவதில் காங் கிரஸ் மீண்டும் மும்முரமாக ஈடுபட்டிருக் கிறது..... வெறும் சந்தர்ப்பவாதத்தால் செய்யப்படும் இவ்விளையாட்டு காலக்கிரமத் தில் காங்கிரஸுக்கே நன்மை செய்யப் போவ தில்லை'' என்று 'இந்தியன் எக்ஸ்பிரஸ்' (ஜூன் 25) தலையங்கம் கூறுகிறது. கட்சி மாறுவது நேர்மைக் குறைவென்று கூறி, அதைச் சட்டப்படி தடுக்கக்கூட முன்பு யோசிக்கப்பட்டு வந்தது. ஆனால் இப் போதோ கட்சி மாறச் செய்வதே காங் கிரஸ் ஆதிக்கத்தை மீண்டும் பெறுவதற் காகப் பின்பற்றும் கொள்கையாகி விட்டது.

ஃஃஃ

நீதியும் சீர்திருத்தமும் வேண்டி அஹிம்சை அணிகளை நடத்திச் செல்வதில் உலகுக்கே முதல்வராக அனைவராலும் மதிக்கப்படுபவர் காந்திஜி. குதிரைப் பந்தய முடிவில் பரிசுகள் வழங்கப்படுவதற்காகக் காத்திருப்பது போல், இந்த அணிகளின் யாத்திரை முடிகிற இடத்தி லேயே அவர்கள் விரும்பிய குறிக்கோளின் நிறைவு காத்திருக்கும் என்று எதிர்பார்க்கு மாறு காந்திஜி தம் சீடர்களுக்குச் சொல்ல வில்லை. அஹிம்சை முறையில் வெற்றி காணப் பொறுமையும் நம்பிக்கையும் நிறையத் தேவை.

ஃஃஃ

திரு பி. ஏ. ஷாம்சுத்தீன் என்கிற பத்திர விற்பனையாளர் அரசாங்கக் கடன் ஒன் றுக்குப் பணம் தந்தாக வேண்டும் என்று தாசில்தார் உத்தரவிட்டார். அவர் மறுத்

தார். இதற்காக அவரது லைசென்ஸு பறிக்கப்பட்டது. அவர் சென்னை ஹைகோர்ட்டில் 'ரிட்' மனுப் போட்டார். வழக்கில் வெற்றியும் கண்டார்.

இதுபோன்ற நிர்ப்பந்தம் எங்கும் பரவி வருகிறது. ஹைகோர்ட்டின் தீர்ப்பு ஓர் உபயோகமான முடிவாகும்.

ஃஃஃ

ப்ராக்ஜி பாய் (கந்துபாய்) தேசாய் அவர்களின் மறைவு எனக்கு ஒரு சொந்தத் துக்கமாகும். ரௌலத் சட்டக் கிளர்ச்சி தொடங்கியபோது அவர் தேவதாஸ் காந்தியுடன் நீண்ட காலம் சென்னையில் இருந்தார். அவரிடம் எனக்கு அன்பு உண்டாயிற்று.

பத்திரிகைகளில் கண்டிருப்பது போல் அவர் தென் ஆப்பிரிக்க சத்தியாக்கிரகத்திலேயே பங்கு கொண்டவர். சத்தியாக்கிரகம் என்பதன் பொருளை உணர்ந்து, அதனை எப்படிச் செயலாக்க வேண்டும் என்று அறிந்திருந்தவர்களில் அவர் ஒருவர்.

ஃஃஃ

சிப்பந்திகள் அதிகமாக ஆக, வேலையும் அதிகமாகி, அதற்காக மேலும் சிப்பந்திகளை நியமிக்கும் விசித்திர நியதிப்படி நிருவாகச் செலவு உயர்ந்து கொண்டே வருகிறது. இதற்காக எல்லா விதத்திலும் பணம் திரட்டப்படுகிறது. இன்னமும் உண்மையை உணராமல் தனியார் தொழில்களின் எல்லையைக் குறுக்கி, ஒருசில ஏகபோக்கியக்காரர்களிடம் அதனை விட்டு, அதே சமயம் சர்க்கார் தொழிலை எல்லாத் திசைகளிலும் விஸ்தரித்து வருகின்றனர். தேசத்தின் செல்வத்தையெல்லாம் சர்க்கார் துடைத்தெடுத்துக் கொள்கிறது. இந்தப் பணத்தைக் கொண்டு, சர்க்கார் ஊழியர்கள் ஊதிய உயர்வுக்காகக் கிளர்ச்சி செய்யாதவாறு அவர்களுக்குச் சம்பள உயர்வு தரும் ஸ்தாபனமாகவே அரசாங்கம் ஆகியுள்ளது.

ஃஃஃ

ஜெனரல் டிகால் அவர்களின் பலம் நிருபணமாகிவிட்டது. பிரான்ஸில் நடந்த குழப்பங்களின் நிகர விளைவாக நல்லதே உண்டாகும். அதாவது அமெரிக்காவும் பிரான்ஸும் நட்புக் கொள்ளும். சுதந்திர உலகுக்கு இதனால் நலம் உண்டாகும். இதோடு, அமெரிக்காவும் ருஷ்யாவும் நட்பு மிகுந்த சக வாழ்வுக்கான அழுத்தமான ஆதாரத்தைத் தேடுவதாகத் தெரிகிறது.

ஃஃஃ

கடவுளை விலக்கிவிட்டு நன்னெறிகளை மட்டும் வைத்துக் கொள்ள வேண்டும் என்பது இன்று அறிவாளி உலகின் லட்சியம். இது இன்னும் வெற்றி பெறவில்லை. மாறாகத் தோல்வியே அடைந்து வருகிறது. ஆனால் தோல்வி யடைந்ததாக ஒப்புக்கொள்ள மாட்டார்கள். கடவுளைப் பற்றிக் கருத்து வைக்காமல் நன்னெறிகளை மட்டும் பரப்பும் முயற்சி இந்தியாவில் பௌத்த — ஜைன ஆசாரியர்களால் வெற்றிகரமாக நடத்தப்பட்டது.

'' பாதுகாப்பு ''
என்ற தலைப்பில்
பொருளடக்கப் பகுதியில்
இடம்பெற
புகைப்படம் அனுப்பியவர்:
வி.நாகசுந்தரம்

ஆனால் மேற்சொன்ன ஆசாரியர்களே கடவுளாக்கப்பட்டதால்தான் இந்த வெற்றி ஏற்பட்டது. கடவுள் இல்லாத சூனியத்தை ஆசாரியர்கள் நிரப்பினர். அவர்களுடைய தெய்வத் தன்மையாலேயே நன்னெறிகள் காக்கப்பட்டன. ஹிந்து மத தத்துவஞானிகள் கடவுளைப் பற்றி அறிவைச் செலுத்துவதிலேயே விருப்பம் மிகுந்தவர்கள். ஆனால் பௌத்தமும், சமணமும் இந்த விசாரணையை விலக்கியது. அப்படியிருந்தும் அம்மத ஆசாரியர்களே கடவுளாக மதிக்கப்பட்டனர். இவ்விஷயத்தில் ஹிந்து மதக் கொள்கை மிகவும் எளிதானது. ஆசாரியன் என்பவன் ஆண்டவனின் அவதாரம்; கண்ணுக்குத் தெரிகிற பல்லாயிரம் ரூபங்களில் தோன்றும் ஆண்டவனே ஒரு நோக்கத்துக்காக ஆசாரியனாக அவதரிக்கிறான் என்பது ஹிந்துக் கொள்கை.

ஃ ஃ ஃ

ஆண்டவன் தன்னையே பலவாகப் பிரித்துக் கொண்டான். ஒன்று பலவாயிற்று. இப்படிப் பலவான ஒவ்வொன்றும் மற்றதைப் பெரும் சக்தியுடன் தன்பால் இழுத்துக்கொண்டது. இப்படித்தான் அன்பு பிறந்தது; அன்பின் விளையும் ஆனந்தமும் பிறந்தது. இப்படியே விட்டிருந்தால் அந்தப் பலவும் ஒன்றுகூடி மீண்டும் ஒன்றேயாகி யிருக்கும். லீலையும் முடிந்திருக்கும். அப்படி முடியக் கூடாது என்றே துவேஷம் என்பது பிறப்பிக்கப்பட்டது. ஒன்றிலிருந்து பிரிந்த பலவற்றைக் கோபமும், அதுபோன்ற மற்ற உணர்ச்சிகளும் ஒன்று சேர விடாமல் செய்தன; அவற்றை மேன்மேலும் விலகச் செய்தன. இவ்வாறு விலகுவதால் மீண்டும் சேரும்போதுள்ள ஆனந்தம் அளவிட முடியாமல் பெருகும். அதாவது ஒன்றுவதன் ஆனந்தத்தைப் பெருக்கிக் காட்டவே, கோபம் முதலிய பிரிவினைச் சக்திகள் பிறப்பிக்கப்பட்டன. ஆனபடியால் துவேஷம் என்பதையே பல சமயங்களில் அன்பிடமிருந்து வித்தியாசப்படுத்திப் பார்க்க முடிவதில்லை. தீமையை நன்மையிடமிருந்து பிரித்துச் சொல்ல முடியாமற் போகிறது. இவ்வெல்லாவற்றுக்குள்ளும் ஒரு நியதி ஒளிந்து கொண்டிருக்கிறது. ஒவ்வொரு சமயத்திலும் நாம் இதன் ஒரு சில துண்டுகளை மட்டுமே காண்கிறோம். அதற்கு மேல் பார்க்க முடிவதில்லை. அதனாலேயே சிலவற்றைத் தீமையென்றும் துவேஷமென்றும் பொறாமையென்றும் சொல்லுகிறோம். ஆனால் இவையும் ஆனந்தத்தை விருத்தி செய்வதற்கான உபாயங்களே.

# தண்பொழில் சூழ் பனந்தாள்







அன்பின் ஆற்றல் மிகப் பெரியது. எல்லாம் வல்ல இறைவனும் அன்பில் அகப்பட்டு விடுகிறான். தூய அன்பென்னும் பிடியுள் அகப்படும் மலை அவன்; அன்பென்னும் குடில் புகும் அரசு அவன். இதையே திருவாசகமும் 'பக்தி வலையில் படுவோன் காண்க' என்று பேசும். அன்பின் ஆற்றலை, பக்தியின் சக்தியை, வழிபாட்டின் திறத்தை வையகம் உணர வைத்த திருத்தலம் திருப்பனந்தாள்.

தலைசாய்ந்திருந்த பெருமானை நிமிர்த்திடச் சோழ மன்னன் முயன்றான். படை பலம் கொண்டு கயிறு கட்டி இழுத்தான். இலிங்கம் நிமிர்ந்திடவில்லை. வெறும் மிருக பலமும் படை பலமும் பெருமானது திருவுள்ளத்தைக் கனிவிக்குமா என்ன? இந்நிகழ்ச்சி அறிந்து திருக்கடவூரில் வாழ்ந்து வந்த குங்கிலியக் கலயர் என்ற சிவனடியார் (தாம் இட்டு வந்த தூபதீபத்தால் தம் பெயரிலேயே தொண்டின் பெருமையை விளக்கி வந்த அருளாளர்) பனசைக்கு வந்தார்; தம் கழுத்தில் கயிற்றைக் கட்டி இழுத்தார். அன்பர் அன்புக்கு அடிபணியும் ஆதிமூலப் பொருள் தலை நிமிர்ந்தான். மன்னன் மகிழ்ந்தான். வையகம் மகிழ்ந்தது. இவ்வாறு அன்பின் வெற்றியையும், பெற்றியையும் உலகம் உணரக் காட்டிய திருத்தலம் இது.

தாடகை என்பாளது அன்பின் முன் தன் திருமுடி சாய்த்து மாலை கொண்ட பெருமான் அருண ஜடேசன். பிறகு குங்கிலியக் கலயரது அன்புக்கு வளைந்த முடி நிமிர்ந்தது.

1. தல விருட்சம் பனை.
2. குங்கிலியக் கலயர்.

பரம்பொருளைச் சாய்த்ததும் அன்பு; நிமிர்த்தியதும் அன்பு.

இத்திருத்தலம் தருமை ஆதீனத்தின் அருளாட்சிக்கு உட்பட்ட இருபத்தேழு திருத்தலங்களுள் ஒன்று.

இங்கே மூர்த்தி, தலம், தீர்த்தம் மூன்றும் சிறப்புடையன. தலவிருட்சம் பனை. பனை+தாள் என்பதே பனந்தாள் என்று வரவு கொண்டு நிற்கிறது. தாடகை வழிபட்டதனால் இத் திருத்தலக் கோயிலுக்குத் 'தாடகை யீச்சரம்' என்று பெயர். இது திருமுறைகளுள் இடம் பெற்றுள்ளது.

சுமதி என்னும் நாக கன்னிகை அம்பிகை திருக் கோயிலுக்கு முன் உள்ள தீர்த்த வழியே வந்து வழிபட்டு அரித்துவசன் என்பானை மணந்தாள். இத் தீர்த்தம் நாக



தாடகை வரலாறு

கன்னிகைத் தீர்த்தம் என வழங்கப் படுகிறது.

இத்தலத்தின் அருகே ஃமண்ணி யாறு ஓடுகிறது. நாக கன்னிகை தீர்த்தம், ஐராவத தீர்த்தம், பிரம தீர்த்தம் முதலிய பல தீர்த்தங்கள் இத்தலத்தில் உள்ளன. இவற்றில் மூழ்கிப் பல நலன்களும் எய்தி இன் புறுவோர் பலர்.

இத் திருக்கோயிலில் பல கல் வெட்டுக்கள் உள்ளன. இதனைக் கட் டியவர் பெயர், கர்ப்பக்கிருகத்தின் அடிப்புறச் சுவரில் பொறிக்கப்பட் டுள்ள கல்வெட்டால் அறியப்படு கிறது. அவர் பெயர் 'திருப்பனந் தாள் நக்கன் தரணி' என்பதாகும். நக்கன் என்பது சிவபிரான் பெயர்.

தாடகை, குங்குலியக் கலயர் முதலிய திருவுருவங்களின் பழைமையான சிற்பங்கள் இங்கு உள்ளன. பக்தி, மெய்ப்பாடு இவற்றை விளக்கும் வகையில் சிற்பிகள் இவற்றைச் சிறப்பாக அமைத்துள்ளனர்.

இராஜகோபுரம் கலை வண்ணம் காட்டி நிற்கிறது. சோழ மன்னர்கள் அடிக்கடி இக் கோயிலுக்குப் போந்து நேரடி நிர்வாகம் செய்து கோயிலைக் கண் போல் புரந்து வந்துள்ளனர் என்கின்றன கல்வெட்டுக்கள்.

இரண்டாம் இராஜராஜன் காலத்தில் கொள்ளிடத்துக்குச் சுவாமி எழுந்தருளிச் சென்று தீர்த்தம் பிரசாதிக்கச் செல்ல இராச கம்பீரன் என்ற திருவீதி அமைக்கப் பெற்றது. இவ்வீதி திருப்பனந்தாளி லிருந்து அணைக்கட்டுக்குச் செல்லும் சாலை யாக உள்ளது. இன்றும் பெருமான் திருவிழாவின் முடிவில் இவ்வீதி வழியே கொள்ளிடத்துக்குச் சென்று தீர்த்தம் கொடுத்தருளும் நிகழ்ச்சி ஏற்பாடு செய்யப் பெற்று நடந்து வருகிறது.

திருஞானசம்பந்தர் இங்குப் போந்து திருப்பதிகம் பாடியுள்ளமை கி. பி. 7ஆம் நூற்றாண்டிலேயே இத்தலம் வழிபாட்டுக் குரிய பெருஞ் சிறப்புடன் காக்கப்பெற்று வந்தமையைக் காட்டுகின்றது. தேவாரத்தில் குறிக்கப்பட்டபடி தண்வயல் சூழ் பனந் தாளாகவும் தண்பொழில் சூழ் பனந்தாளாக வும் இத்தலம் விளங்குகிறது.

காசியில் நிறுவப்பெற்ற ஸ்ரீ குமாரசாமி மடம் ஸ்ரீ காசி மடம் என்ற திருப் பெய ரோடு இத்திருத்தலத்துக்கு அணி செய் கிறது. இதன் தலைவராக இப்போது எழுந் தருளியிருப்பவர்கள் ஒரு கோடி ரூபாய்க்கு இமயம் முதல் குமரிவரை அறக் கட்டளைகள் நிறுவி, திருமுறை வளர்ச்சி, கல்வி வளர்ச்சி, சமய வளர்ச்சி, சமுதாய வளர்ச்சி முதலிய வற்றைப் பெருக்கி வருபவர்களான ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருணந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள். சைவமும் தமிழும் வளர்க்கும் இத்திருமடம் இத்தலத்தில் இருப்பது இந் நகருக்குரிய தனிச் சிறப்பாகும்.

இத்தகு சிறப்புக்கள் பல உடைய இத் திருக்கோயிலைத் திருக் கயிலாய பரம்பரைத் தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் அருளாட்சி புரிந்து வருகின்றார்கள்.

பழமைச் சிறப்புடைய இத் திருக்கோயில் புத்தழகுடன் பொலிய வேண்டும், மந்திர அபிடேகங்களால் வையகத்தை வாழ்விக்க வும் வேண்டும் என்று கயிலைக் குருமணி அவர்கள் திருவுளம் கொண்டார்கள்.

இராஜ கோபுரம் செய்யப் பெற்றது. சுதையுருவங்கள் அழகுறப் புதிதாக அமைக் கப்பெற்றன. திருக்குளம் தூய்மை செய்யப் பெற்றது. பிறகோபுரங்கள் அழகுறுத்தப்பெற் றன. எல்லா மூர்த்தங்களுக்கும் உரிய கர்ப்ப கிருகம், விமானங்கள் புதுப்பிக்கப்பெற்றன. திருச்சுற்றுக்கள் தளவரிசை யிடப்பெற்றன. அருணஜடேசர் அருளால் திருக்கோயில் வருவாயிலிருந்தே சுமார் நான்கு லட்சம் ரூபாய்வரை செலவு செய்யப்பெற்று மூன் றாண்டுகளாகத் திருப்பணிகள் அனைத்தும் அழகுற முற்றுவிக்கப்பெற்றன.

திருப்பணி நிறைந்து (5—7—68) கீலக வருஷம் ஆனி மாதம் 22ஆம் நாள் வெள்ளிக் கிழமைக் காலை 9—30 மணி அளவில் மகா கும்பாபிஷேகம் நடைபெற விருக்கிறது. அன்பர்கள் அனைவரும் கண்டு களித்துத் திருவருள் பெறுவார்களாக. —சிங்காரவேலன்

ராஜகோபுரம் -- பதினாறு கால் மண்டபம்



# ஒவ்வொரு விவசாயிக்கும் பலனளிக்கும் திட்டம்



இது வெறும் கற்பனையல்ல: நாங்கள் இத்திட்டத்தை உண்மையிலேயே செயல்படுத்தி வருகிறோம்.
விவசாயத் தொழிலின் வளர்ச்சிக்கு கூட்டுறவு சங்கங்கள் தான் நேரிடையாக உதவுகின்றன. தரமுள்ள விதை, உரம், உழவுக் கருவிகள் முதலியன வாங்கக் கடனுதவி புரிவதுடன் விளைபொருள்களை விற்றுத் தரவும் விவசாயிக்கு அவை சேவை புரிகின்றன. ஆகவே, விவசாய முயற்சிகளின் ஒவ்வொரு கட்டத்திலும் பயன்படும் எங்கள் திட்டம் விவசாயிகள் பெருவாழ்வுபெற உதவுகிறது.

உழவரின் உற்ற நண்பன்

## சென்னை மாநில கூட்டுறவு வங்கி லிமிடெட்

271, அங்கப்ப நாயக்கன் தெரு, சென்னை -1



ஆர். கனகசபை
தலைவர்

டி. வர்த்தமானன்
செயலாளர்

HSCB 106

யுனைடெட் கமர்ஷியல் பாங்கியின் வெள்ளி விழா ஜூன் 27ந் தேதி வியாழக்கிழமையன்று சென்னை கிண்டி ரேஸ் கிளப் மைதானத்தில் மிகக் கோலாகலமாகக் கொண்டாடப்பட்டது. தொழில் துறையில் ஈடுபட்டுள்ள பலர் திரளாகக் குழுமியிருந்தனர். மாநில கவர்னர் ஸர்தார் உஜ்ஜல் சிங் தலைமை வகித்து யூகோ பாங்கியின் சேவையைப் பாராட்டிப் பேசினார். ஸ்தாபகர் திரு ஜி.டி. பிர்லா இந்தியத் தொழில் வளர்ச்சிக்குப் புரிந்துள்ள சேவையைக் குறிப்பாக அவர் மகிழ்ச்சியுடன் எடுத்துச் சொன்னார். யூகோவின் தற்போதைய உயர் தலைவர் திரு ஆர். பி. ஷா, யூகோ பாங்கியின்







வளர்ச்சியைப் பற்றிப் பேசுகையில், ஆரம்பித்த ஐந்தாண்டுகளுக்குள்ளாகவே இந்தியப் பாங்கிகளின் முதல் ஐந்தில் ஒன்று என்ற அளவுக்கு யூகோ பாங்கி வளர்ச்சி யுற்றதைக் குறிப்பிட்டார். தென்னிந்திய மானேஜர் திரு எம். கருணாகரன் யூகோ பாங்கிக்கு முப்பத்தேழு கிளை ஸ்தாபனங்கள் தென் பிராந்தியங்களில் நிறுவப்பட்டு, பாங்கித் துறையில் சேவை புரிந்து வருகின்றன என்பதைக் குறிப்பிட்டுப் பேசினார். முன்னாள் உயர் மானேஜரும் தற்போதைய டைரக்டருமான திரு எஸ். டி. ஸதாசிவன் எல்லோருக்கும் வந்தனோபசாரம் கூறினார்.




# ஓர் அன்பளிப்பு

## இந்தப் புத்தகத்தை நீங்கள் இலவசமாகப் பெறவேண்டுமா?

அழகான முறையில் பல சித்திரங்களுடனும் மூவர்ண மேலட்டையுடனும் தயாராகியுள்ள இந்தச் சிறுகதைத் தொகுப்பில் **ராஜாஜி, அமரர் கல்கி, அகிலன், கு. அழகிரிசாமி, வி. ராஜேந்திரன்** ஆகியோர் எழுதிய ஏழு அருமையான சிறுகதைகள் அடங்கியுள்ளன.

'**பொன்னியின் செல்வன்**' மீண்டும் தொடர்ந்து கல்கியில் பிரசுரமாகவிருக்கும் குதூகல நிகழ்ச்சியையொட்டி கல்கி நேயர்களுக்கு இந்தப் புத்தகத்தை அன்பளிப்பாகத் தர முடிவு செய்துள்ளோம்.

ஒரு நிபந்தனை. ஜூலை 15ந் தேதி முதல் ஆகஸ்டு 15ந் தேதி வரை உள்ள ஒரு மாத இடைக்காலத்துக்குள் நமது காரியாலயத்துக்குக் கல்கிக்கு ஓராண்டுச் சந்தாத் தொகை அனுப்பி வைப்பவர்களுக்கு மட்டுமே இந்தப் புத்தகம் இலவசமாக வழங்கப்படும்.

ஏற்கனவே நமது காரியாலயத்தில் கல்கிக்குச் சந்தாதாரர்களாகப் பதிவு செய்து கொண்டிருப்பவர்களும் இந்தப் புத்தகத்தை இலவசமாகப் பெற முடியும். அதற்கு அவர்கள் மேலே குறிப்பிட்டுள்ள காலத்துக்குள் (15—7—68 முதல் 15—8—68க்குள்) தங்கள் சந்தாவை ஒரு வருடத்துக்குப் புதுப்பித்துக் கொண்டால் போதும். அவர்களுடைய தற்போதைய சந்தா எந்தத் தேதியில் முடிகிறதோ, அதற்கு அடுத்த இதழிலிருந்து தொடங்கி மேலும் ஓராண்டுக்குப் புதுப்பிக்கப்படுவதுடன் '**பிரபல நட்சத்திரம்**' சிறுகதைத் தொகுப்பும் இலவசமாக அனுப்பப்படும்.

ஓர் ஆண்டுச் சந்தா ரூ. 20-ஐ மானேஜர், கல்கி காரியாலயம், சென்னை — 10 என்ற விலாசத்துக்கு நேரடியாக மேற்படி தேதிக்குள் தவறாது அனுப்ப வேண்டுகிறோம். சந்தாத் தொகை அனுப்பும் போது ''**கல்கி சந்தா புத்தக அன்பளிப்புத் திட்டம்**'' எனத் தவறாது குறிப்பிடவும்.





ஆயிரமாயிரம் உள்ளங்களைக் கொள்ளை கொண்ட

**அமரர் கல்கியின்**

மகோன்னதப் படைப்பு

# பொன்னியின் செல்வன்

**ஆகஸ்ட் 4ட கல்கி இதழில் ஆரம்பம்**

# விம்பிள்டன்

விம்பிள்டனில் புகழ்பெற்ற (முதல்) மைய அரங்கம்
ஆடுபவர் அமெரிக்க ஆட்டக்காரர் மக்கின்லி

இங்கிலாந்தில் 1877ம் ஆண்டில் பேருடனும் புகழுடனும் விளங்கி வந்த இங்கிலாந்து கிராக்கெட் கிளப் என்னும் சங்கம் போதுமான பண வசதி இல்லாத காரணத்தால் மூடப்படும் நிலையில் இருந்தது. விளையாடும் இடத்தைச் சுத்தப்படுத்தவும் சமப்படுத்தவும் உதவும் 'ரோட் ரோலர்' எஞ்சினைப் பழுது பார்க்கக்கூடப் பண வசதி இன்றிப் பரிதாபகரமான நிலையில் இருந்தது அச் சங்கம். சங்க உறுப்பினர்கள் எப்படியாவது நிதி திரட்டிச் சங்கத்தை முன்னேற்ற வேண்டும் என்று உறுதி கொண்டு அதற்கான வழிகளை ஆராய ஆரம்பித்த வேளையில் சங்க உறுப்பினர் ஒருவர் விம்பிள்டனில் — சங்கம் அமைந்த சிற்றூரின் பெயர் — ஒரு டென்னிஸ் போட்டிப் பந்தயத்தை நடத்தி அதன் மூலம் நிதி திரட்டலாம் என்றார். அவரது யோசனை சங்கத்தின் எல்லா உறுப்பினர்களாலும் ஏற்கப்பட்டு, உலகின் முதல் விம்பிள்டன் டென்னிஸ் பந்தயம் அவ்வாண்டில் நிகழ்த்தப்பட்டது.

விம்பிள்டன் மைதானத்தில் இன்று பதினேழு அரங்கங்கள் (Courts) உள்ளன. அவற்றுள் முக்கியமானது முதல் அரங்கம் என்று அழைக்கப்படும் மைய அரங்கமாகும். நூற்றி முப்பத்து நான்கு அடி நீளமும், எழுபத்திரண்டு அடி அகலமும் கொண்ட இவ்வரங்கம் கண்ணின் மணிகளைப் போல் பாதுகாக்கப்படுகிறது. ஆண்டில் பன்னிரண்டு நாட்களைத் தவிர மீதி எல்லா நாட்களிலும் இவ்வரங்கத்தை மட்டும் மிகத் தூய்மையாக வைத்திருக்கப் பன்னிரண்டு நபர்கள் அமர்த்தப்பட்டுள்ளனர்.

1877ம் ஆண்டில் முதல் விம்பிள்டன் பந்தயத்தைக் காணச் சுமார் நானூறு ரசிகர்களே ஆளுக்கு ஒரு ரூபாய்க் கட்டணம் செலுத்தி வந்தார்கள். ஆனால் இன்று பன்னிரண்டு நாட்களிலும் நடைபெறும் இப் பந்தயத்தைக் காணச் சுமார் இரண்டரை லட்சம் நபர்கள் வருகின்றனர்.

விம்பிள்டன் பந்தயங்களால் சங்கத்துக்குக் கிடைக்கும் லாபம் சுமார் எட்டு லட்சம் ரூபாய். ஆனால் இப் பந்தயத்துக்காக ஆகும் செலவுகள் ஏராளம். சான்றாக லட்சக் கணக்கான ரசிகர்கள் கூட்டத்தைக் கட்டுப்படுத்த 200 காவலர்கள், பந்தயங்களைக் கண்காணிக்கும் பணிக்கு 140 நடுவர்கள் (Umpires), பந்தயத்தில் டென்னிஸ் பந்துகளை அவ்வப்போது எடுத்துக் கொடுக்க 60 சிறுவர்கள், எல்லாவற்றுக்கும் மேலாகப் பந்தயத்தில் பயன்படுத்த 10,000 டென்னிஸ் பந்துகள் முதலிய சிலவற்றை இன்றியமை

யாத செலவுகளாகக் குறிப்பிடலாம்.

விம்பிள்டனில் நடைபெற்ற ஆயிரக்கணக்கான டென்னிஸ் போட்டிகளில் சில உலகப்பிரசித்திபெற்றவை. 1938ம் ஆண்டில் ஹெலன் வில்லிஸ் மூடி என்ற பெண்மணியும் ஹெலன் ஜேக்கப்ஸ் என்ற பெண்மணியும் விம்பிள்டன் கோப்பைக்காக ஐந்தாவது முறையாக மோதினர். இரண்டு ஹெலன்களுமே அமெரிக்கர்கள். அது மட்டுமல்ல. அவர்கள் இருவரும் சான் பிரான்ஸிஸ்கோ மாநிலத்தில் பிறந்தவர்கள்; ஒரே கல்லூரியில் படித்தவர்கள்; டென்னிஸ் விளையாட்டை இருவரும் ஒரே ஆசிரியரிடம் பயின்றவர்கள். இதற்கு முன் நான்கு முறை விம்பிள்டனின் புகழ் பெற்ற முதல் அரங்கத்தில் விளையாடியவர்கள். அவ்வாண்டில் ஹெலன் ஜேக்கப்ஸ் ஐந்தாவது முறையாக மூடியுடன் மோதிய போது மூடியின்பயங்கரமான பந்து வீச்சைச் சமாளிக்க இயலாமல் திணறிக் கீழே விழுந்தார். அவரது வலது காலில் இரத்தக் காயங்கள் ஏற்பட்ட போதிலும் அவர் விடாமுயற்சியுடன் ஆடினார். ஆனால் மூடி அவரின் தாக்குதல்களை அற்புதமாகச் சமாளித்து எட்டாவது முறையாக விம்பிள்டன் டென்னிஸ் பந்தயத்தில் வெற்றி பெற்று ஒரு புது சாதனையையே ஏற்படுத்தினார். இதுவரை ஹெலன்-மூடியின் இந்த இமாலயச் சாதனையை எவரும் முறியடிக்கவே யில்லை.



இருமுறை விம்பிள்டனில் வெற்றி பெற்ற நீக்ரோ பெண்மணி அதியா கிப்ஸன் தட்டுப் பரிசுடன் முத்தப் பரிசையும் பெறுகிறார்!

1959ம் ஆண்டில் அமெரிக்காவின் ஜேக் கிரிகரி என்ற ஆட்டக்காரர் விம்பிள்டன் பூமியில் ஒரு புரட்சியே ஏற்படுத்தினார். ஸ்பெயின் நாட்டின் பிரபல ஆட்டக்காரரான மிகல் லான் டாஜுவுடன் அவர் விளையாடிக் கொண்டிருக்கும்போது திடீரென்று ஆட்டத்தை நிறுத்திவிட்டு, அம்பயரிடம் சிறிதளவு பீர் தருமாறு கேட்டார். அம்பயர் இடித்த புளிபோல் பதில் பேசாமல் அமர்ந்திருக்கவே, அவர் ரசிகர்களை நோக்கித் தமது வேண்டுகோளை விடுத்தார். அவரது நிலையைக் கண்டு பரிதாபப்பட்ட ஒரு ரசிகர் ஒரு கோப்பை பீரை கிரிகரிக்கு அளித்தார். உடனே மேடையில் அமர்ந்திருந்த லட்சக்கணக்கான ரசிகர்கள் கரகோஷம் செய்தனர். ஆம்! விம்பிள்டன் பூமியில் பந்தயம் நடைபெறும் வேளையில் ஆட்டக்காரர் ஒருவருக்கு மதுபானம் அளிக்கப் பட்டது அதுவே முதல் தடவையாகும்!

விம்பிள்டனின் சரித்திரத்திலேயே மிக நீண்ட நேரம் நடைபெற்ற பந்தயம், 1953ம் ஆண்டில் பட்ஜ்போட்டி என்பவருக்கும் செக்கோஸ்லாவிய நாட்டைச் சேர்ந்த ஜரோஸ்லாவ் ட்ராப்னி என்பவருக்கும் நடைபெற்ற பந்தயமாகும். மொத்தம் ஐந்து ஆட்டங்களை அவர்கள் நான்கு மணி நேரம் பத்து நிமிடங்கள்வரை — அதாவது இரவு பத்து மணி வரை ஆடினார்கள்.

விம்பிள்டனில் ஆறும் ஜார்ஜ் மன்னர் கூட ஒரு முறை டென்னிஸ் விளையாடியிருக்கிறார். 1926ம் ஆண்டில் அவர் லூயி கிரிக் என்பவருடன் இணைந்து விளையாடிய போது பத்தே நிமிடங்களில் தோற்றார்.

பந்தயங்களில் வெற்றிகளும் தோல்விகளும் ஏற்படுவது சகஜம். ஆட்டக்காரர்கள் அவற்றை எப்படிக் கருத வேண்டும் என்பதற்கு அறிகுறியாகப் பந்தய பூமியின் வாயிலில் கீழ்க்காணும் அரிய வாசகங்கள் பொறிக்கப்பட்டுள்ளன.

" If you can meet with triumph and disaster
And treat those two impostors just the same.

—அ. இராமதுரை




# உணவுச் சத்து ஆராய்ச்சி

நம் நாட்டில் உணவைப் பற்றி யார் கவலைப்படுகிறார்கள்? நல்ல ஊட்டச் சத்துள்ள உணவைக் கொடுத்தால் பல நோய்கள் வராமல் தடுக்கலாம்.

நமது உணவையும் அதில் உள்ள சத்தையும் பற்றிய ஆராய்ச்சியில் ஈடுபட்டார் டாக்டர் குளத்தூர் கோபாலன். நாற்பத்தொன்பது வயதை எட்டும் அவர் சேலத்தில் பிறந்தார். வைத்தியக் கல்லூரியில் சேர்ந்து, கோபாலன் எம். டி.க்குப் படித்து 1945ல் அந்தப் பட்டத்தைப் பெற்றார். இங்கிலாந்தில் "நஃபீல்டு பௌண்டேஷன்" என்று, ஆராய்ச்சியில் ஈடுபட விரும்பும் மாணவர்களுக்கு உதவும் ஒரு கழகம் இருக்கிறது. அந்தக் கழகத்தினால் ஒருவர் தேர்ந்தெடுக்கப்பட்டால், பெறுதற்கரிய பேறு அவருக்குக் கிடைத்தாற் போல்தான். மிகவும் முன்னுக்கு வரக்கூடியவர் என்று உலகமே பாராட்டும். அப்படி அந்தக் கழகத்தினால் தேர்ந்தெடுக்கப்பட்ட முதல் இந்தியர் டாக்டர் கோபாலன். இந்த உபகாரச் சம்பளம் பெற்று, இங்கிலாந்து சென்று லண்டனில், வைத்திய ஆராய்ச்சிக் குழுவில் சேர்ந்து உணவுச் சத்து பற்றி ஆராய்ச்சி புரிந்து லண்டன் சர்வகலாசாலையின் டாக்டர் (பிஎச். டி.) பட்டம் 1949ல் பெற்றார். அங்கிருந்து இந்தியாவுக்குத் திரும்பியதும் தமிழ் நாட்டில் கூனூரில் உள்ள உணவுச் சத்து ஆராய்ச்சி சாலையில் டிபுடி டைரக்டராகச் சேர்ந்தார்.

நமது மக்கள் சரியான சத்துள்ள உணவை உட்கொள்ளாததால் என்னென்ன நோய்களுக்கு உள்ளாகிறார்கள் என்பதை ஆராய்வதில் ஈடுபட்டார். அதிலும் முக்கியமாக உணவில் புரதச் சத்துக் குறைவினாலும் 'ஏ' வைட்டமின் சத்துக் குறைவினாலும் நமது மக்களில் வெவ்வேறு பகுதியினர் எப்படி எப்படிப் பாதிக்கப்படுகின்றனர் என்பதை ஆராய்ந்தார். கால்களில் எரிச்சல் உணர்ச்சி ஏற்படுவதற்குக் காரணமும், அந்த நோய்க்குரிய அடையாளங்களும் கண்டுபிடித்தார். வைத்திய உலகில் அதனை கோபாலன்ஸ் ஸின்ட்ரோம் — (Gopelan's Syndrome) என்று குறிப்பிடுவார்கள்.

மனச் சோர்வும் வயிற்றுக் கோளாறும் சோளம் சாப்பிடுபவர்களிடம் சாதாரணமாகக் காணப்படும். இந்த நோய்க்குப் பெல்லாக்ரா (Pellagra) என்று பெயர். இந்த நோய்க்கு மூலகாரணம் எது, அதற்குத் தடுப்பு முறை என்ன, நோயைக் குணப்படுத்தும் முறை என்ன என்பதையெல்லாம் ஆராய்ந்திருக்கிறார். புரதச் சத்து குறைவினால் குவாஷியோர் கர் என்ற நோய் ஏற்படுகிறது. ஒரு வகை கடலை உண்பதால் கால் நீட்டவும் மடக்கவும் முடியாத நிலை ஏற்படுவதுண்டு. இதற்கு Lathyrism என்று பெயர். உணவில் உள்ள எந்த விஷம் எந்த உபாதையை உண்டாக்குகிறது என்று கண்டு, அதனை நீக்குவது எப்படி அல்லது மாற்று என்ன என்பனவெல்லாம் பற்றி ஆராய்ந்து தமது அரிய முடிவுகளை வெளியிட்டிருக்கிறார்.

வைட்டமின் 'ஏ' சத்து நமது உணவில் குறைவாக இருப்பதனால் பெண்களுக்கு இரத்தச் சோகையும் குழந்தைகளுக்குக் கண் பார்வை மந்தமும் ஏற்படுகின்றன என்பதைக் கண்டு, அதனைத் தடுக்கப் பரவலான முயற்சி மேற்கொண்டார்.

நாம் கடையில் வாங்கிச் சாப்பிடும் துவரம் பருப்பில் சாதாரணமாகக் கலப்படம் செய்யப்படுவது கேசரிப் பருப்பு. கேசரிப் பருப்புக்கும், துவரம் பருப்புக்கும் வித்தியாசமே தெரியாது. துவரம் பருப்பு நல்ல புரதச் சத்துள்ளது. ஆனால் கேசரிப் பருப்போ படுவிஷம்! அதில் உள்ள விஷச் சத்து ஆண்களுக்கு வாத நோயை உண்டாக்குகிறது என்று கண்டார் டாக்டர் கோபாலன். அது மட்டுமின்றித் தோல் உரித்த கேசரிப் பருப்பைக் கொதிக்கும் நீரில் இரண்டு மணி நேரம் வைத்திருந்து, நீரை வடித்தால் கேசரிப் பருப்பில் உள்ள அத்தனை விஷமும் வெளியேறி விடுகிறது என்பதையும் கண்டார்.

டாக்டர் கோபாலனின் முயற்சி காரணமாக கழகம், கூனூரிலிருந்து 1959ம் ஆண்டு ஹைதராபாத்துக்கு மாற்றப்பட்டது. டாக்டர் கோபாலனின் இடைவிடா முயற்சியாலும் ஊக்கத்தாலும் ஹைதராபாத் உணவுச் சத்து ஆராய்ச்சிக் கழகம் இன்று உலகப் புகழ் எய்திய ஆராய்ச்சி நிலையமாகி விட்டது. மிகப் பிரசித்திபெற்ற பிரிட்டிஷ் வைத்திய சஞ்சிகை, "ஆராய்ச்சி செய்வதென்றால், மேல்நாட்டுக்குப் போக வேண்டும் என்பது 'பாஷனா'கி விட்டது. அப்படிக் கின்றி யாராகிலும் கிழக்குத் திசையில் செல்ல வேண்டும் என்று விரும்பினால் உலகப் புகழ்பெற்ற ஆராய்ச்சி சாலைகளுக்குச் சமமான வைத்திய ஆராய்ச்சி சாதனங்கள் கொண்ட அற்புதமான ஆராய்ச்சி சாலை ஹைதராபாத்திலிருக்கிறது....!" என்று கூறியிருக்கிறது. ஆதாரம்: 'ஹிந்து'



# ஐயாயிரம் போன்வரும், மணி அலறுது!

- அதிகம் செலவாகும் அறுநூறு பக்கப் புத்தகம்.
- ஒரு வரி இனாம், அதற்குமேல் செலவு.
- நிற்கும் புத்தகத்தில் சுழலும் பக்கங்கள்.
- ஹலோ 197.

ஆறு மாதங்களுக்கு ஒரு முறை அறுநூறு பக்கங்களுடன் வெளியாகி, சென்னையில் மட்டும் எழுபதாயிரம் பிரதி செலவாகும் ஒரே நூல் எது?

அதுதான் டெலிபோன் டைரக்டரி.

இந்தப் புத்தகத்தைத் தயாரிக்க என்றே சுமார் முப்பது பேர் கொண்ட ஒரு பிரிவு இருக்கிறது. தனி ஆபீஸ். இவர்கள் அனைவருக்கும் முழு நேரம் வேலை சரியாக இருக்கிறது. ஒரு டைரக்டரி அச்சுக்குத் தயாராகி விட்டால் அச்சிடும் வேலையே இரண்டரை மாதம் போலப் பிடிக்கும். அச்சு வேலையோ, நச்சு வேலையோ, இராப் பகலாக வேலை வாங்கும். இதை முடித்ததும் எண் வரிசைப் படி ஒரு டைரக்டரி வெளியிடுகிறார்கள். இதற்கு ஒரு மாதம் பிடிக்கும். இதிலே பேர்கள் ஒன்றும் இராது. டெலிபோன் எண்களை வரிசைப்படி கொடுத்து, அவை மூல டைரக்டரியில் எந்தப் பக்கத்தில் உள்ளன என்ற விவரம் மட்டுமே இருக்கும். இது இலாகா ஊழியர் உதவிக்காகவே தயாராகிறது என்றாலும், பொதுமக்களுக்கும் விலைக்குக் (50 காசு) கிடைக்கும்.

ஒரு டெலிபோன் லைனுக்கு ஒரு வரி இனாமாக அச்சிட்டாலும், பெரிய எழுத்தில் அச்சிடவோ, அதிக விவரங்கள் வெளியிடவோ விரும்புவோரிடமிருந்து வரிக்கு ரூ. 4 வசூலிக்கப்படுகிறது. இதற்காக ஆயிரக் கணக்கான பேர்களுக்கு "பில்" அனுப்பும் வேலை வேறு இருக்கிறது.

ஒரு டெலிபோன் டைரக்டரி வெளிவந்து விட்டால், அடுத்த டைரக்டரி அச்சுக்குத் தயாராகும் வரை, ஓயாமல் திருத்தங்கள் வந்து கொண்டே யிருக்கும். சிலரது பெயரில் எழுத்து மாற்றம், முகவரி மாற்றம், எண் மாற்றம், புது விவரங்கள், எடுபட்ட எண்கள், புதிய எண்கள் — என்று மாறுதல்களைச் செய்து கொள்ள இரண்டு கைப் பிரதிகள் பெரிய அளவில் வைத்திருக்கிறார்கள். இவற்றுள் ஒன்று அச்சுக்கு அனுப்பப்படும்.

டெலிபோன் இடம் மாறினால், முகவரி மாறுதலை அவர்களே பார்த்துச் செய்துவிடுவார்கள். ஆனால், நாம் இருந்த இடத்திலேயே இருந்து, நகரசபை நம் வீட்டு எண்ணையோ தெருப் பெயரையோ மாற்றி விடுகிறது என்று வைத்துக் கொள்ளுங்கள். அப்போது நாம் தெரிவித்தால்தான் டைரக்டரியில் மாறுதல் செய்யப்படும்.

சாதாரணமாக ஆறு மாதங்களுக்கு ஒரு புது டைரக்டரி வெளிவரும். ஏதாவது புது எக்ஸ்சேஞ்சு திறப்பது போன்ற நிகழ்ச்சியால்

பலரது எண்கள் மாறும் போலிருந்தால் அந்த நிகழ்ச்சியை ஒட்டிப் புது டைரக்டரி வரும்படி பார்த்துக் கொள்கிறார்கள்.

நானூறு பக்கங்களுக்கு மேல் டைரக்டரி விவரங்கள் உள்ளன. வரி விளம்பரங்கள் போன்றவையும் சந்தாதாரருக்கான குறிப்பும் 172 பக்கங்கள். விளம்பரம் சேகரிக்கும் வேலையும் சரி, அச்சிடும் பணியும் சரி, நாலு இதழ்களுக்கு ஒருமுறை ''டெண்டர்'' கோரிக் குத்தகைக்கு விடப்படும்.

ஐம்பத்து ஆறாயிரம் சந்தாதாரர்களுக்கு எழுபதாயிரம் பிரதிகள் அச்சிடப்படுகின்றன. சிலருக்கு ஒன்றுக்கு மேற்பட்ட டெலிபோன்களோ, எக்ஸ்டென்ஷன்களோ இருப்பது ஒரு முக்கிய காரணம். தவிர, வெளியூர்க்காரர்கள் சென்னை நகர டைரக்டரியை விலைக்கு வாங்குகிறார்கள். போன வருஷம் வரை விலை இரண்டு ரூபாயாக இருந்தது. இந்த இதழ் முதல் நான்கு ரூபாய் ஆகிவிட்டது.

டைரக்டரியில் உள்ள பேர்களுக்கெல்லாம் போன் உண்டு. ஆனால் போன் வைத்துள்ளவர்கள் பெயரெல்லாம் இதில் இல்லை! சில தொழிலதிபர்களும், கலைஞர்களும், இரண்டொரு வழக்கறிஞர் போன்றோரும்கூட — தமது போன் எண்ணை இரகசியமாக வைத்திருக்கவே விரும்புகிறார்கள். இதற்குக் கட்டணம் இல்லை.

உங்கள் டெலிபோன் எண்ணைச் சொன்னால் நீங்கள் எந்தப் பேட்டைவாசி என்று சொல்லிவிடலாம். தொடக்கும் எண் என்ன? 8 என்றால் மவுண்ட் ரோடு, 4 என்றால் மாம்பலம், 7 என்றால் மயிலாப்பூர் எக்ஸ்சேஞ்சு பகுதிக்கு உட்பட்டவர் நீங்கள். இப்படி நகரிலே எட்டு பெரிய எக்ஸ்சேஞ்சுகளும், நகரச் சுற்றுப்புறத்திலே ஆறும் இருக்கின்றன.

உங்களுக்குப் பிடித்த எண் கொண்ட போன் வேண்டுமா? கிடைக்கும், தனிக் கட்டணம் ரூபாய் இருபது செலுத்தினால்.

ஃ ஃ ஃ

**பா**டுபட்டு வக்கணையாக டைரக்டரி தயாரித்தும், ''இன்னார் போன் எண் என்ன?'' என்று கேட்டுத் தினம் 5000 விசாரணைகள் வருகின்றன, 197 பகுதிக்கு. பொதுமக்களின் இந்த விசாரணைக்குப் பதில் சொல்ல என்றே டெலிபோன் நிலையத்தில் பதின்மூன்று போன்கள் இயங்குகின்றன. ஏழரை மணிக்கு ஒரு ஷிப்ட் வீதம் இரவு பகல் எல்லாம் இந்தப் பிரிவு வேலை செய்கிறது. பதின்மூன்று பெண்கள் எதிரும் புதிருமாக இரண்டு வரிசைகளில் அமர்ந்திருக்கிறார்கள். ஒவ்வொருவருக்கும் இரண்டு பக்கங்களிலும், முன்னே ஒன்றுமாக மூன்று சுழல் கம்பங்கள் உள்ளன. ஒரு சாண் அகலம், ஒரு முழ உயரம் கொண்ட இரும்புத் தகடுகளே பக்கங்களாக உள்ள சுழலும் புத்தகம் இந்தத் தூண்கள். ஒவ்வொரு பக்கத்திலும் உள்ள ஒவ்வொரு வரியும் அட்டையிலே டைப் அடித்த ஒரு விவரத் துணுக்கு. எந்த மாறுதலும் உடனுக்குடன் இதிலே செய்யப்பட்டுவிடும்.

''ஹலோ 197 ஆ?''

''என்க்கொயரி ஸ்பீகிங் ஸார்!''

முன் பக்கம்: 197 டயல் செய்தால் பதில் தரும் பெண்மணிகள்.

இங்கே: 'டெலிபோன் டைரக்டரி' தயாராகிறது.



''மதியழகன் நம்பர் என்ன?''

''வீட்டு எண்ணா, ஆபீஸ் எண்ணா ?''

''இரண்டும் கொடுங்களேன்.''

இடது பக்கத்தில் உள்ள சுழலும் புத்தகத்தைப் பார்த்து விடை சொல்லி முடித்ததும், மற்றொரு விசாரணை. கோபாலபுரம் அரிசிக் கிடங்கு எண் ஒருவருக்குத் தேவை. அப்படி ஓர் எண் இல்லை என்பது தெரிகிறது. ஓர் எண்ணைக் கொடுத்து, ''இங்கே கேளுங்கள், உதவுவார்கள்'' என்கிறாள் அப்பெண். அடுத்தவர் தபால் இலாகா எண் ஒன்றைக் கேட்கிறார்.

ஒரு நிமிஷத்துக்கும் குறைந்த காலத்தில் மூன்று விசாரணைகள்.

ஆயிரக்கணக்கில் போன் வந்துகொண்டே இருந்தும் இந்த அறையில் மணி அடிப்பதில்லை. போன் வந்ததற்கு அடையாளமாக மேஜை விளிம்பில் சிறு விளக்கு ஒளிகாட்டுகிறது. அவ்வளவே. சுவிட்சைத் தட்டிவிட்டு ''என்க்கொயரி ஸ்பீகிங் ஸார் !'' என்று தொடங்கி விடுகிறார்கள்.

ஃ ஃ ஃ

''பலரும் சோம்பல் பட்டுக் கொண்டு, டைரக்டரியை நன்கு பாராமலே எங்களுக்குப் போன் பண்ணி எண்ணைத் தெரிந்து கொள்கிறார்கள் போலிருக்கிறது'' என்னும் உதவி எஞ்ஜினீயர் திரு குப்புஸ்வாமி பொது மக்கள் சில அடிப்படைகளைத் தெரிந்து கொள்வது நல்லது என்று கருதுகிறார் :

விவரம் கேட்பவர் தாம் கேட்கும் விவரத்தை நன்கு குறிப்பிட வேண்டும். டைரக்டரியில் உள்ள விவரங்களைத்தான் நாங்கள் வகைப்படுத்தி வைத்திருக்கிறோம். நண்பர் ஒருவர் வீட்டில் டெலிபோனைப் பார்த்திருக்கிறீர்கள். ஆனால் எண் தெரியாது. எண் என்ன என்று எங்களைக் கேட்கிறீர்கள். உங்கள் நண்பர் பெயரைத் தேடிப் பார்த்துவிட்டு, ''அப்படி ஒன்றும் போன் கிடையாது'' என்று நாங்கள் சொல்லி விடுவோம். ''இருக்கிறதே !'' என்று நீங்கள் அடித்துப் பேசுவீர்கள். கடைசியில் பார்த்தால், போன் அவரது மனைவி பெயரிலோ ஆபீஸ் பெயரிலோ இருப்பது தெரிய வரும். குறைந்தபட்சம் முழு முகவரியையாவது கொடுங்கள். சிறிது நேரத்தில், அருகே உள்ள ரிகார்டைப் பார்த்து விவரம் சொல்லி விடுவோம். எண் வரிசைப்படியும், தெரு வரிசைப்படியும் இந்த விவரங்கள் சட்டென்று பார்த்துச் சொல்வதற்கு வசதியாக வைக்கப்பட்டுள்ளன.

197 டயல் செய்தால் பதின்மூன்று பேரிலே யாராவது பதில் சொல்லியிருப்பார். அடுத்த முறை அழைத்தால் மற்றும் ஒருவருக்குப் போன் போகலாம். ''அப்பொழுது அப்படிச் சொன்னாயே, இப்பொழுது இப்படிச் சொல்கிறாயே !'' என்று அலுத்துக் கொள்ளாதீர்கள்.

குறைவாகப் பேசுங்கள், தெளிவாகப் பேசுங்கள்.

— தம்பி சிவாசன்

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

# இரட்டை மனிதன்



அமெரிக்க ஒற்றர் டான் ஸ்லேட்டர் மகன் ஆஸ்திரியாவில் ஆல்ப்ஸ் மலைச் சிகரத்தில் பனிச் சறுக்கில் மரணமடைந்துவிட்டான் என்ற செய்தி கிடைக்கிறது. தன் அருமை மகனின் மரணம் விபத்தினாலா அல்லது கொலை செய்யப்பட்டானா என்று அறிந்துகொள்ள ஆல்ப்ஸ் மலைச் சிகரத்திலும், பனிச்சறுக்குப் பள்ளியிலும் சுற்றி ஆராய்கிறார் டான் ஸ்லேட்டர். அதற்குள் இந்த ஒற்றரை இரட்டையாக்கி, உண்மை ஒற்றரைப் பிடித்து, போலி ஒற்றரை உலவ விட நினைக்கிறார்கள் எதிரி உளவுப் படையினர்.

'இரட்டை மனிதன்' படம் ஆஸ்திரியாவிலும், ஆல்ப்ஸ் மலையிலும் எடுக்கப்பட்டிருக்கிறது. அமெரிக்க ஒற்றர் டான் ஸ்லேட்டராக யுல் பிரைன்னர் வந்து இயற்கையாகவும், உளவுக் கலையில் தேர்ந்தவராகவும் நடித்துப் படத்துக்கு உயிரூட்டுகிறார். அவரது நடையும் மொட்டைத் தலையும் பிரசித்தமானதாயிற்றே!

இந்தப் படத்தில் ஆல்ப்ஸ் மலைச் சிகரங்களையும், பனிமலைகளையும் சறுக்கு விளையாட்டையும் அழகாகப் படமாக்கியிருக்கிறார்கள். ஒளி, ஒலிப்பதிவு தரமாயிருக்கின்றன.

டான் ஸ்லேட்டரின் மகனுடன் பனிச் சறுக்கில் கலந்து கொண்ட பெண்ணை ஜினாவாக வரும் பிரிட் எக்லண்ட் உணர்ச்சிகளை அள்ளித் தருகிறார். கதை ஓட்டத்துக்கு முக்கிய பாத்திரமாகத் திகழ்கிறார். 'இரட்டை மனிதன்' கடைசிவரையில் அலுக்கவில்லை. பார்க்க வேண்டிய படங்களில் ஒன்று.



# மகாபாரதம்

## ராஜாஜி

### 38. நான் கொக்கல்ல!

பாண்டவர்கள் வனத்தில் வசித்த காலத்தில் ஒரு நாள் மார்க்கண்டேயர் வந்திருந்த சமயத்தில் தருமபுத்திரன் ஸ்திரீகளின் குணங்களை மிகவும் புகழ்ந்து பேசினான்.

''ஸ்திரீயின் பொறுமையையும் கற்பையும் விட வேறு என்ன வியப்பு உலகத்தில் இருக்கிறது? கர்ப்பத்தை வயிற்றில் பத்து மாத காலம் காத்துத் தன் உயிருக்கே சந்தேகம் உண்டாகும் ஆபத்தையும், சொல்லுக்கு அடங்காத வேதனையையும் சகித்து ஸ்திரீயானவள் குழந்தையைப் பெறுகிறாள். அந்தக் குழந்தையை மிக்க அன்புடன் வளர்த்து இவன் எத்தகையவன் ஆவானோ என்று கவலைப்படுகிறாள். கொடிய கணவனை அடைந்த மனைவி பல துன்பங்களுக்கு ஆளாக்கப் பட்டாலும் எல்லாவற்றையும் பொறுத்துக் கொண்டு அவனிடம் பக்தியாகவே இருப்பதைப் பார்க்கிறோம். இது எவ்வளவு அற்புதமான விஷயம்!'' என்றான்.

இதைக் கேட்ட மார்க்கண்டேயர், ஒரு புண்ணிய கதையைச் சொல்லலானார்.

மிக்க நியமத்துடன் பிரம்மச்சரிய விரதம் காத்த பிராமணன் ஒருவன் இருந்தான். அவன் பெயர் கௌசிகன். ஒரு நாள் மரத்தடியில் உட்கார்ந்து கொண்டு வேதம் ஓதிக் கொண்டிருந்தான். அப்போது மரத்தின் மேலிருந்த பறவையின் எச்சம் அவன் தலையில் விழுந்தது. மரக்கிளை ஒன்றில் ஒரு கொக்கு இருப்பதைப் பார்த்து அது தான் எச்சம் இட்டதென்று பிராமணனுக்கு அதன் பேரில் கோபம் உண்டாயிற்று. அவனுடைய பார்வை பறவையின் பேரில் பட்டதும் அது செத்துக் கீழே விழுந்தது. உயிரற்றுப் பூமியில் கிடந்த கொக்கைப் பார்த்ததும் பிராமணனுக்குத் துயரம் மேலிட்டது.

மனத்தில் எழும் எண்ணங்கள் நிகழ்ச்சிகளாக வடிவம் கொள்ளுவதற்குப் பல புறக் காரணங்களும் சேர வேண்டும். அவை வந்து சேராத காரணத்தால் அல்லவோ பல தீமைகளிலிருந்து தப்புகிறோம்? எண்ணிய எண்ணங்கள் எல்லாம் எண்ணியவாறு உடனே ஆகிவிடுவதாக இருந்தால் உலகத்தின் கொடுமைகளைப் பொறுக்க முடியாமல் போகும்.

''கோபத்தால் நான் எண்ணிய எண்ணம் இந்த வேலையைச் செய்துவிட்டதே! ஒரு பாபமும் அறியாத பறவையைக் கொன்று விட்டேனே!'' என்று கௌசிகன் துயரப்பட்டான். பிறகு வழக்கம்போல் பிக்ஷை எடுக்கச் சென்றான்.

ஒரு வீட்டின் வாயிலில் பிக்ஷைக்காக நின்றான். அப்போது அந்த வீட்டுக்காரனுடைய மனைவி உள்ளே பாத்திரங்கள் சுத்தம் செய்து கொண்டிருந்தாள். தன் வேலையை முடித்துவிட்டுத் தன்னைக் கவனிப்பாள் என்று கௌசிகன் காத்துக் கொண்டிருந்தான். அப்போது அந்த ஸ்திரீயின் கணவன் வெளியில் போயிருந்தவன் வீட்டுக்குத் திரும்பி வந்தான். வந்தவுடனே உள்ளே நுழைந்து, ''பசியாக இருக்கிறது'' என்றான். அதைக் கேட்ட மனைவி பிக்ஷைக்காக வெளியில் காத்திருந்த பிராமணனைக் கவனியாமல் ஜலம் கொண்டு வந்து புருஷனுடைய கால்களைச் சுத்தம் செய்து ஆசனம் அமைத்து அவனுக்கு ஆகாரம் கொண்டு வந்து வைத்து உபசரித்தாள்.

வாயிலில் பிராமணன் காத்துக் கொண்டேயிருந்தான். புருஷன் சாப்பிட்டு முடிந்த பின் காத்திருந்த கௌசிகனுக்குப் பிக்ஷை எடுத்துக் கொண்டு வந்தாள். ''தங்களை வெகு நேரம் காக்க வைத்தேன். மன்னிக்க வேண்டும்'' என்று சொன்னாள்.

கோபத்தினால் நெருப்பைப் போல் ஜொலித்துக் கொண்டிருந்த கௌசிகன், ''அம்மா! பல வீடுகளுக்குப் போக

வேண்டியவனை இவ்வாறு அலட்சியம் பண்ணிக் காக்க வைத்தாய். இது தகாது!'' என்றான்.

பிராமணனைப் பார்த்து ஸ்திரீயானவள், ''பிராமணோத்தமரே! பொறுத்துக்கொள்ள வேண்டும். என் புருஷனுக்குப் பணிவிடை செய்து கொண்டிருந்தேன்; அதனால் நேரமாகி விட்டது'' என்றாள்.

''புருஷனைக் கவனிப்பது தருமமே! ஆனால் பிராமணர்களை அவமதிக்கக் கூடாது. நீ கர்வம் கொண்டவளாக இருக்கிறாய்'' என்றான்.

''கோபிக்காதீர்! புருஷனைக் கவனித்துக் கொண்டிருந்த ஸ்திரீயின்பேரில் நீர் பொறுமையை இழக்கலாகாது. நான் கொக்கல்ல! கணவனுக்குப் பணிவிடை செய்வதில் ஈடுபட்டிருக்கும் ஸ்திரீயை உம்முடைய கோபம் ஒன்றும் செய்ய இயலாது'' என்றாள்.

பிராமணனுக்குத் தூக்கிவாரிப் போட்டது. ''கொக்கைப் பற்றி இவளுக்கு எப்படித் தெரிந்தது?'' என்று வியந்தான்.

ஸ்திரீ இன்னும் சொல்லலானாள்: ''பெரியவரே! உமக்குத் தருமத்தின் ரகசியம் தெரியவில்லை. மனிதனுக்குக் கோபம் சரீரத்துக்குள்ளேயே இருக்கும் பெரும் பகையாகும். அதை நீர் அறியவில்லை. என் குற்றத்தை மன்னித்து நீர் மிதிலைக்குச் சென்று அவ்விடம் இருக்கும் தருமவியாதரிடம் உபதேசம் பெறுவீராக!'' என்றாள்.

பிராமணன் ஆச்சரியமடைந்தான். ''அம்மணி! உனக்கு மங்களம்! நீ என்னை நிந்திப்பது நன்மையென்றே கருதுகிறேன். நீ எல்லாப் பாக்கியமும் அடைவாயாக!'' என்று சொல்லி மிதிலைக்குச் சென்றான்.

கௌசிகன் மிதிலைக்குச் சென்று தருமவியாதர் எவ்விடம் இருக்கிறார் என்று விசாரித்துத் தேடினான்.

தனக்குத் தருமத்தை உபதேசிக்கத் தக்கவராகச் சொல்லப்பட்ட பெரியவர் ஏதோ ஒரு தனித்த ஆசிரமத்தில் இருப்பார் என்று நினைத்துத் தேடிப் போன பிராமணன் பல அழகிய வீடுகளும் தோட்டங்களும் தாண்டிய பிறகு ஒரு



கசாப்புக் கடையில் ஒருவன் இறைச்சி விற்றுக் கொண்டிருப்பதைப் பார்த்தான். அவனை ''இவர்தான் தருமவியாதர்'' என்று ஜனங்கள் காட்டினார்கள்.

பிராமணனுக்கு ஒன்றும் விளங்கவில்லை. தூரத்தில் வெறுப்புடன் நின்றான். கசாப்புக் கடைக்காரன் பரபரப்பாக எழுந்து பிராமணனிடம் வந்து, ''பகவானே! உமக்குச் சுபம்! அந்த மகா பதிவிரதையான பிராமண ஸ்திரீ உங்களை என்னிடம் அனுப்பினாளா?'' என்று கேட்டான்.

பிராமணன் பிரமித்துப் போனான்.

''சுவாமி! நீர் வந்த காரியம் எனக்குத் தெரியும். வாரும்!'' என்று கசாப்புக்கடைக்காரன் பிராமணனைத் தன் வீட்டுக்கு அழைத்துச் சென்றான். அவ்விடம் அவன் தன் தாய் தந்தையர்களுக்குப் பக்தியுடன் பணிவிடை செய்வதைக் கண்டான். பிறகு கௌசிகன் அந்த மாமிசம் விற்பவனால் மனித வாழ்க்கையைப் பற்றியும் தொழிலைப் பற்றியும் கடமையைப் பற்றியும் உபதேசம் பெற்றான். பிறகு தன் ஊருக்குத் திரும்பிச் சென்று, அதுவரையில் சரியாகக் கவனிக்கப்படாத தன் பெற்றோர்களுக்குப் பணிவிடை செய்யத் தொடங்கினான்.

தரும வியாதர் கதையே கீதையின் உபதேசமும். எல்லாப் பொருள்களிலும் ஈசன் இருப்பதால் எந்தத் தொழிலும் அவன் தொழிலே. சமுதாய அமைப்பினாலோ விசேஷ சந்தர்ப்பத்தின் காரணமாகவோ அல்லது தன் முயற்சியின் பயனாகவோ மனிதனுக்குத் தொழில்கள் ஏற்படுகின்றன. எந்தத் தொழிலையும் தருமம் தவறாமல் சரிவரச் செய்து வந்தால் அதுவே பகவானை உபாசித்தபடியாகும். கசாப்புக் கடை வேலையும் இதில் சேருமென்று இந்தப் பிரசித்தமான கதையை மார்க்கண்டேய ரிஷி சொல்லி தருமபுத்திரன் கேட்டதாக மகாபாரதத்தில் வேத வியாசர் அற்புதமாய்ச் சேர்த்திருக்கிறார்.

## 39. துஷ்டர்களுக்குத் திருப்தி ஏது?

**வ**ன வாசத்திலிருந்த பாண்டவர்களைப் பார்த்துவிட்டுத் திரும்பி வந்த ஒரு பிராமணன் ஹஸ்தினாபுரத்தில் அரண்மனைக்குச் சென்று திருதராஷ்டிரன் செய்த மரியாதைகளைப் பெற்றுக் கொண்டு பாண்டவர்கள் இருந்த நிலைமையைப் பற்றி அரசனுக்குச் சொன்னான். காற்றிலும் வெய்யிலிலும் வருத்தப்பட்டுக் கொண்டிருந்த ராஜகுமாரர்களைப் பற்றிப் பிராமணன் சொன்னதைக் கேட்ட திருதராஷ்டிரன் இந்த அனர்த்தம் எந்த விதமாக முடியுமோ என்று கவலைப்பட்டான்.

யுதிஷ்டிரனுடைய கட்டளைக்கு அடங்கி, பீமன் எவ்வளவு காலம் தன் கோபத்தைத் தடுத்துக் கொள்வான்? என்றைக்காவது ஒரு நாள் பாண்டவர்களுடைய கோபம் கரை உடைந்து பிரவாகமாகப் புரண்டோடும் என்பது திருதராஷ்டிரனுடைய பயம்.

''அருச்சுனனும் பீமனும் நம்மை நிச்சயமாகத் தண்டிப்பார்கள். சகுனியும், கர்ணனும், துரியோதனனும் மந்த புத்தியுள்ள துச்சாதனனும் கொம்புத் தேனுக்காக மரத்து நுனியில் ஏறிவிட்டு அங்கே தொங்குகிறார்கள். கீழே பீமனுடைய கோபம் என்கிற படுகுழி அவர்களுடைய நாசத்துக்காக வாய் திறந்து காத்திருப்பது அவர்களுக்குத் தெரியவில்லையே!'' என்று அரசன் ஏங்கினான்.

''ஐயோ! என்ன காரணத்தினால் பேராசைக்கு உள்ளானோம்? நமக்கு ஒரு குறையும் இல்லாதிருக்க ஏன் இவ்வாறு செய்தோம்? எதற்காக அநீதியில் இறங்கினோம்? இருக்கும் பொருளை நல்ல வழியில் செலவு செய்து சுகமாக இருக்காமல் துராசைப் பட்டோம். நாம் செய்த பாவம் தன் பயனைத் தராமல் போகாது. தனஞ்சயன் இந்திர லோகம் சென்று திவ்யாஸ்திரங்களைப் பெற்றுத் திரும்பி வந்திருக்கிறான். சரீரத்தோடு சுவர்க்கம் சென்ற அருச்சுனன் திரும்பி வந்திருக்கிறான். எங்கள் பேரில் பழி வாங்க வேண்டும் என்றல்லவோ இவ்வாறு செய்திருக்கிறான்? இல்லாவிடில் எந்த மனிதன் இந்திர லோகம் அடைந்தும் அதை விட்டு விட்டுத் திரும்புவான்?'' என்று இவ்வாறெல்லாம் எண்ணி எண்ணித் திருதராஷ்டிரன் சிந்தனையில் ஆழ்ந்தான்.

திருதராஷ்டிரன் இவ்வாறு கவலைப்பட்டான். ஆனால் சகுனியும் கர்ணனும் துரியோதனனும் கவலைப்படவில்லை. அவர்கள் போக்கே வேறாக இருந்தது. நல்ல அதிர்ஷ்டம் அடைந்தோம் என்று அவர்கள் ஒருவரை ஒருவர் உத்ஸாகப் படுத்திக் கொண்டு மகிழ்ந்தனர்.

''யுதிஷ்டிரனிடத்தில் ஜொலித்துக் கொண்டிருந்த ராஜ்யலட்சுமி எங்களிடம் வந்து விட்டது. இனி பொறாமையால் நாம் வாடி வதங்க வேண்டியதில்லை. இதற்கெல்லாம் உன்னுடைய கூர்மையான புத்தியே காரணம்'' என்று கர்ணனும் சகுனியும் துரியோதனனுக்குச் சொன்னார்கள்.

இதைக் கேட்ட துரியோதனன், ''கர்ணா! நீ சொல்கிறதெல்லாம் உண்மையே. ஆனால் பாண்டவர்கள் கஷ்டப்படுவதை என் கண்ணால் பார்க்க வேண்டும்! நம்முடைய சந்தோஷத்தை

யும் அவர்கள் பார்க்க வேண்டும்! பகைவர்களுடைய கஷ்டத்தை நாம் கண்ணுல் நேரில் பார்த்தாலல்லவோ நம்முடைய மகிழ்ச்சி பூர்த்தியடையும். இதற்கு என்ன செய்யலாம்? வனத்துக்குப் போய்ப் பாண்டவர்களைக் காண வேண்டும். ஆனுல், தகப்பனுர் இதற்கு அனுமதி தர மாட்டாரே'' என்று சொல்லி வருத்தப்பட்டான்.

''நம்மை விடப் பாண்டவர்கள் தவ வலிமை பெற்றிருப்பதாக எண்ணி அவர்களைக் கண்டு அரசர் பயப்படுகிருர். வனம் சென்று பாண்டவர்களைச் சந்தித்தால் ஏதோ ஆபத்து நேரிடும் என்று எண்ணி அனுமதி தரமாட்டேன் என்கிருர். திரௌபதியும், பீமனும், அருச்சுனனும் ஆரணியத்தில் கஷ்டப்படுவதைப் பார்க்காமல் இருந்தால் இவ்வளவு செய்தும் என்ன பிரயோசனம்? வெறுமனே இவ்விடம் ராஜ்ய பாரம் பெற்றுச் சுகமாக இருப்பதில் நான் திருப்தி யடையவில்லை. வனத்துக்குப் போய்ப் பாண்டவர்களைப் பார்க்க, திருதராஷ்டிரனுடைய அனுமதியைப் பெற நீயும் சகுனியும் எப்படியாவது ஒரு வழி தேட வேண்டும்!'' என்று துரியோதனன் கர்ணனை வேண்டிக்கொண்டான்.

மறுநாள் காலை கர்ணன் வெகு சீக்கிரமாக எழுந்து துரியோதனனிடம் வந்தான். கர்ணனுடைய முகத்தில் சந்தோஷக் குறியைக் கொண்டு துரியோதனன் என்னவென்று விசாரித்தான்.

''உபாயம் கண்டேன். துவைத வனத்தில் நம்முடைய இடைச்சேரிகள் இருக்கின்றன. அந்தப் பசுக் கூட்டங்களை வருஷத்துக்கொரு முறை எண்ணிக் கணக்கெடுத்து இடையர்களையும் விசாரித்து வரவேண்டியது நம்முடைய கடமை. புராதனமாக இவ்வாறு நடைபெற்று வருகிறது. அதை வியாசமாக வைத்துக் கொண்டு அரசர் அனுமதியைப் பெறலாம்'' என்று கர்ணன் சொன்னதும் துரியோதனனுக்கும் சகுனிக்கும் அளவற்ற சந்தோஷம் உண்டாயிற்று.

''நல்ல உபாயம்! நல்ல உபாயம்!'' என்று ஒருவர்க்கொருவர் கைகொடுத்துச் சிரித்து மகிழ்ந்தார்கள்.

இடையர்களின் தலைவனுக்குச் சொல்லி அனுப்பி அவனிடமும் பேசி முடித்தார்கள்.

''பசுக்கள் தயாராக இருக்கின்றன. வனத்தில் அழகிய இடத்தில் எல்லா ஏற்பாடுகளும் செய்திருக்கிறேம். ராஜகுமாரர்கள் வந்து கால்நடைகளின் வயது, நிறம், ஜாதி, பெயர் இவைகளைப் பார்த்து வழக்கம்போல் கணக்கெடுத்துக் குறித்துக் கொண்டு கன்றுகளுக்கு அடையாளமுமிட்டு வனத்தில் வேட்டையாடிப் பசு யாத்திரை முடித்துக்கொண்டு நகரம் திரும்பலாம்'' என இடையர்களின் தலைவன் திருதராஷ்டிரனிடம் விண்ணப்பம் செய்தான். ராஜகுமாரர்களும் இதற்கு அனுமதி தரவேண்டும் என்று தகப்பனை வற்புறுத்தினுர்கள்.

திருதராஷ்டிரன் ஒப்பவில்லை. ''ராஜகுமாரர்களுக்கு வேட்டையாடுவது நல்லதுதான். பசுக்களைப் பரிசிலனை செய்வதும் நல்லதே. ஆனுல் இந்த வனத்தில் பாண்டவர்கள் இருப்பதாகக் கேள்விப்பட்டேன். அவ்விடம் நீங்கள் செல்வது சரியில்லை. கோபத்துக்குக் காரணம் இருக்கும் காலத்தில் அந்த பீமார்ஜுனரிடம் உங்களை அனுப்ப நான் சம்மதிக்க மாட்டேன்'' என்ருன்.

''அவர்கள் இருக்குமிடம் நாங்கள் போக மாட்டோம். மிகவும் ஜாக்கிரதையாக இருப்போம்'' என்ருன் துரியோதனன்.

''நீங்கள் எவ்வளவு ஜாக்கிரதையாக இருந்தாலும் அபாயம் உண்டாகும். வனவாசத்திஞல் வருத்தம் அடைந்திருக்கும் பாண்டவர்கள் இருக்கும் இடத்துக்கு நீங்கள் போவது சரியல்ல. உங்கள் பரிவாரத்தில் யாராவது ஒரு போர்வீரன் பாண்டவர்கள் இருக்கும் இடம் சென்று அறிவீனத்தால் மரியாதைக் குறைவாக நடந்து கொள்வான். அதனின்று பெரும் கலகம் நேரிடும். வேறு யாராவது உங்களுக்காகப் போய்ப் பசுக்களை எண்ணிக் காரியத்தை முடித்து விட்டு வரலாம்'' என்ருன் அரசன்.

சகுனி, ''அரசனே! யுதிஷ்டிரன் தருமத்தை அறிந்தவன். சபையில் பிரதிக்ஞை செய்திருக்கிருன். பாண்டவர்கள் அனைவரும் அவனுடைய கட்டுப்பாட்டுக்கு அடங்கி நிற்பார்கள். நம்மிடம் குந்தி புத்திரர்கள் கோபத்தைக் காட்ட மாட்டார்கள். வேட்டையில் பிரியமுள்ள துரியோதனனைத் தடுக்க வேண்டாம். வழக்கம் போல் பசுக்களைப் பரிசிலனை செய்து வரட்டும். நானும் போய்க் கூடப் பார்த்துக் கொள்கிறேன். வனத்தில் பாண்டவர்கள் இருக்கும் இடத்துக்கு நாங்கள் யாரும் போக மாட்டோம்'' என்று வாக்குறுதி செய்து அனுமதி கொடுக்கும்படி கேட்டுக் கொண்டான்.

''சரி, இஷ்டப்படி செய்யுங்கள்!'' என்ருன் அரசன்.

துவேஷம் கொண்ட உள்ளத்துக்குத் திருப்தி என்பது கிடையாது. எரியும் தீயைப் போல் விறகு போடப் போட இன்னும் பெரிதாக எரிந்து, ''போதாது, போதாது'' என்று இரை கேட்டுக் கொண்டே இருக்கும். **(தொடரும்)**




அமெரிக்காவின் தென்கிழக்குப் பகுதியில் ஃப்ளாரிடா மாகாணம் ஒரு தீபகர்ப்பமாக அமைந்துள்ளது. ''சூரியப் பிரகாச மாகாணம்'' என்று இதற்கு இன்னொரு பெயர். கார்களில் உள்ள எண் பலகைகளில் கூட ஃப்ளாரிடா எனக் குறிப்பிடாமல் ''ஸன் ஷைன் ஸ்டேட்'' என்றே எழுதுவார்கள்!

சூரிய ஒளியில் குளிப்பாட்டப்பட்டுத் தகதகக்கும் இந்த மாகாணத்தில் கோக்கோ பீச் ஒரு சிறு நகரம். ஒருநாள் மாலை இந்நகருக்குப் போய்ச் சேர்ந்தேன். ஹோட்டல் அறையில் பெட்டியைப் போட்டுவிட்டு வெளியே கிளம்பிக் காலார நடந்தேன்.

நகரையொட்டி இருந்த நெடுஞ்சாலையில் கார்கள் ''விர்ர்'' ''விர்ர்'' என்று வினாடிக்கொன்றாக விரைந்துகொண்டிருந்தன. ஆனால் அதிலிருந்து பிரிந்து குடியிருப்புக்கள் உள்ள பகுதியில் நடந்தால் ஒரே அமைதி. இரண்டு குட்டைப் பனைமரங்களுக்கிடையில் புகுந்து நடந்தேன். கடற்கரையோரம் சில வினாடிகளுக்குள் வந்துவிட்டேன். அங்கு கூட்டமில்லை. அடக்கமான அலைகள் மணற் பரப்பினைத் தழுவியும் பிரிந்தும் வேடிக்கை செய்து விளையாடின. அலை முன்னேறும்போது தத்தித் தத்திக் கால் நனையாமல் இப்பால் விரைந்தது நீண்ட மூக்கை உடைய ஒரு பறவை. அலை பின்னேறும்போது அதைத் துரத்துவதுபோல் ஓடியது. மணலில் அலைக்கரம் கொண்டு வந்து படைத்த சிறு உயிரினங்களை இயந்திர கதியில் 'டக்டக்' கென்று தலையை நீட்டி நீட்டிக் கொத்திக்கொண்டே சென்றது அப்பறவை. மறுபடியும் முன்னேறும் அலையைக் கண்டு பரபரப்புடன் பின்வாங்கியது. சவுக்கு மரங்களினூடே காற்றுப் புகுந்து ''உய்'' ''உய்'' என்ற ஓசை எழுப்பியது. இலேசாக வியர்வை கசிந்திருந்த என் கழுத்தில் கடற் காற்று ஜில்லென்று பனி போல் படர்ந்து குறுகுறுப்பு ஏற்படுத்தியது.

இது முதல் நாள் மாலை.

மறுநாள் காலை நான் கோக்கோ பீச்சுக்கு மிக அருகில் உள்ள கேப் கென்னடி ராக்கெட் தளத்துக்குக் காரில் சென்று கொண்டிருந்தேன். காரை ஓட்டிச் சென்ற நண்பர் கேப் கென்னடியை அடைந்த பிறகும் சுற்றிச் சுற்றி வந்துகொண்டிருந்தார், காரை நிறுத்தாமல்.




''என்ன தேடுகிறீர்கள்?''

''தெரியவில்லை? காரை நிறுத்த ஓரிடத்தைத்தான் தேடுகிறேன். நாங்கள் — அமெரிக்கர் — ரொம்பக் கெட்டிக்காரர்கள்! சந்திர



மண்டலத்தை எப்படியாவது எட்டிப் பிடித்து விடுவோம்; ஆனால் கார் நிறுத்த இடமில்லாத பிரச்னையைத் தீர்க்கத்தான் எங்களால் முடியாது!''

நாலு தடவை சுற்றிச் சுற்றி வந்து கடைசியாக யாரோ ஒருவர் தமது காரை எடுத்துக் கொண்டு கிளம்ப, அந்த இடத்தில், சென்றவனை வாழ்த்தியபடியே இந்தக் காரை நிறுத்தினார் நண்பர்.

காரை விட்டு இறங்கி ராக்கெட் உருவாக்கப்படும் கட்டிடத்தை அண்ணாந்து பார்த்தேன். கழுத்து வலித்தது! ''நியூயார்க்கில் சுதந்திர தேவியின் சிலை உள்ளதே, அதைவிடப் பலமடங்கு உயரமானது இது! 525 அடி உயரம்! உள்புறம் கன பரிமாணம் 129 மிலியன் கன அடி!''

''அப்படியா?''

''என்ன அப்படியா என்று இலேசாகச் சொல்லிவிட்டீர்கள்! மாடி மேல் மாடியாக இராமல் ராக்கெட்டை உருவாக்கவென்று இத்தனை உயரமான ஒரே அறையாக இந்தக் கட்டிடம் அமைந்திருப்பதால் இதனுள் பகுதியில் மேகங்களே உருவாகிவிடும்! மின்னல் பளிச்சிடும்! மழை கொட்டும்!''

''எல்லாம் கட்டிடத்துக்குள்ளேயா?''

''ஆமாம்! அவ்விதம் நேராமலிருக்கப் பொறி இயல் நிபுணர்கள் உள்ளிருக்கும் காற்றை வெளியேற்றுகிற பிரும்மாண்டமான 'எக்ஸ்ஹாஸ்ட்' விசிறிகளை இதனுள் நிறுவிச் சுழல விட்டிருக்கிறார்கள்! இப்படி உள்ளே சதா காற்றோட்டம் இருந்து கொண்டே இருப்பதால்தான் இங்கு பணியாற்றுவோர் மழையில் நனைவதில்லை!''

நண்பர் கட்டிடத்தைச் சுற்றிக் காட்டியபடியே மேலே மேலே வியத்தகு விஷயங்களைக் கூறிக் கொண்டே போனார்.

அப்போது அங்கே தயாராகிக் கொண்டிருந்த ராக்கெட்டின் உயரம் 364 அடி! அந்த ராக்கெட்டின் கனத்தைத் தாங்க வேண்டும் என்பதற்காக அந்தக் கட்டிடத்தின் தரையை எட்டடி கனத்துக்குக் காங்கிரீட்டில் போட்டிருந்தார்கள். ராக்கெட் கிளம்பி உயரே செல்லும் வரை அதன் அருகே உயரமான தூண் போன்ற ஓர் அமைப்பு இருக்கும். ராக்கெட் எந்த மேடையிலிருந்து கிளம்பி உயரே செல்கிறதோ அதற்கு 'லாஞ்சர்' என்று பெயர். இந்த லாஞ்சரையும் இந்தக் கட்டடத்துக்குள்ளேயே உருவாக்குகிறார்கள். லாஞ்சரும் ராக்கெட்டுமாகச் சேர்ந்து 12 மிலியன் பவுண்ட் எடை!

இத்தனை எடையையும் - லாஞ்சரையும் ராக்கெட்டையும் — அவற்றை உருவாக்கி முடித்த பிறகு அப்படியே தூக்கி, கட்டிடத்தை விட்டு வெளியே கொண்டு போய், கடற்கரை ஓரமாக ஆறு தூண்களின் மேல் பொருந்தி அமருகிற மாதிரி வைக்க வேண்டும். அப்படி வைக்கும் போது குறித்த இடத்திலிருந்து கால் அங்குலத்துக்கு மேல் இப்பால் அப்பால் பிசகக் கூடாது. ராக்கெட் எத்தனை பெரிது என்பதை மனத்தில் கொண்டு பார்க்கும்போது கால் அங்குலம் பிசகாமல் அதனை வைப்பது எவ்வளவு கடினமான காரியம் என்பது புலனாகும். அது மட்டுமா? கட்டிடத்தை விட்டு வெளியே கொண்டு வரும்போது ராக்கெட் ஆடாமல்



இடது பக்கம்: கேப் கென்னடியில் ராக்கெட் உருவாகும் கட்டிடத்தின் உள்ளே ஒரு தோற்றம்.

ராக்கெட்டின் ஒரு பகுதியைச் சரியானபடி பொருத்த உயரே தூக்குகிறார்கள்.

கட்டிடத்தை விட்டு ராக்கெட்டும் லாஞ்சரும் கிளம்பிவிட்டன.

இந்தப் பக்கம்: விண்வெளி நோக்கி அனலைக் கக்கியபடி புறப்படுகிறது ராக்கெட்.

525 அடி உயரக் கட்டிடத்திலிருந்து விசேஷமாக அமைக்கப்பட்ட பாதையி ராக்கெட்டைச் சுமந்து செல்கிறது டிரான்ஸ போர்ட்டர். இச்சுமையுடன் இது 5·5 கிலோமீட்டர் செல்ல ஒன்பது மணி நேரமாகும்!



அசையாமல், சாயாமல் பார்த்துக்கொள்ள வேண்டும்! இந்த அசுர சாதனையை வெற்றிகரமாகச் செய்து முடிப்பது 'டிரான்ஸ்போர்ட்டர்'. இதற்கு புல்டோஸரில் நாம் பார்ப்பது போன்று, சக்கரங்களைச் சுற்றிச் சங்கிலி பெல்ட் உண்டு. டிரான்ஸ்போர்ட்டருடைய இந்தப் பெல்டின் ஒவ்வொரு தனித் துண்டும் ஒரு டன் எடையுள்ளது என்றால் டிரான்ஸ்போர்ட்டர் எவ்வளவு பிரம்மாண்டமானது என ஊகிக்கலாம்! ராக்கெட்டை டிரான்ஸ்போர்ட்டர் சாய்க்காமல் கொண்டு போகலாம். ஆனால் பாதையிலேயே ஏற்றத் தாழ்வு இருக்கிறதே! இதைச் சமாளிக்கும் விதமாக டிரான்ஸ்போர்ட்டரை அமைத்திருக்கிறார்கள். ராக்கெட்டைத் தூக்கிக் கொண்டு இது நகரும்போது பாதை உயரே சென்றாலும், தாழ்ந்து இறங்கினாலும் டிரான்ஸ்போர்ட்டரின் மேல் தளம் அதற்கேற்ப அசைந்து கொடுத்து ராக்கெட்டைச் செங்குத்தாகவே நிற்க வைத்துக் கொள்கிறது. ராக்கெட் உயரே கிளம்பிச் சென்ற பிறகு டிரான்ஸ்போர்ட்டர் லாஞ்சரை மட்டும் சுமந்து கொண்டு கட்டிடத்துக்குத் திரும்புகிறது!

''ராக்கெட்டை இந்தக் கட்டிடத்தில் உருவாக்கிய பிறகு இத்தனை கஷ்டப்பட்டு அங்கு கொண்டு போவானேன்? ராக்கெட் எந்த இடத்திலிருந்து உயரே கிளம்பப் போகிறதோ அந்த இடத்திலேயே ராக்கெட்டை உருவாக்கிவிடலாமே?'' என்றேன் நான்.

''அப்படித்தான் சிறிது காலம் முன்னர் வரை செய்து வந்தார்கள். ஆனால் நாளாக ஆக, சந்திரனை அடையும் நாள் அருகில் நெருங்க நெருங்க, ராக்கெட் விஞ்ஞானத்தில் எத்தனையோ புதுப் புது நுணுக்கங்கள் தோன்றுகின்றன. சந்திரனுக்கு ஒரு ராக்கெட்டை அனுப்புவது என்பது என்னவென்கிறீர்கள்? பல நூறு மைல்களுக்கு அப்பால் உள்ள ஓர் ஊசி முனையைக் குறி பிசகாமல் துப்பாக்கிக் குண்டால் சுடுவதற்குச் சமானமாகும்! இத்தனை அரிய சாதனையைச் செய்ய ராக்கெட்டில் எத்தனை நுணுக்கமான கருவிகளைப் பொருத்த வேண்டியிருக்கும்? ராக்கெட்டைக் கட்டி முடியும்வரை அக்கருவிகள் மழையினாலும் வெய்யிலினாலும் பாதிக்கப்படலாம் அல்லவா? அதனால்தான் இந்தக் கட்டிடத்தை எழுப்பினார்கள். அதோடு டிரான்ஸ்போர்ட்டரையும் அது சுமந்து வரும் ராக்கெட்டையும் (8250 டன்) தாங்குமளவுக்கு இந்தச் சாலையையும் சமைத்தார்கள்.''

''சந்திர மண்டலத்துக்கு அனுப்பப்படும் முதல் மனிதன் அமெரிக்கனாக இருக்க வேண்டும் என்ற பேராவல் காரணமாக அமெரிக்க அரசாங்கம் கோடானு கோடி டாலர்களைச் செலவழிக்கிறதே! இதனால் நாட்டின் பொருளாதாரம் எந்த அளவுக்கு எப்படிப் பாதிக்கப்படுகிறது?'' என்று கேட்டேன்.

''இந்த விஷயத்தில் அமெரிக்க அரசாங்கம் மிகவும் எச்சரிக்கையாகச் செயல்படுகிறது. நாஸா எனப்படும் ஸ்தாபனம்தான் விண்வெளி சம்பந்தப்பட்ட எல்லா முயற்சிகளையும் நிர்வகிக்கிறது என்றாலும் இதோ இந்த ராக்கெட்டின் அமைப்பிலே மொத்தம் பதினாறு தனியார் ஸ்தாபனங்கள் பங்கு பெறுகின்றன. ஒவ்வொரு ஸ்தாபனமும் ராக்கெட் தயாரிப்பின் ஒவ்வொரு அம்சத்தைக் கவனித்துக் கொள்கிறது. அது மட்டுமின்றி இந்தப் பதினாறு பெரிய ஸ்தாபனங்களும் எல்லா வேலைகளையும் தாங்களே முடித்துவிடாமல் — அதற்குரிய சக்தி அவர்களுக்கு இருப்பினும் கூட — வேலைகளை மற்ற சிறு கம்பெனிகளுடன் பகிர்ந்துகொள்ள வேண்டும் என்ற நிர்ப்பந்தம் இருக்கிறது. இந்த விதமாகச் செலவாகும் கோடானு கோடி டாலர்களும் பரவலாகப் பலர் கைகளுக்குப் போய்ச் சேருகிற மாதிரி அரசாங்கம் கவனித்துக் கொள்ளுகிறது.''

பேசியபடியே நடந்து ஓர் அறைக்கு வந்து சேர்ந்தோம். கண்ணாடிச் சுவருக்கு அப்பால் கண்ட்ரோல் அறை தெரிந்தது. அங்கு விண்வெளி நிபுணர்கள், விஞ்ஞானிகள் பலர் அமர்வதற்கான ஆசனங்கள் போடப்பட்டிருந்தன. எதிரே டெலிவிஷன்கள் பலப்பல இருந்தன.

''முன்பெல்லாம் ராக்கெட்டுகளை அனுப்பும்போது நேருக்கு நேர் அந்த நெருப்பைப் பார்த்தால் கண்கள் கெட்டுப் போகும் என்பதால் நிலைக்கண்ணாடியில் பார்ப்பார்கள். வெளிவரும் நெருப்பின் நிறத்தைக் கொண்டு எரிபொருளில் இன்னும் கொஞ்சம் பிராணவாயு சேர வேண்டும் அல்லது குறைய வேண்டும் என்று விஞ்ஞானிகள் தீர்மானித்து உடனுக்குடன் நடவடிக்கை எடுப்பார்கள். ஆனால் இன்றைய தினம் சரியான அளவுக்கு எரிபொருளைக் கணக்கிட்டு ராக்கெட்டைக் கிளப்பி உயரே அனுப்பும் வேலையை கம்ப்யூட்டர்கள் கன கச்சிதமாகச் செய்து விடுகின்றன. விஞ்ஞானிகள் இந்த நாற்காலியில் அமர்ந்து கலர் டெலிவிஷனில் ராக்கெட் கிளம்புவதைக் கண்காணிக்கிறார்கள்.''

இதையெல்லாம் கேட்டுத் தெரிந்து கொண்டு ராக்கெட் தளத்துக்குப் பக்கத்தில் உள்ள ஒரு கண்காட்சிசாலைக்கு வந்து சேர்ந்தேன். அங்கு இதுவரை விண்வெளி விஞ்ஞானத் துறையில் அமெரிக்கா அடைந்துள்ள முன்னேற்றங்கள் என்னென்ன; அடுத்தாற்போல் அவர்கள் மேற்கொள்ளப் போகிற திட்டங்கள் என்னென்ன; மனிதன் எந்த விதமாகச் சந்திர மண்டலத்தில் போய் இறங்குவான் என்பனவற்றையெல்லாம் மிக விவரமாகப் படங்கள், பொம்மைகள், திரைப் படங்கள் ஆகியவற்றின் உதவியுடன் விளக்குகிறார்கள்.

டாக்டர் ராதாகிருஷ்ணன் உள்பட உலகப் பெருந் தலைவர்கள் கேப் கென்னடிக்கு விஜயம் செய்த புகைப்படங்கள் அங்கு வைக்கப்பட்டிருந்தன.

நாஸா ஸ்தாபனம் ராக்கெட்டுகளை அனுப்பி விண்வெளி ஆராய்ச்சிக்கு அமைதியான முறையில் பணியாற்றுகிறது. ஆனால் வேறு பல ராக்கெட்டுகளும் உள்ளன அமெரிக்காவில். இவை ராணுவம், விமானப் படை, கடற்படை ஆகியவற்றைச் சேர்ந்தவை. இந்த ராக்கெட்டுகள் இயக்கிச் செல்ல யாரும் இல்லாமலேயே குறித்த இலக்கு நோக்கிப் பறந்து சென்று தாக்குவன. நீர்மூழ்கிக்கப்பலிலிருந்து கூட இன்று ராக்கெட்டுகள் புறப்பட்டுப் போய் எதிரி இலக்கைத் தாக்கக் கூடும்!

சிக்காகோவிலிருந்து சில மைல் தொலைவில் காரில் நண்பர் ஒருவருடன் பிரயாணம்

செய்து கொண்டிருந்தபோது, ''கைடட் மிஸைல்ஸ்'' என்று கேள்விப்பட்டிருப்பீர்களே? இது அத்தகைய ஒரு கேந்திர ஸ்தானம் தான்'' என்றார் அவர்.

அவர் சுட்டிக் காட்டிய இடத்தில் முள் கம்பி வேலியும், காவல் நிலையமும் தவிர வெறும் புல் பூண்டும் புதர்களும்தான் இருந்தன. ''என்ன இது? ராக்கெட்டுகள் எங்கே?'' என்று கேட்டேன்.

''அவையெல்லாம் பூமிக்கு அடியில் இருக்கின்றன. எதிரியின் தானியங்கு கணை அமெரிக்காவை நெருங்குகிறது என்று தெரிந்தால் போதும். அடுத்த வினாடி இங்கு பூமி பல இடங்களில் வாயைப் பிளக்கும்! உள்ளேயிருந்து தானியங்கு ஏவு கணைகள் கிளம்பி எதிர்க் கணைகளைத் தாக்கி அழிக்க விரையும்!''

கேப் கென்னடியின் அருகில் பல ஏக்கர் விஸ்தீரணத்துக்கு விமானப் படையின் ராக்கெட் பொருட் காட்சி இருக்கிறது. படிப்படியாக ராக்கெட் அடைந்துள்ள வளர்ச்சி, ஏவு கணைகள் அடைந்துள்ள முன்னேற்றம் இவற்றை இந்தப் பொருட் காட்சியில் காரில் இருந்தவாறே சுற்றி வந்து காண முடிந்தது. பலரகப்பட்ட ராக்கெட்டுகளும் ஏவு கணைகளும் அவற்றின் முழு சொரூபத்தைக் காட்டிக் கொண்டு நின்றன.

'வி-2' என்ற உலகின் முதல் ராக்கெட்டை ஹிட்லரின் ஆட்சியில் ஜெர்மனி உருவாக்கி விண்ணில் ஏவியது, 1945ம் ஆண்டில். அடுத்த இருபத்திரண்டு ஆண்டுகளுக்குள் ராக்கெட் விஞ்ஞானம் அடைந்துள்ள மகத்தான முன்னேற்றம் பிரமிக்க வைப்பதாகும்.

அன்று மாலை கேப் கென்னடியை விட்டுக் கிளம்பி இரவு விமானமொன்றில் மியாமி நகர் நோக்கிச் சென்று கொண்டிருக்கையில் இலேசாகக் கண்ணயர்ந்து விட்டேன். அரை குறைத் தூக்கத்தினூடே மெல்லலைகள் தவழும் கோக்கோ கடற் கரையும் அதில் அந்த அலைகள் தன் காலில் பட்டுவிடாமல் தத்தித் தத்தி இரை தேடிய பறவையும் தென்பட்டன. கூடவே பேரிரைச்சலுடன் நெருப்பைக் கக்கிக் கொண்டு ஒரு ராக்கெட் புறப்பட்டது. திடுக்கிட்டுக் கண் விழித்தேன். ஏதோ ஒரு குழப்பம் மனத்தில். அது இன்று வரை நீங்கவில்லை. உள்ளத்தின் ஓர் ஓரத்தில் நீடிக்கிறது.

# பிரவீண்குமார் கிரிக்கெட்





குண்டுமணி

''நம்ம இந்திய கிரிக்கெட் கோஷ்டிக்கு 'பாஸ்ட் பௌலர்'கள் இல்லே. 'பிரவீண் குமாரை பாஸ்ட் பௌலராகப் பயிற்சியளித்தால் என்ன?' என்கிறார் பழம் கிரிக்கெட் கோச் ராம் சிங். தட்டு வீச்சு, குண்டு வீச்சில் ஆசிய சாம்பியனான பிரவீண் குமார் கிரிக்கெட் மைதானத்தினுள் நுழைந்தால்?

**இதோ வதந்தி நிருபர் சேகரித்த சில அபிப்பிராயங்கள்:**

''பிரவீண்குமார் ஆஜானுபாகுவாகக் கிரிக்கெட் மைதானத்தில் நுழைந்தாலே எதிர் கோஷ்டியினர் அலறியடித்து விக்கெட்டைக் கோட்டை விட்டுடுவாங்க. நம்முடைய கிரிக்கெட்டுக்கு அவர் அவசியம் தேவைதான்!''

''மேற்கிந்திய கிரிக்கெட் கோஷ்டியில் ஹால் பயமுறுத்திப் பந்து வீசி எல்லோரையும் கதிகலங்க அடிக்கவில்லேயா? அதுமாதிரி பிரவீண்குமாரும் இந்திய கோஷ்டிக்கு உதவுவார்!'' —இப்படிச் சில கிரிக்கெட் ரசிகர்கள் கூறினர்.

ஆனால் பிரவீண்குமார் என்ன சொன்னார் தெரியுமா?

''இது என்ன? இரண்டு விக்கட்டுகளுக்கிடையில் தூரம் ரொம்பக் குறைச்சலாச்சே! நான் குண்டு வீச்சிலே எவ்வளவு தூரம் வீசியிருக்கேன். தூரத்தை அதிகப்படுத்துங்க!

''என்ன ஸார் இது: பந்து, கடுக்காய் மாதிரி! நான் பெரிய இரும்புக் குண்டுகளெல்லாம் வீசிப் பழக்கப்பட்டவன்! பந்து புட்பால் அளவாவது மாத்துங்க!''

**விளையாட்டுச் சாதனங்களை விற்கும் கடைக்காரர்:**

''என்ன ஸார் இது! பிரவீண்குமாரை கிரிக்கெட் ஆட வைத்திருக்கிறாங்களே! அவர் கைக்கு நம்ம மட்டையெல்லாம் பொருந்துமா? விசேஷமாக அவருக்கென்று விதிமுறைகளை மாற்றி இரும்பிலே பிரும்மாண்டமான மட்டை தயாரித்துக் கொடுக்க வேண்டியதுதான்!''

**கிரிக்கெட் மைதானத்தில் மார்க்கர்:**

''அவர் ஆடுவதற்கும் பவுண்டரி எல்லை காணாது! மைதானத்தையும் பெரிதுபடுத்த வேணுமே!''

**மற்ற கிரிக்கெட் ஆட்டக்காரர்கள்:**

''நாங்க பிரவீண் குமார் பக்கம் நின்று படம் எடுத்துக் கொண்டால் அவர்தான் முழுப் படத்தையும் அடைத்துக் கொள்வார். நாங்க இருக்கிற இடமே தெரியாது!''

**கிரிக்கெட் ரேடியோ விமர்சகர்:**

''நம் இந்திய கிரிக்கெட்டில் ஏற்படும் மாறுதல்களைக் கண்டு உலகமே அதிசயிக்கும். புட்பால் அளவு பந்தும், அகன்று விரிந்த மைதானமும், பிரவீண் குமாரின் கிரிக்கெட்டுக்குத் தேவைப்படலாம். ஆட்டம் 'டல்' அடிக்கும்போதெல்லாம் 'கிரிக்கெட் மைதானத்தில் நவீன பீமன்' என்று பிரவீண் குமாரின் பெருமையைப் பேச ஆரம்பித்தால் ரேடியோவில் விமர்சனத்தைக் கேட்பவர்களுக்கு அலுக்காது!''

## கஜுப் பெண்கள்

மலைநாட்டின் தலைநகரான கண்டிக்குப் போகும் வழியிலே 'பசியால' என்ற இடம் பசியைப் போக்கும் இடமாகவும் விளங்குகிறது. அனைவரையும் கவரும் தனி மகத்துவம் பெற்ற இடம் இது.

சாலையின் இரு புறங்களிலும் அழகிய இளம் பெண்கள் அணியணியாகச் சிறு கடைகள் அமைத்துக்கொண்டு இலங்கையின் புகழ்பெற்ற செவ்விளநீரும் கஜு" (முந்திரிப் பருப்பு)வும் வைத்துக்கொண்டு வியாபாரம் செய்கிறார்கள்.

அழகு மிகுந்த இம்மங்கையர்கள் சீவிக் கொடுக்கும் இளநீரை வாங்கிக் குடிக்க எப்பொழுதும் இங்கு கூட்டம் நிறைந்திருக்கும். இலங்கை வரும் வெளிநாட்டுப் பிரமுகர்களின் கவனத்தை இந்தப் பெண்கள் கவர்ந்திழுக்கிறார்கள். **-கே. வி. எஸ். மோகன்**





# ரெட்டியார் வருகிறார்!

**குரோம்பேட்டை வட்டாரத்தில் ரெட்டியார் வருகிறார் என்றால் அன்றையத் தபால் வந்துவிட்டது என்று அர்த்தம்!**

குரோம்பேட்டை தபால் தந்தி அலுவலகக் கட்டடத்தின் பின்புற ஜன்னலுக்கு அருகில் காலை ஒன்பதரை மணி அளவுக்குச் சுமார் இருபது உள்ளூர்வாசிகள் முகத்தைக் கடுமையாக வைத்துக் கொண்டு மௌனமாக நின்று கொண்டிருக்கின்றனர். ஜன்னலுக்கு உட்புறம் அந்த விசாலமான அறையில் ஒரு பெஞ்சியில் உட்கார்ந்து அன்றைய தினம் வந்துள்ள கடிதங்களை அடுக்கிக் கொண்டிருக்கிறார் தபால்காரர் திரு ராமாநுஜம் ரெட்டி. மலையாகக் குவிந்திருக்கும் அந்தக் கடிதங்களை ஒவ்வொன்றாக அடுக்கிக் கொண்டிருக்கும் பொழுதும் அவர் முகத்தில் ஒரு வெறுப்போ சிடுசிடுப்போ தென்படுவதில்லை. தபால் ஆபீஸுக்கு வந்து பெற்றுக் கொள்ளக் காத்திருக்கும் இருபது நபர்களுக்குக் கூடிய சீக்கிரம் தபால்களைப் பட்டுவாடா செய்துவிட வேண்டும் என்ற கடமை உணர்ச்சியுடன் அவர் பணி புரிகிறார்.

''என்ன சார், பண்ணறது... அவங்களுக்கு வீட்டுலே பன்னிரண்டு மணி சுமாருக்குத்தான் கடிதம் கிடைக்கும். அதனாலே அவஅவங்க ஆபீஸ் போவதற்கு முன்பே கடிதங்களை வாங்கிக் கொண்டால் அன்றே பதில் எழுதிடலாம் பாருங்க....'' என்கிறார் இருபது வருட காலமாகத் தபால்காரர் பதவி வகித்துவரும் 'ரெட்டியார்'. அந்த வட்டாரத்து மக்கள் அவரை அன்புடன் இப்படி அழைக்கிறார்கள்.

''கடிதங்களை விநியோகம் செய்ய அவ்வளவு நேரமா ஆகும்?''

''ஆமாம்.... இங்கெல்லாம் சிப்பந்திகள் மிகவும் குறைவு. ஒனார்க்குதான் தபால்களைப் பிரிக்கவேண்டும். தவிர, தபால்காரர்களும் ஒரு பகுதிக்கு இரண்டு மூன்று பேர்கள் என்று கிடையாது. ஒரே ஆள்தான் சுமார் அறுநூறு வீடுகளுக்குன்னு பார்த்துக்குறுங்களேன்.''

''பட்டினத்தில் இந்தமாதிரி கிடையாதே?''

''கிடையாதுதான்... இங்கேயும் பொது ஜனங்கள் எழுதிப் போட்டாங்கன்னு ஒருநாளைக்கு மூன்று 'டெலிவரி' கிடைக்கிற மாதிரி ஏற்பாடு பண்ணுவாங்க. ஆனா யாருமே எழுதிப் போட முன்வர மாட்டேங்கிறாங்களே....!'' என்று வருத்தத்துடன் கூறுபவர் பிறகு தொடருகிறார் :

''நாற்பத்தியெட்டாம் வருடம் நான் இந்த வேலைக்கு வந்தேன். ஆரம்ப காலத்திலே அடிக்கடி என்னை மாத்திக்கிட்டே இருந்தாங்க. பழவேற்காடு, சத்தியவேடு, சோழவரம், ரெட்ஹில்ஸ், பாலூர்... இப்படிப் பல ஊர்களிலே வேலை பார்த்தேன். ஐம்பத்தொன்றில் என்னை நிரந்தரமாக்கினார்கள். ஐம்பத்தி ஒன்பதில் இந்த ஊருக்கு வந்தேன். இனிமேல் மாத்தல் உத்தியோக உயர்விலேதான்...''

''உங்களுக்கு அலுவலக நேரம் எப்போது?'

'' காலை ஏழரை மணியிலிருந்து மாலை நாலரை மணி வரை. இடைவெளி நேரம் என்று தனியாகக் கிடையாது. முதல் டெலிவரிக்கும் இரண்டாவது டெலிவரிக்குமிடையே கிடைக்கும் சிறிது நேரத்தில் வீட்டிலிருந்து வரும் சாப்பாட்டை உண்பேன்.

''சுமார் அறுநூறு வீடுகள் என் பொறுப்பில் உள்ளன. என்னுடைய காலனி சுமார் பத்து மைல் விஸ்தீரணம் இருக்கும். சில நாட்களில் சைக்கிளிலும் சில நாட்களில் நடந்துமாகச் சென்று கடிதங்களை விநியோகம் செய்வது வழக்கம்....''

நாகலாபுரத்தைச் சொந்த ஊராகவும், தெலுங்கைத் தாய் மொழியாகவும் கொண்டுள்ள ரெட்டியார் தாம்பரத்தில் சொந்தமாக ஒரு வீடு கட்டியிருந்தாலும், பல்லாவரத்தில் வாடகை வீட்டில்தான் குடியிருக்கிறார். காரணம், தாம்

பரத்தில் இருந்தால் நகர வாடகை அலவன்ஸ் கிடைக்காது என்பதே ஆகும்.

''எங்களுக்கு வருஷத்துக்கு ஒரு ஜதை உடைகளும், ஒரு ஜதை காலணியும் இலவசமாகக் கொடுக்கப்படுகின்றன. தவிர இரண்டு வருஷங்களுக்கு ஒருமுறை ஒரு குடையும் கொடுக்கிறார்கள். இது வெய்யில், மழை காலத்தில் மிகவும் சௌகரியமாக இருக்கு..'' என்று கூறியவரிடம், ''உங்களுக்கு மாத வருமானம் என்ன? அது உங்களுக்குப் போதுமானதாக உள்ளதா?'' என்ற வழக்கமான கேள்வியைக் கேட்டேன்.

''எனக்கு மொத்தம் இருநூற்றுப் பத்து ரூபாய் கிடைக்கிறது. ஆறு குழந்தைகள்.... எப்படிப் போதும் இந்தக் காலத்தில்? சர்க்கரையே மாசத்துக்கு எட்டு கிலோ வரை தேவைப்படுகிறது. நான் பால் வியாபாரம் செய்துக்கிட்டு வரேன். அதனாலே ரொம்ப கஷ்டமில்லாம சமாளிச்சுக்கிட்டு வரேன்...!''

''மருத்துவ வசதி....?''

''உண்டு என்றுதான் பெயர். நான் இது வரையில் அந்த வம்புக்கே போனது கிடையாது. காரணம், இலவச மருத்துவ வசதி பெறக் குறிப்பிட்ட ஒரு டாக்டரிடம்தான் போக வேண்டும். குறிப்பிட்ட ஒரு மருந்துக் கடையில்தான் மருந்து வாங்க வேண்டும். இப்போ உதாரணமா என் குடும்பத்திலே யாருக்காவது உடம்புக்கு வந்துடுத்துன்னு அவங்களே அழைச்சிக்கிட்டுப் பரங்கிமலையில் உள்ள ஒரு டாக்டரிடம் போக வேண்டும். அவர் சொல்கிற மருந்தை வாங்கத் தேனாம்பேட்டை சூபர் மார்க்கெட்டுக்கு ஓட வேண்டும்.... எப்படி....?''

''ரயில்வேயில் பணிபுரிபவர்களுக்குப் பிரயாணம் செய்ய பாஸ் கிடைப்பது போல் தபாலாபீஸில் பணி புரிபவர்களுக்கு இலவசமாக ஏதாகிலும் கிடைக்குமோ?''

''அதுதான் கிடையாது. வேண்டுமானால் ஒரு மாதத்துக்கு இருபத்தைந்து பைசாவுக்குரிய கார்டு, கவர் வாங்கிக் கொள்ளலாம்.''

''உங்களுக்கென்று தனி யூனியன் உண்டா?''

''உண்டு. ஒவ்வொரு பகுதியின் கீழ் வரும் தபாலாபீஸ்களுக்கு ஒரு யூனியன் இருக்கும். என் பகுதி யூனியனுக்கு நான்தான் உதவித் தலைவர். நான் எடுத்துக்கொண்ட பெரும் முயற்சியால்தான் இப்போ ஒவ்வொரு மாதமும் எங்கள் துணிகள் துவைப்பதற்கு ஒரு ரூபாய் அலவன்ஸ் கிடைக்கிறது.''

''இந்தத் தபால்காரர் தொழிலே நீங்க ஏன் தேர்ந்தெடுத்தீங்க?''

''நானா தேர்ந்தெடுத்தேன்?.... ஏதோ மளிகைக் கடையிலும் ஜவுளிக் கடையிலும் வேலை செஞ்சுக்கிட்டிருந்த என்னை என் தகப்பனார்தான் இந்தத் துறையில் தள்ளி விட்டாரு.... ஏதோ சர்விஸ் ஆயிடுச்சே.... இன்னும் கொஞ்சம்தான் என்கிறதினாலே, காலம் தள்ளிக்கிட்டு வரேனே தவிர இந்தத் தொழிலில் எனக்கு விருப்பம் கிடையாது..!''

''ஏன் அப்படி.....?''

''இது என்ன 'பேஜாரு' வேலைங்க.... சம்பளமும் ரொம்பக் குறைவு.... பொது மக்களுக்குச் சேவை செய்கிறோம் என்ற ஒன்றைத் தவிர இதிலே வேறே என்னங்க இருக்கு? நான் வேலையை விட்டு விலகற சமயத்திலே கிடைக்கிற பணத்திலே டாக்ஸி ஓட்டணும்னு திட்டம் போட்டிருக்கிறேன். எப்படி நடக்குதோ....?''

''பொதுமக்கள் உங்களிடம் எப்படிப் பழகுகிறார்கள்?''

''என்னைப் பொறுத்த மட்டில் மிகவும் நல்ல முறையில்தான் பழகுகிறார்கள். ஒருசில வீடுகளில் இந்த மாதிரி வெய்யில் காலத்திலே அவங்களே எனக்குக் குடிக்க மோரோ தண்ணீரோ கொடுப்பாங்க. நானும் ரொம்ப மரியாதையாத்தான் நடந்துக்குவேன். நீங்க நம்ப மாட்டீங்க.... இதுவரை பொதுமக்களிடமிருந்தோ அல்லது என் மேலதிகாரிகளிடமிருந்தோ என்மீது எந்தவிதப் புகாரும் வந்தது கிடையாது. அந்த ஒரு விஷயத்திலே நான் ரொம்ப சந்தோஷப்படறேன்......!''

தாம் செய்யும் வேலை மீது சிறிதளவு ஆசையோ, பற்றோ வைத்துக் கொள்ளாவிட்டாலும், செய்கிற வேலையை வேண்டா வெறுப்புடன் செய்யாமல் பொறுப்புணர்ச்சியுடனும் பயபக்தியுடனும் செய்கின்றவரை ரெட்டியாரின் அலுவலக 'ரிகார்டு' நன்றாக இருக்கும் என்பதில் சந்தேகம் என்ன?

பேட்டி: **குட்சீன்**

## ஒன்றில் நாலு!

ஆஸ்திரேலியாவில் ஒருவர், முறியடிக்க முடியாத சாதனை ஒன்றை நிகழ்த்தியிருக்கிறார். ஒரே நாளில் விவாகரத்து செய்துவிட்டு மறுமணமும் செய்து கொண்ட அவர் மாலையில் இறந்து போய் விட்டார்!



அமெரிக்க ஜனாதிபதி தேர்தலில் நிற்கப்போவதாக அறிவித்ததிலிருந்து ராபர்ட் கென்னடி நிறைய கைக்குட்டைகளைத் தொலைத்திருக்கிறார். எப்படி? கூட்டத்தில் உள்ளவர்கள் ஞாபகார்த்தமாகத் தங்களுடன் வைத்துக் கொள்வதற்காக அவர் பையிலிருந்தே எடுத்துக் கொண்டு விட்டார்களாம்.

பிரதமர் இந்திரா காந்தியின் உதவியாளர்கள் 13 பேர். ஆனால் துணைப் பிரதமர் மொரார்ஜி தேசாய்க்கோ 29 பேர்.



இந்திராகாந்தி சிட்னி நகருக்கு விஜயம் செய்த போது அங்குள்ள கடைகளுக்கும் கட்டடங்களுக்கும் கொடுக்க அங்குள்ள நமது தூதரகம் 5000 இந்திய தேசியக் கொடிகள் வேண்டும் என்று தில்லியைக் கேட்டிருந்தது. விமானத்தில் அவர்களுக்குப் போய்ச் சேர்ந்தது மூன்று தேசியக் கொடிகள்!

ஆதாரம்: ஸ்டேட்ஸ்மன்
தகவல்: ''பாபு''




# ஓநாய்க் கோட்டை

கதை: வாண்டுமாமா • சித்திரம் ரமணி..



















என் முகத்தை இப்படிக் கோரமாக்கியவர்கள் எனக்குச் சில திறமைகளை அளித்தி-ருக்கிறார்கள். ஓநாய் போலுள்ள எனக்கு மோப்ப சக்தியும் ஜாக்கிரதையுடையும் தன்மையும் உண்டு. சீக்கிரம்! நம்மை-வேட்டையாட வரும் அவர்களைச் சமாளிக்கத் தயாராக வேண்டும்......


ஓநாய்ப் படை பின்னால் வந்து கொண்டிருக்கிறது. மோப்பமறிவதில் வல்லவர்களான இருவர் அவர்களுக்கு வழி காட்டியாக முன்னால் வந்து கொண்டிருக்கிறார்கள். அந்த இருவரையும் நீங்கள் முதலில் பலி கொள்ள வேண்டும்.


நினைவிருக்கட்டும். ஒரு சிறு முனகல் கூட இல்லாமல் அவர்கள் மரணத்தைத் தழுவ வேண்டும்..


ஓநாய்ச் சாரணர்களின் மீது யுத்தமும் ஆரம்பமும்.


தாமகேது, இருவரையும் தீர்த்து விட்டோம். அடுத்து என்ன செய்வது? உன் திட்டம் என்ன?
இவர்களுடைய ஓநாய் அங்கியை எடுத்து அணிந்து கொண்டு இந்தச் செந்நிறமண்ணை முகத்தில் அப்பிக் கொண்டு ஓநாய் மனிதர்களாக மாறுங்கள். உடல்களைப் புதர்களில் மறைத்து விட-லாம்.


அதோ, நாம் எதிர்பார்க்கும் அபாயம் நம்மை நெருங்கிக் கொண்டிருக்கிறது...
வேலவனே, வெற்றியைக் கொடு! தாமகேதுவின் திட்டம் தோல்வியுறுமானால் பிறகு தப்பிப் பிழைக்க வேறு மார்க்கமில்லை...

தொடரும்...

# இனிக்கும் நினைவுகள்

கோமகள்



## 14. பொற் கனவு

“சீதா தந்தை தாண்டவனின் கட்டளைக்குக் கீழ்ப்படியவும் இல்லை; இந்தியாவுக்குத் திரும்பவும் இல்லை. வழக்கமாக நடைபெறுவது போல் கிறிஸ்தவ மதத்தைத் தழுவவும் இல்லை. மாறாக ரிச்சர்டு இந்து மதத்தைத் தழுவினார். அது ஏற்குமா என்பது வேறு விஷயம். இந்தியா, இந்தியர்கள், குறிப்பாகத் தமிழர்கள் என்றால் அவருக்கு மிக்க விருப்பம். வீட்டில் பொதுவாகப் பேசும் மொழி தமிழாகவே இருந்தது. ரிச்சர்டின் முதிய தாய் ஒருத்தியிடம் மட்டும் பேசப் பழக ஆங்கிலம் பயன்பட்டது. தன் திருமணத்துக்கு அன்போடு இசைந்த தன் தாயின் பெயரையே என் தந்தை தமிழர்களின் வழக்கப்படி எனக்கிட்டு அழைத்தார். ஆனால் எனக்கு முகம் தெரியுமுன்பே இதய பலவீனத்தில் என் தாயார் இறந்து விட்டாள். தாய்நாட்டுக்குச் சுகமாகச் செல்ல முடியாத ஏக்கமும், தந்தையின் பராமுகமும் அவளை விழுங்கி விட்டன. என் பாட்டி தான் என்னை வளர்த்தாள். என் தந்தைக்கு என்னை ஒரு தமிழனுக்கே மணம் செய்து தரவேண்டும் என்று விருப்பம் இருந்தது.

''ஒரு நாள் என் தோழி ஒருத்தி, மிஸ்டர் ராகவனை எங்கள் வீட்டில் 'பேயிங் கெஸ்ட்'டாக ஏற்றுக் கொள்ள முடியுமா என்று வினவினாள். அப்பாவும் பாட்டியும் ஒப்புக் கொண்டனர். மிஸ்டர் ராகவனை மணமானவர் என்று நாங்கள் யாருமே எண்ணவில்லை. அதைக் கூற நேரும் வாய்ப்பு அவருக்கும் ஏற்படவில்லை. என் தந்தைக்கு இவரது நடையுடை செயல்கள் எல்லாம் மிகவும் பிடித்துப் போய்விட்டன. ஆனாலும் என் தந்தை இத்தகு எண்ணம் கொண்டிருப்பது கொஞ்சமும் எனக்குத் தெரியாது. நான் அவரோடு நட்புக் கொண்டு தான் பழகினேன்.

''ஒரு நாள் அப்பாவுக்குத் தாங்க முடியாத நெஞ்சு வலி வந்துவிட்டது. பாட்டியோ வீட்டை விட்டு ஓரடிகூட எடுத்து வைக்க முடியாத முதுமையில் உள்ளவள். நான் தவித்தேன்; உருகினேன். அந்த வேளை ராகவன் வீட்டுக்குத் திரும்பி வந்தார். நிலையை உணர்ந்த அவர் ஓடி ஒரு டாக்டரோடு வந்தார். டாக்டர் உதட்டைப் பிதுக்கினார். நான் கதறினேன். அப்போதுதான் என் தந்தை என் கையைப் பற்றி ராகவனின் கரத்தோடு இணைத்து விடத் துடித்தார். ராகவனோ அந்த மரணத் துடிப்பின் ஆசைக்கு அடிமைப்பட முடியாமல் தவித்தார். அந்த இக்கட்டான நிலையில் தாம் மணமானவர் என்றும் அவரால் சொல்ல முடியவில்லை. சொன்னாலும் பலன் ஏற்படப் போவதில்லை. என் தந்தையின் மரணத்துக்குப் பின் தமக்கு மணமாகி விட்டதென்று அவர் கூறியபோது நான் துடித்த துடிப்பை நீங்கள் இப்போது உணர முடியாது. ஏமாற்றப்பட்டோம் என்று அல்ல. ஒரு பெண்ணின் வாழ்வுக்கு இடையூறாக ஆகிவிட்டோமே என்று! எங்கள் பதிவுத் திருமணம் நடந்த பின் நாங்கள் இருவரும் பாட்டியிடம் ஆசீர்வாதம் பெற்றுக் கொண்டு இந்தியா புறப்பட்டு வந்தோம்....''

அப்புறம் நடந்ததெல்லாம்தான் துளசிக்குத் தெரிந்ததாயிற்றே. இப்போது லிஸ்ஸியின் கோணத்தில் தன்னை மறைத்துக் கொண்டு பார்த்தால், எல்லாம் நீதியாக, செய்யப்பட வேண்டியவையாகத் தெரிகிறது. ஆனால் எதிர்க் கோணம் வேறு திசை. எனவே வேறு பொருள் தெரிகிறது.

''இப்போது எண்ணிப் பாருங்கள். இதற்கெல்லாம் அன்பில்லை என்று பொருள்?''

''நீங்கள் இத்தனை கதையையும் கூறிய பின் நானும் ஒன்றைச் சொல்லலாம் என்று நினைக்கிறேன் லிஸ்ஸி! நீங்களிருவரும் வீட்டுக்குள் வந்தீர்கள். உங்களைக் கண்டதும் எனக்கு ஒரே ஆத்திரம் வந்துவிட்டது. அது தவறானதில்லை என்பதும் உங்களுக்குத் தெரியும்.

தாம் கூறவேண்டிய சமாதானத்தை அவர் பலர் எதிரிலும் கூறி நியாயம் கேட்பதை விட என் ஒருத்தியிடம் தனிமையில் கேட்டிருந்தால் சுலபமாகத் தீர்ந்திருக்கும். அதற்கு விரும்பவில்லை அவர்..... இன்றளவும் அவர் போற்றிக் காக்கும் ரகசியமாகவும் இது இருக்கலாம். அல்லது உங்களிடம் கூறியும் இருக்கலாம். இதை நான் உணர்ந்திருக்கிறேன் என்பதை அவர் உணர மாட்டார். நள்ளிரவு தூக்கம் வராமல் நான் தனித்து என் அறையில் புரண்டு கொண்டிருந்தேன்....அப்போது மெல்லிய காலடி ஓசை கேட்டது. நான் திடுக்கிட்டுப் பார்த்தேன். சாளரத்தின் நிலவொளி வருவது யாரென்பதை எனக்குப் புலப்படுத்திவிட்டது. இருளிலே இரு கரங்கள் துழாவி வந்தன. அவை வந்ததை நான் உணர்வேன். அவை தயங்கின. அதன் அன்பில் மாற்றுக் குறைவு இருந்தது. தயங்கிய அந்தக் கைகள் எனக்குரியவையாக இருந்தால் தயங்குமா? அப்போதே மன முடிச்சு படுமுடிச்சாக இறுகிவிட்டது. அன்புச் செறிவின் குறைவில் ஏங்கிய மனத்தின் தீர்மானம் அது. நான் என்னென்னவோ நினைத்தேன். ஒருகால் அந்தக் கணமே அவர் துரோகத்தை நான் மன்னித்திருக்கவும் கூடும். அப்போது வந்த சுவடு தெரியாமல் அவர் விலகிய பின் இவ்வுலகில் எனக்கு எதுவும் மீதியிருக்கவில்லை. அதுவே என் விரக்தியாக உருவெடுத்து விட்டது...''

''அன்பு இல்லாததால்தான் அந்தக் கரங்கள் தயங்கின என்று ஏன் முடிவு கட்டினீர்கள், துளசி? நீங்கள் இருவரும் முன்பின் பழகியவர்கள் இல்லை. அதோடு திருமணமான பின்பும்



பிரிவு. அப்படி இருக்கும்போது, தாம் செய்த தவற்றுக்கு நீங்கள் மன்னிக்கவில்லை என்ற அச்சம் வேறு. அந் நிலையில் அந்தக் கரங்கள் தயங்கியதற்கு வேறு காரணம் இருக்கக் கூடாதா? உங்கள் மனத்தில் அவரைப் பற்றிய ஒரு தவறான கருத்தே பதிந்திருக்கிறது. இதைத் தவிர, அதற்கு வேறு வித அர்த்தம் இருக்க முடியாது.''

'சுரீ'ரென்றது துளசிக்கு. முன்பின் பழகியதில்லை. திருமணமான பின்பும் 'பிரிவு'-இதை ஒரு காரணமாக எண்ணிப் பார்க்காத இளமையின் வீம்பும் கர்வமும் இப்போது அவளை ஒடுக்கி விட்டன. ''உண்மைதான் லிஸ்ஸி! நீங்கள் கூறுவது அத்தனையும் உண்மை. நான் இதை உணரும்போது எத்தனை காலம் கடந்து விட்டது!'' என்று மனப்பூர்வமான உணர்ச்சிப் பெருக்கில் கூறினாள் அவள்.

''இதை நீங்கள் உணர்ந்த நேரமே, நான் இந்தக் குழந்தைச் சட்டையை உங்களுக்குப் பரிசளிக்கும் நல்ல நேரமாக இருக்கட்டும்'' என்று லிஸ்ஸி சிவப்பு வெல்வெட் சட்டையை எடுத்து அழகாக மடித்துத் துளசியின் இரு கரங்களிலும் வைத்து மூடினாள்.

தெருப்பக்கம் ராகவன் கோர்ட்டிலிருந்து திரும்பி வந்து விட்டதற்கு அடையாளமாகக் காரின் குழலொலி கேட்டது.

**வா**ர்டுக்குச் சீலியா வருவதற்குள்ளாகவே வசந்தன் வந்து விட்டிருந்தான். அவனைப் பார்க்கும் போது அவளை வெட்கம் கவ்வியது. முதல் நாள் போனில் பேசிய சாராம்



சங்கள் எல்லாம் நெஞ்சில் தேங்கி, கோரைக் கிழங்குகள் மழையில் முளை விடுவதுபோல முளைத்தன. அவனது சிரிப்பின் அனுபவ ரசனை அமுதமாக இனித்தது. அந்தச் சிரிப்பில் அவள் முகத்தை நாண வைக்கும் உட்குறிப்புக்கள் தெரிந்தன. ஆண்மையின் கம்பீரம் கண்களில் கனிவாகத் தெறிப்பதைக் கண்டு அவள் நாணி நின்றாள்.

''இது என்ன புதிய மாற்றம்?'' — சீண்டும் குரலில் வினவினான் வசந்தன். சீலியா சட்டென நிமிர்ந்தாள். ஆசைகளின் மனோகர மோதல்கள் போன்ற கண்களின் சந்திப்பு! வெறும் பார்வையா அது? தன்னுள் எதையோ பொதித்துக்

கற்பனைகளைப் புதிதாக வீசும் பார்வை! வெறும் சிரிப்பா அது? தன்னுள் காத்த வற்றை லாகவமாக எறிந்து காட்டும் சிரிப்பு! ஐக்கியமாகி உறைந்துவிட எண்ணுவதுபோல் பற்றிப் படர விழையும் துடிப்பு! விவரிக்க இயலாத உள்ளக் கிளர்ச்சி!

வசந்தனின் கண்கள் அவளை ஏற இறங்கப் பார்த்தன. திரும்பும் கோணத்தில் சதைப் பிடிப்பான தோள்களை அழுத்தும் இறுக்கமான பிடிப்பில் பெனுரஸ் பட்டின் மாம்பழ பார்டர் ஜரிகை முழு உருவாக விரிந்து தெரிந்தது. முதுகுப் பக்கம் கழுத்து வெட்டில் மினுமினுத்த மெல்லிய 'சங்கிலி; பட்டியின் பூ வேலையும், உள்ளே நிழலாகத் தெரிந்த உட் கச்சையும், இடைக்கு மேல் பளபளப்பான பார்டர் ரூபத்தில் உயரே ஏறும் சேலைத் தலைப்பும்; கொழுவிய மணிக்கட்டில் அழுந்திய கைக்கடிகாரமும்! — வசந்தன் வைத்த கண் வாங்கவில்லை.

அவள் குன்றிவிட்டாள். முகம் ரோஜாவாகப் பூத்து விட்டது.

''இந்தத் துணிவை நானாகவா எடுத்துக் கொள்கிறேன்? இல்லை...! வித்யுவர் கைண்ட் பர்மிஷன்...!'' என்று வசந்தன் சொல்வதாகப் படவே, அந்த இனிமையில் சொக்கிய அவள் சக்தி யிழந்த மனத்தோடு நின்றாள். ஆச்சரியமான அழகு பொலிந்து, மயக்கும் லாகிரியாகத் திகழ்ந்தாள்.

ஹாஸ்டலுக்கு வந்த பின்னும் கூட அந்தச் சுவையான எண்ணங்கள் அவளையே சூழ்ந்து நின்றன. கட்டிலில் குப்புறப் படுத்தவாறே, மனத்துக் கினிய கற்பனைகளில் லயித்துக் கிடந்தாள் அவள். மனத்துள் 'நேற்றுப் போல் வசந்தன் இன்றும் 'போன்' பண்ண மாட்டாரா' என்ற நைப்பாசை பேராசையாக அலையிட்டது. நேரம் நீண்டது. ஏமாற்றம் நெஞ்சைக் கவ்வ, கீழே இறங்கி போன் இருக்கும் இடம் நெருங்கினாள். அங்கு லீலா, உற்சாகமாக மெல்லிய குரலில் பேசிக் கொண்டிருந்தாள். 'ஓ! எதிர் முனையில் சங்கரனா? அதுதான் 'அவர்' போன் பண்ண முடியவில்லை போலும்' என்று எண்ணமிட்டவாறே திரும்பி விட்டாள்.

**மா**லை மயங்கிக் கொண்டு வந்தது. சீலியா குப்புறப் படுத்துக் கிடந்த நிலையினின்றும் எழவில்லை.

'டொக், டொக்' — கதவு தட்டும் சத்தம் கேட்டது.

''யெஸ்...'' என்று குரல் கொடுத்தாள் சீலியா.

''வசந்தன் என்பவர்வந்திருக்கிறார்!''

''யார், யார்?'' என்று பரபரப்போடு கட்டிலிலிருந்து குதித்த சீலியா, செருப்பைக்கூடப் போட்டுக் கொள்ள மறந்து கதவைத் திறந்தாள். அதற்குள் காவற்காரன் போய்விட்டிருந்தான்.

அவளுக்கு உடம்பும் மனமும் ஒரேயடியாகப் பரபரத்தன. என்ன செய்வதென்றே தெரியாமல் தவித்து விட்டுப் புதிய சலவைப் புடவை ஒன்றை எடுத்துப் பிரித்துக் கட்டிக் கொண்டாள். முகத்தில் பவுடரைக் கொட்டி ஒத்திக் கொண்டு படி இறங்கி ஓடினாள். சுற்றுமுற்றும் நோக்கியபோது சிமெண்ட் பெஞ்சி ஒன்றில் வசந்தன் உட்கார்ந்திருப்பது புரிந்தது.

அவளது திடுக்கிட்ட முக பாவம் அவனுக்கு விந்தை ஊட்டியது. அவள் எதிர்பார்க்கவில்லையா? சீலியா அவனருகே போய் அதே பெஞ்சியில் தள்ளி அமர்ந்தாள். சுற்றிலும் பூஞ் செடிகள் மறைவிலும், புல்வெளிப் பக்கமுமாக அமர்ந்து கிடந்த ஜோடிகளும் இவர்களைப் பார்க்கத் தவறவில்லை. எனவே, இருவரும் பிறர் பார்வைக்கு இலக்காகும் கூச்சத்தில் தவித்தனர். சீலியா எதுவும் பேசவும் இல்லை, வரவேற்கவும் இல்லை. அவள் கால் விரல்கள் கீழே கோடுகள் கிழித்தன. அந்தக் கோடுகளுக்கு அர்த்தம் உண்டா? தன் நெஞ்சின் அந்தரங்கத்தை யெல்லாம், நினைவின் ரகசியங்களை யெல்லாம் அவள் வெட்கக் கோலங்களாக்குகிறாளோ?

''நான் இங்கு வந்ததன் மூலம் உன்னை இக்கட்டான நிலைக்கு இலக்காக்கி விட்டேனா, சீலியா?''

''ஆ! நோ, நோ! அப்படியெல்லாம் இல்லை, உங்களை நான் எதிர்பார்க்கவில்லை. மாலை நேரத்தில் நீங்கள் ஸானடோரியம் செல்வதுதானே வழக்கம். அதனால்...'' அவள் பார்வை தயங்கி அவன் மீது படர்ந்தது. இதழோரத்தில் பேச்சுக்கூட ஒரு வரம்புக்கு மேலே செல்லாமல் தானே தேங்கி நின்றது.

''தினமும் வந்து அலையாதேடா என்று அம்மா கூறினாள். அதனால் தான்...''

''அப்படியா? நீங்கள் உங்கள் அம்மாவைப் பார்க்கும் நேரத்தை எனக்காக ஒதுக்கி வந்தது குறித்து மகிழ்கிறேன்.'' அவள் நெஞ்ச மலர் நெகிழ்ந்திருந்தது.

அவன் அவளைக் கூர்ந்தான். மதுரமான கனவுகளில் சொக்கிவிட்ட கண்களில் குங்கும ரேகை போல் ஓடிய நரம்புகள், மனமும் எண்ணமும் இணைந்த ஒருமைப்பாட்டில் பெற்ற தீஞ்

# வசீகரத்தையும், பெருமிதத்தையும் கொடுக்கும் நறுமணம் உங்களுக்கு பாமாலிவ் லவண்டர் டால்க் *உபயோகிப்பதால்*

**உங்களுக்கு மிகவும் பிடித்தமான ஸெண்டுகள்—உங்களுக்காகவே மீண்டும் உருவாக்கப்பட்டிருக்கின்றன!**

ஒரு காலத்தில் உலக அழகுக் கேந்திரங்களிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டவையும், உங்களுக்கு மிகவும் பிடித்தமானவையுமான ஸெண்டுகளின்றி இனி நீங்கள் தவிக்கவேண்டாம்... இன்று பாமாலிவ் லவண்டர் டால்க் மட்டுமே அளிக்கும் வசீகர நறுமணத்தினாலும், பெருமிதத்தினாலும் உங்கள் உடலைச் சொகுசாகப் பராமரிக்க முடியும். பாமாலிவ் லவண்டரை உங்கள் உடம்பு முழுவதும் தூவிக் கொண்டு, சூழ்ந்து நிற்கும் அதன் இனிய வசீகர நறுமணத்தினால் களிப்படையுங்கள்.

**எப்பொழுதும் புத்துணர்ச்சியுடனும் நறுமணம் சூழ்ந்த அழகுடனுமிருக்க பாமாலிவ் லவண்டர் டால்க்.**

புதிய, நவீன காஸ்மெடிக் டின்!







மற்றும் பாமாலிவ் டால்க் டீலக்ஸ் —
மயக்கும் 17 ஸெண்டுகளின் அற்புதமான கலை



# பொறுங்கள்!

துணிகள்
சீக்கிரமே உடுக்க
தகுதியற்றதாய்
போவதைப்பற்றி
கவலைப்படுகிறீர்களா?

கவலையை விடுங்கள். டுவின் டஸ்கர் துணிகளை வாங்குங்கள். இந்த ரக துணிகள் உங்களுக்குப் பிடிக்கும் ... உறுதியானவை, நீடித்து உழைப்பவை. அதி நேர்த்தியாய் தயாரிக்கப்பட்டவை. விலையிலும் நயமானவை. இவை எல்லாம் மதுரை மில்ஸாரின் பெரிய அளவு உற்பத்தி சௌகரியங்களால் சாத்தியமாகின்றன. ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுங்கள்—டுவின் டஸ்கர். நயமான விலையில் தரமுள்ள துணிகள்.

ஹார்வி



**டுவின் டஸ்கர்**

துணிமணிகள்

**நயமான விலையில்**
**தரமுள்ளவை**

மதுரை மில்ஸ் கம்பெனி லிமிடெட்,
மதுரை.
மானேஜிங் ஏஜண்டுகள்:
ஏ. & எப். ஹார்வி லிமிடெட்



சுவைத் தெளிவைப் போர்த்தி ஒளிர்ந்தன. இதயதாகத்தையே ஆரமாக்கி னாற்போன்ற பார்வை அவனை வட்டமிட்டது. பார்வையிலே பேச்சை மறந்த உள்ளங்கள் அப்படி எத்தனை நேரம் இருந்தனவோ, தெரியவில்லை. இருட்டி வெகு நேரமாகி விட்டது என்பதை மட்டும் சூழ்நிலை உணர்த்தியது.

"உங்கள் அம்மாவை ஒரு நாள் நான் பார்க்க வர வேண்டும்."

சட்டென்ற உந்தலில் சீலியா கூறினாள்.

அவன் கண்கள் மகிழ்ச்சியில் ஜொலித்தன. "ஓ! நாளையே போகலாம். உன்னைப் பார்த்தால் அவள் மிகவும் மகிழ்ச்சி யடைவாள்."

அந்தச் சொற்கள் இனிய துளிகளாக மனத்துள் வீழ்ந்து இனிக்கும் பொழுதே நேரமாகி விட்டது என்னும் நினைவு தோன்றி ஒரு கசப்பையும் உண்டு பண்ணியது.

வசந்தன் எழுந்தான். அவனது சிறு நடையை அவள் தொடர்ந்தாள். பிறகு பெருமூச்சோடு திரும்பி வந்தாள். அவளுக்கு இரவு உணவே வேண்டியிருக்கவில்லை. தளர்வின் அயர்வில் பூவுலக சொர்க்கம் படுக்கையில் இனிக்கிறது. உறக்கத்துக்கிடையே, பூப்பூவாய், உதிரும் நிகழ்ச்சிகள், பொங்கி நுரைக்கும் வேடிக்கைகள், சட்டென்று விழிப்பில் நீந்தி விழிக்கும் விழிகள்! இமைப் பிரிவில் பதுக்கி வைத்த கனவுகளைச் சித்திரித்துப் பார்த்துவிடத் துடிக்கும் ஆர்வம்! அப்புறம் உறக்கமும் வேண்டியிருக்கவில்லை.

செல்லம்மா விந்தையால் விரியும் கண்களோடு தூரத்தில் வரும் வசந்தனையும், சீலியாவையும் நோக்கினாள். அவள் மனம் துணுக்குற்றது. 'யார் இவள்?' தன்னருகே நெருங்கியதும், "வாருங்கள்!" என்று வரவேற்றுவிட்டு வசந்தனைப் பார்த்தாள். "வணக்கம்" என்றவாறே சீலியா கைகூப்பினாள்.

"உட்காரம்மா!" என்ற செல்லம்மாவின் கனிவான குரலில் அச்சமும் நடுங்கிக் கொண்டிருந்தது.

வசந்தன் கட்டிலில் செல்லம்மாவின் கால்மாட்டில் உட்கார்ந்து கொண்டான். "என்னோடு கூடப் படிப்பவள். சீலியா என்று பெயர். உன்னைப் பார்க்க வேண்டும் என்று விரும்பினாள் அம்மா!" என்றான்.

"அப்படியா?" — அதற்கு மேல் செல்லம்மாவால் தொடர முடியவில்லை.

"உங்களைப் பற்றி நிறையக் கூறியிருக்கிறார். உங்களைப் பார்க்க வேண்டும் என்ற ஆசையில்தான் புறப்பட்டு வந்தேன்" என்று சீலியா பவ்யமான குரலில் கூறினாள்.

## முளைப்பயறு 'கட்லெட்'

**இவை தேவை :**

முளைப் (பச்சை) பயறு — 2 டேபிள் ஸ்பூன்; உருளைக்கிழங்கு — 4; பச்சை மிளகாய் — 3; வெங்காயம் — 1; இஞ்சி - ஒரு துண்டம்; கொத்தமல்லி, மிளகு — அரை ஸ்பூன்· அரிசி மாவு — 2 டேபிள் ஸ்பூன்; உப்பு (ருசிக்கு ஏற்ப); நெய்—வறுக்க.

**தயாரிப்பது இப்படி :**

பச்சைப் பயறு எத்தனை நீர் உறிஞ்சுமோ அந்த அளவுக்கு நீரில் பன்னிரண்டு மணி நேரத்துக்கு ஊற வைக்கவும். ஒரு மஸ்லின் பையில் இதை மேலும் பன்னிரண்டு மணி நேரம் சுற்றி வைக்கவும். இப்போது முளை கட்டியிருக்கும்.

வெங்காயம், இஞ்சி, மிளகாய், கொத்தமல்லி ஆகியவற்றைப் பொடியாக நறுக்கிக் கொள்ளவும். சிறிது நெய்யில் இவற்றைப் பொன்நிறத்துக்கு வறுக்கவும். இதன் மீது முளைகட்டிய பயறைத் தெளிக்கவும். உப்பும் மிளகும் தூவி வதக்கவும்.

உருளைக்கிழங்கை வேக வைத்து மசிக்கவும். சிறிது உப்பு சேர்க்கவும்.

அரிசி மாவை நீர்க்கக் கரைத்துக் கொள்ளவும். மசித்த உருளைக் கிழங்கில் கிண்ணங்கள் செய்து கொள்ளவும். தயாரிக்கப்பட்ட பச்சைப் பயறைச் சிறிது சிறிதாகக் கிண்ணங்களில் வைத்துக் கிண்ணங்களை மூடவும் (கொழுக்கட்டை செய்வது போல்) மூடிய கிண்ணங்களைத் தட்டி வட்டமாகச் செய்து கொள்ளவும். கரைத்த அரிசி மாவில் முக்கி எடுத்து நெய்யில் பொரிக்கவும்.

பச்சைப் பயறு கட்லெட் பிரமாதமாக இருந்தாக வேண்டும். நன்றாக இல்லை என்றால் நாங்கள் பொறுப்பல்ல. மத்திய அரசினரின் உணவு, விவசாய இலாகாவைக் கேளுங்கள் ! பச்சைப் பயறு உடம்புக்கு நல்லது என்பதால் அதைக் கொண்டு என்னவெல்லாம் தின்பண்டங்கள் தயாரிக்கலாம் என்று ஆங்கிலத்தில் ஒரு புத்தகம் வெளியிட்டிருக்கிறார்கள். இலவசமாகக் கிடைக்கிறது. முகவரி: Business Manager, Farm nformation Unit, Directorate of Extension, Ministry of food & Agriculture, New Delhi.

விரைவில் இந்த நூல் தமிழிலும் கிடைக்குமாம்.



"ஜெம் கிளிப்பு தீர்ந்து விட்டது. ஹேர் பின் இருந்தால் நாலு கொடேன்!"

செல்லம்மாவின் மனத்தில் சரசர வென்று சஞ்சலம் சூழ்ந்து கொண்டது. 'வசந்தன் இப்படிப்பட்டவனா? இவளோடு இங்கு வருமளவுக்கு என்ன வந்தது? எனக்கு எதையாவது உணர்த்த முயல்கிறானா? இல்லை, சுபாவமாகப் பழகுகிறானா? அப்படியே இருந்தாலும் ஒரு பெண்ணிடம் இத்தனை சகஜமாகப் பழகலாமா?'

''என்ன அம்மா?'' வசந்தனுக்கு அன்னையின் மௌனம் என்னவோ போலிருந்தது.

''ஒன்றுமில்லை, வசந்த். காலையிலிருந்தே எனக்கு உடம்பு ஒரு மாதிரியாக இருக்கிறது...''

''என்ன... என்ன உடம்புக்கு...?'' பதறினான் அவன்.

''நீ பதறாதேடா. பி. ஏ. எஸ். 'ஸ்டாக்' இல்லை என்று நேற்று மருந்தை நிறுத்தியிருந்தார்கள். அதனால் இருக்கலாம்....''

''நான் வாங்கி வரவா ஒரு டின்?''

''எதற்கு? இன்று கொடுத்து விட்டார்களே. நாளை உடம்பு நன்றாகி விடும்!''

வசந்தனின் பதற்றம் விலகியது.

''நான் வந்த நேரம் சரியில்லை. உங்கள் ஓய்வையே கெடுக்க வந்தாற் போல் வந்து விட்டேன்.'' வருத்தத்தோடு மன்னிப்புக் கோரும் குரலில் கூறினாள் சீலியா.

''அதனால் என்னம்மா? நீ வந்திருக்கும்போது உன்னோடு கலகலப்பாகப் பேச முடியவில்லையே என்றுதான் இருக்கிறது!'' என்றாள் செல்லம்மாள்.

''என் அம்மாவுக்கு எப்போதும் மற்றவர்களைப் பற்றித்தான் கவலை'' என்று பெருமிதமாகக் கூறிக்கொண்டான் வசந்தன்.

செல்லம்மாவுக்கு அவன் சொற்கள் கசந்தன. எதையுமே பேச முடியாத திணறலில் குரல் தழுதழுத்துவிடும் போலிருந்தது. தன்னிடமிருந்த ஆப்பிள் ஒன்றை எடுத்துச் சீலியாவுக்குக் கொடுத்தாள். சீலியா அதை மறுக்காமல் பெற்றுக் கொண்டாள்.

''நான் உங்களுக்காக ஒன்றுமே வாங்கி வரவில்லை அம்மா. பெரியவர்களைப் பார்க்கவரும்போது அவர்களிடம் இல்லாத ஒன்றைத்தான் கொண்டு போய்த் தரவேண்டுமாம். நான் உங்களிடம் இல்லாததும், என்னிடம் நிறைய உள்ளதுமான அறியாமையைத்தான் எடுத்து வந்தேன், அசடு! நான் வந்த அதிர்ஷ்டம், இன்று உங்களுக்கு உடல் நிலை சரியில்லை. மற்றொரு நாள் வந்து பார்க்கிறேன் அம்மா!'' என்று கூறி எழுந்தாள் சீலியா.

முன் பின் தெரியாத ஒரு பெண், தன்மீது அன்பு கொண்டு பார்க்க வந்திருக்கும்போது, அவளை வெறுப்புடன் நோக்குவது குறித்துத் தனக்குத் தானே வருந்தியவாறு விடை கொடுத்தாள் செல்லம்மா. அந்த நெகிழ்ச்சியில், வசந்தனுக்கும் விடை கொடுத்து அனுப்பி வைத்தாள்.

தூரத்தில் வசந்தனும், சீலியாவும் செல்வது தெரிந்தது. சீதம்மா செல்லம்மாவின் அருகில் வந்து வசந்தனோடுகூட வந்த பெண்ணைப் பற்றிச் சுவாரசியமாக விசாரித்தாள். அந்த விசாரணையே அன்னையின் மனத்தில் திகிலூட்டியது. அப்படி யெல்லாம் ஒன்றும் இருக்காது, அப்படியே இருந்தாலும் அவனே தெரிந்துகொள்ளும் சந்தர்ப்பம்தான் விரைவில் வரப்போகிறதே, அப்போது புரிந்துகொள்கிறான். அதை விட்டு, ஏதாவது கேட்கப்போய், கண்டிக்கப் போய், உண்மை என்ற ரூபத்தில் ஏதாவது வெளி வந்து விட்டால் என்ன செய்வது? எதையாவது அவன் சொல்லி, அவள் நம்பிக்கையை யெல்லாம் தகர்த்துவிட்டுத் தனது நம்பிக்கைக்கு வித்தூன்றிக் கொண்டு விட்டால்...? வேண்டாம். அதை அவளால் தாங்கவே முடியாது. ஒருகால் அந்தப் பெண்ணை — அவள் பெயரைப் பார்த்தால் கிறித்துவ மதம் போல் உள்ளதே — மணக்க வேண்டும் என்று வசந்தன் விரும்பி அநுமதி கேட்பானேயாகில்.... 'ஊஹூம்! வசந்தன் ஒருகாலும் அப்படி நடக்க மாட்டான்!' இப்படி யெல்லாம் தன் மனத்தின் கேள்விக்குத் தானே பதில் சொல்லிக்கொண்டாள் அவள். **(தொடரும்)**

# கால்கேட்டின் மூலம் நாள் முழுவதும் வாய் துர்நாற்றத்தை அகற்றி பற்கள் சொத்தையாவதையும் தடுங்கள்!

**ஏனெனில் ஒரே தேய்ப்பில் கால்கேட் கிரீம், துர்நாற்றத்தையும், சொத்தையையும் உண்டாக்கும் கிருமிகளில் 85 சதவிகிதத்தை ஒழித்துவிடுகிறது.**

கால்கேட், 10ல் 7 சந்தர்ப்பங்களில் உடனடியாக வாய் துர்நாற்றத்தை அகற்றுகிறது என்பதையும், உணவு உட்கொண்டவுடன் கால்கேட்டினால் பற்களைத் துலக்கும் முறையால், இதுவரை பற்பசை வரலாற்றிலேயே கண்டிராத பெருமளவில் ஏராளமானவர்களுக்குச் சொத்தை தடுக்கப்படுகிறது என்பதையும் விஞ்ஞான ஆராய்ச்சிகள் நிரூபித்துள்ளன. இந்த சாதனை கால்கேட் ஒன்றுக்குத்தான் உண்டு!

கால்கேட்டின் நீடித்திருக்கும் நூதன நறுமணத்திற்காக, குழந்தைகள் அதனாலேயே பல் துலக்க விரும்புகிறார்கள்!

நீங்கள் பற்பொடியை விரும்பினால் இந்தப் பலன்கள் அனைத்தையும் கால்கேட் டூத் பவுடர் மூலம் அடையலாம். ஒரு டப்பி பல மாதங்களுக்கு வரும்.




DC. G. 35 TAM




**பரிசுத்தத்திற்கும், வாயில் நறுமணம் கமழவும், வெண்மையான பற்களைப் பெறவும் வழக்கமாக கால்கேட்டினால் பல் துலக்குங்கள்**

'...உலகிலேயே பெரும்பாலானவர்கள் மற்றெல்லாப் பற்பசைகளையும் விட, கால்கேட் டென்டல் கிரீமையே வாங்குகிறார்கள்.

# பொன்னிவனத்துப் பூங்குயில்

## கொத்தமங்கலம் சுப்பு

### அத்தியாயம் 28

## பாசத்தால் வந்த மோசம்

கண்களை மூடிச் சிறிது நேரம் யோசனை செய்தபின், ''கேட்க வேண்டியவற்றைக் கேட்கலாம்'' என்று திருவாய் மலர்ந்து அருளினார் பாலயோகி.

''சாமி! இந்த நாட்டைப் பரமசிவன் ஆளப் போகிறார் என்று சொல்றுங்களே! அவர் எப்போது ஆட்சிக்கு வருவார்?'' என்று பணிவுடன் கேட்டாள் வேலைக்காரி.

பாலயோகி கடகடவென்று சிரித்தார். ''அம்மணி! உனக்கு முக்தி கிடைக்குமா என்று கேள். நாம் துறவி. அரசியல் கேள்விகளுக்கு நாம் விடை சொல்வதில்லை'' என்று சொல்லிவிட்டு, 'ஏன் இவள் இந்தக் கேள்வியைக் கேட்கிறாள்? யார் ஆண்டால் இவளுக்கு என்ன?' என்ற யோசனையில் மறுபடியும் தியானத்தில் ஆழ்ந்தார் பாலயோகி.

''சுவாமி! நாங்கள் எல்லாம் வெந்ததைத் தின்று விதி வந்தால் சாகிறவங்க. எங்களுக்கும் பக்திக்கும் முக்திக்கும் வெகு தூரமுங்க. ஊரெல்லாம் 'பரமசிவன் அவதாரம் பண்ணியிருக்கிறாரு. இனிமேல் அவர்தான் ஆளப் போறாரு' என்று சொல்கிறார்களே!''

''இப்பொழுதும் அப்பரம்பொருள்தான் ஆண்டு கொண்டிருக்கிறது'' என்று சொல்லிவிட்டு அவள் முகத்தை உற்று நோக்கினார் பாலயோகி. அதில் நல்ல கிளையிலிருந்த கனி ஒன்று தரையில் வீழ்ந்து வெய்யிலில் வதங்கியது போல் நல்ல நிலையிலிருந்து வீழ்ந்தவள் அவள் என்று கண்டார். அன்னை ரகசியமாய்ச் சொல்லிய பணிப் பெண் இவள்தானோ என்ற ஐயம் உண்டாயிற்று. அவள் மறுபடியும் கேட்டாள். ''அப்படி இருந்துச்சன்னு பெருமாள் ஏன் தசாவதாரம் எடுக்கிறாரு? கலி முத்தினா கடவுள் வருவாருன்னு சொல்றுங்களே! அவர் பிறந்துட்டாரா? அவருக்குப் பட்டம் கிடைக்குமா?''

''சிஷ்யா! அஞ்சன மையைப் பார்த்து வஞ்சனையில்லாமல் சொல். அம்மணி, கேட்டுக் கொள்!'' என்றார் பாலயோகி.

ஆலிலையில் மை தடவி அதைப் பார்த்துக் கொண்டிருந்த சிஷ்யன், ''குருவே! கைலாசம் தெரிகிறது. பரமசிவன் உட்கார்ந்திருக்கிறார். உங்கள் சார்பாக முருகன் அவரிடம் கேட்கிறார்'' என்றான்.

பணிப் பெண் நடுங்கினாள். பக்தியில் அவளுடைய உடல் வியர்த்தது. கைக்குள்ளே கைலாசமா என்று எண்ணினாள்.

''முருகன் கேட்ட கேள்விக்குச் சிவன் என்ன சொல்றாரு?'' என்று அவசரமாகக் கேட்டாள் அவள்.

''குருவே! 'நாம் இப்போது அவதரிக்கவும் இல்லை; ஆளப்போவதும் இல்லை' என்கிறார் சிவபெருமான்.''



''ஆ... அது எப்படிங்க ! பின்னே துக்கோஜி ராஜாவே எக்காலமும் ஆளப் போகிறாராமா?'' என்று சிஷ்யனைப் பார்த்துச் சிரிக் கொண்டே கேட்டாள் வேலைக்காரி.

பாலயோகியின் சந்தேகம் பலத்தது. ''சிஷ்யா! இந்த நாட்டை யார் ஆளப் போகிறார்கள்? அதைச் சொல்!'' என்று கூறிவிட்டு, ''உஸ் டப்! உஸ் டப் ! ஸ்வாகா'' என்று மந்திரத்தை ஜபித்தார் பாலயோகி.

''உஸ்! டப். உஸ்! டப்! நீலமாக ஏதோ தெரிகிறது'' என்றான் சிஷ்யன்.

''சிவபெருமான் நீலகண்டன்! ஆலகால விஷம் நீலம். கடல் நீலம். ககனம் நீலம். இவற்றில் அது என்ன?''

''ஒரு தங்கச் சாலில் நீலமாக ஏதோ கரைத்து வைக்கப் பட்டிருக்கிறது.''

வேலைக்காரி சிஷ்யன் சொல்வதை அக்கறையோடு கேட்டாள். குரு அவள் முக பாவத்தில் ஏற்படும் மாறுதல் களைக் கூர்ந்து கவனித்து வந்தார். ''அது துணிகளுக்குப் போடும் நீலமாக இருக்குமோ?'' என்றாள் வேலைக்காரி.

''இல்லை, வேறு என்ன தெரிகிறது?'' என்றார் பாலயோகி.

''ஒரு பெரிய பொங்கல் பானை தெரிகிறது. கீழே சிவப்பாக நெருப்பு எரிகிறது. அந்தப் பானையின் கழுத்தில் இஞ்சிக் கொத்துக்களும், மஞ்சள் கொத்துக்களும் பல வண்ண வண்ண மலர் மாலைகளும் தெரிகின்றன''



என்று கூறி முடிப்பதற்கு முன்பே, ''சின்னச்சுவாமி, மன்னிக்கனும். அது பொங்கப் பானையா? வெள்ளாவி அடுப்பா? நல்லா பாருங்க? இல்லாட்டி இலையை என் கையிலே கொடுங்க. நான் பார்க்கிறேன்'' என்று அப்பன் குதிருக்குள் இல்லை என்பதுபோல் பதறினாள் அவள்.

''உன் கண்ணுக்குத் தெரியாது, சிஷ்யா! வேறு என்ன தெரிகிறது?'' என்றார் பாலயோகி.

''ஒரு ஆறு ஓடுகிறது. அது கங்கை! இல்லை, காவேரி.''

''கவனி, கவனி!''

''அல்ல. வடவாறு அந்த ஆற்றங் கரையில் ஏராளமான கொடிகள் கட்டி இருக்கின்றன. அந்தக் கொடிகளின் மேல் ஆலவட்டம், சுருட்டி! அல்ல....! அந்தப்புரத்துச் சேலைகள்.''

''சிஷ்யா, குழப்பாதே!'' என்று கோபத்துடன் இலையை வாங்கிக் கிழித்தார் பாலயோகி.

''சாமி!'' என்று அந்த இலையிலேயே இராசாங்கம் இருப்பது போல் அதைப் பறிக்கப் போனாள் பணிப் பெண்.

''அம்மணி, நாம் சாதுக்கள். இனி உன் கேள்விகளுக்குப் பதில் சொல்ல முடியாது. அரசாங்க விஷயம்.''

''சொல்லுங்க சாமி, சொல்லுங்க. நல்ல சமயத்திலே இலையைக் கிழிச்சிட்டீங்களே. நீலச் சால், வெள்ளாவி அடுப்பு, கொடி அவற்றில் துணிகள் உலர்த்தியிருக்கின்றன. அப்படின்னா...?'' என்று அவள் ஆவலோடு எதையோ சொல்ல நினைத்தாள்; ஆனால் தயங்கினாள்.

''மக்களின் மனமாசை நீக்குபவர் பரமசிவன். பிறவி எனும் வெள்ளாவியில் வைத்து வேக விடுபவர் பரமசிவன். அம்மணி, யாரிடமும் சொல்லாதே ரகசியம்'' என்று அவள் காதருகில், ''இந்த நாட்டைப் பரமசிவன் ஆளப்போவதில்லை. புனாவிலிருந்து வந்த துணி வெளுக்கும் பணிப்பெண் ஒருத்தியின் மகன் ஆளப் போகிறார்'' என்று கூறிவிட்டு, ''பம் மகாதேவ்!'' என்றார் துறவி. இதைக் கேட்டதும் அந்தப் பெண் அனந்தத்தில் பரவசமடைந்தாள். அவள் கண்களிலிருந்து ஆனந்தக் கண்ணீர் வழிந்தது.

''சாமி! இத்தனை சொல்லிட்டுப் பாதியிலே நிறுத்திட்டீங்களே! அவர் எப்ப ஆள வருவார்?'' என்று அவர் கால்களைப் பிடித்துக் கொண்டாள் பணிப் பெண்.

''என்னை வற்புறுத்தாதே! அன்டிக்கு அரசனைப் பற்றி என்ன கவலை? கொண்டு வா, உன் கையை!'' என்று கூறி அவள் இரண்டு கைகளையும் பிடித்து, உள்ளங் கையில் ஓடிய ரேகைகளைத் தம் கைகளால் தடவிப் பார்த்தார் பாலயோகி. அது மிருதங்கம் வாசிப்பவரின் கைகளைப் போல் பல இடங்களில் காய்த்திருந்தது. கட்டையைப் பிடித்துத் துணியின் மீது அடித்து அடித்து அந்தக் காய்ப்பு வலக்கரத்தில் கடுமையாக இருந்தது. அன்னை சொல்லிய வேலைக்காரி இவள் தான் என்று கண்டு கொண்டார். இவள் கையை விடுவதா? அல்லது இப்போதே கைது செய்து விடுவதா என்று யோசித்தார். ஆயினும் இவள் மூலம் அவன் இருக்கும் இடத்தையும் அறிந்து கொள்ள வேண்டும் என்ற ஆவல்!

''அம்மணி! அவர் ஆள்வதற்கு இடையூறு இருக்கிறது. ஒரு கண்டம்! என்னை மேலும் கேள்விகள் கேட்டுத் தொந்தரவு செய்யாதே!''

'' கண்டமா! அப்போ, தலையைக் கொண்டு போய் விடுவாங்களா?'' என்று கேட்டுக் கொண்டே இரு கண்களிலிருந்தும் கண்ணீரைச் சொரிந்தாள் அந்தப்பேதை.

''நீ ஏன் அழுகிறாய்? அவன் ஆண்டால் உனக்கென்ன, மாண்டால் உனக்கு என்ன?''

''சாமி! சாமி! உங்க வாயாலே அப்படியெல்லாம் சொல்லாதீங்க'' என்று துடித்தாள் அவள். பிறகு, ''ஓர் ஏழை அரசன் ஆவானென்றால் இன்னொரு ஏழைக்கு அக்கறை இருக்காதா? சுவாமி, உங்களைக் கும்பிடறேன், அந்தக் கண்டத்தையும் நீங்கதான் நீக்க வேண்டும்'' என்று நெடுஞ்சாண்கிடையாக அவர் காலில் விழுந்தாள் அவள்.

''அவன் இவனிடம் வருவானா? எங்கிருக்கிறான்? இடத்தைச் சொல். என்னிடம் நேரில் அவன் வந்தால் ஒரே மந்திரம். அடுத்த ஒரு மாதத்தில் மணிமகுடம். எனக்கு உன் கையால் ஒரு குடம் கள்ளிப் பால் கொடுப்பாயா?''

''சுவாமி! கள்ளிப் பால் எதுக்குங்க? கறந்த பாலாலேயே அபிஷேகம் பண்ணறேன். அவனுக்கு மட்டும் ஒரு ஆபத்தும் வராமல் நீக்கி விடுங்கள். ஆனால் அவன் முரடன். உங்களுக்கு முன்னாலே வர மாட்டான்.''

''வாகனம் தருவாயா?''

''எத்தனை குதிரை வேணா இருக்குங்க!''

''யாருக்கு வேண்டும், உன் குதிரை? வெள்ளை யானை தருவாயா?''

பணிப்பெண் விழித்தாள். ''ஏன் பயப்படுகிறாய்? அவனிடம் சொல்ல

# யாவற்றிலும் முதன்மை




★ கச்சிதமான நயம்
★ ஒப்பற்ற சுவை
★ முரமுரப்பான புதுமை
★ ஈடிணையற்ற போஷாக்கு யாவற்றிலும் முதன்மை—

## பார்லே க்ளுகோ

பிஸ்கட்டுகள்




பார்லே க்ளுகோ இந்தியாவிலேயே உன்னத விற்பனையுள்ள பிஸ்கட்டாக விளங்குவதில் வியப்பில்லை!

everest/340 ar/PP TM

உனக்கு அச்சமா? நான் வருவது அவன் கண்ணுக்கும் தெரியாத வண்ணம் வருகிறேம். இங்கேயிருந்து ஆகாயத்தில் பறந்து அங்கே வந்து குதிக்கிறேம். கையிலே கைலாயத்தைக் காட்டுபவனுக்குக் காட்டு ராசாவைக் காணவா முடியாது? அவன் இருக்கும் இடத்தைச் சொல். இருளில் வருகிறேன்'' என்று அவர் கூறியவுடன், அந்தப் பெண்மணியின் உடல் வெட வெடவென்று நடுங்கியது. இவர் சந்நியாசி அல்ல. 'இவருக்கு எல்லாம் தெரிந்திருக்கிறதே! சாட்சாத் பரமசிவனே இவர்தான்' என்று எண்ணினுள்.

''அதுதாங்க சரி! இங்கிருந்து வடக்கே போனு நாலு நாழிகைத் தொலேவில் மணிமரத்தாள் பத்தையிலே மாகாளி அம்மன் கோயிலிருக்குது. அதுக்குள்ளே அர்த்த மண்டபத்திலே அவன் இருக்கிறன். முரடன். பெத்த தாயைக்கூட மதிக்க மாட்டான். அவனுக்கு வந்த ஆபத்தை நீக்கி அவன் தலேயிலே மகுடத்தை நீங்கள்தான் சூட்டவேண்டும்.''

கட கட வென்று சிரித்தார் துறவி. ''மணிமரத்தாள் பத்தையாம்!..... மாகாளியம்மன் கோயிலாம்! இதை நீ சொல்லித்தான் நாம் தெரிந்து கொள்ள முடியுமோ? இலேயைப் பார்த்தால் எதிரில் வந்து நிற்காதா! அம்மணி! நீ யார்? அந்த ராசாவுக்கு நீ என்ன உறவாக வேண்டும்?''

''சுவாமி! அதைக் கேட்காதீங்க! நான் ஒருத்தரிடமும் சொல்லுறதில் லேன்னு சத்தியம் செய்திருக்கேன். அது அவனுக்கே தெரியாது'' என்றுள்.

''போ, மகளே! போ! அவனுக்காக அல்ல. உனக்காக. அரசனுக்காக அல்ல, அவன் அன்னேக்காக, அங்கு வருகிறேம். இரவு நடு சாமத்தில் அங்கே வடக்கு மூலேயில் பலபல வென்று பல்லி சொல்லும். அதுதான் நாம் வந்த அடையாளம்! தேவ ரகசியம்! யாரிடமும் சொல்லாதே! சொன்னுல் மந்திரம் பலிக்காது. உன் மகன் தலே போய்விடும்.'' அவள் அவரை வணங்கி விட்டுச் சாமியாரைப் பார்த்தபடியே சென்றுள்.

அவள் தலே மறைந்தவுடன் 'பம், பம்' என்று சங்கத்தை முழக்கினுர் பாலசந்நியாசி. காட்டுக்குள் பல புதர்களிலிருந்து நூற்றுக்கணக்கான வீரர்கள் சங்கேத ஒலி கேட்டு வந்து குழுமினர்கள். ஏராளமான வீரர்கள் புடைசூழப் பாலசந்நியாசி மணிமரத்தாள் பத்தையை நோக்கி உடனே புறப்பட்டார். அப்படி அவர் செல்லும்போது அவர் கையிலிருந்த ராஜாளி சிவ்வென்று ஆகாயத்தை நோக்கிப் பறந்தது. பாலயோகி திடுக்கிட்டார். அடுத்த கணம் ஒரு புருவைத் தன் கால்களில் பற்றிக் கொண்டு வந்தது. அப்புருவின் 'காலி லிருந்த ஓலே நறுக்கை அவசரமாக எடுத்துப் படித்தார் பாலயோகி. ''பிரதாபசிம்மன் படையுடன் வருகிறன். ஜாக்கிரதை!'' என்று அதில் எழுதப்பட்டிருந்தது. பாலயோகி சிரித்தார். ஆனுல் அதே நேரத்தில் கல்லால மரத்தின் மீதிருந்த மணிகள் கணகண வென்று முழங்கின. புரு பறந்து வந்ததையும், அதை, இராஜாளி பற்றிக் கொண்டதையும், மரத்தின்மேலிருந்து பார்த்த காட்டு ராஜாவின் வேவுகாரர்கள் கொடுத்த எச்சரிக்கைதான் அது. இதை உடனே யூகித்தார் பிரதாபசிம்மர். தம் கூட்டத்தோடு காற்றிலும் கடிய வேகத்துடன் சென்று காளி கோயிலுக்குள் புகுந்தார். காவலர்களோடு சிறிது நேரம் உக்கிரமான போர் நிகழ்ந்தது.

சில பணிப்பெண்களும், நாற்பது கள்வர்களும் சிறைப்படுத்தப்பட்டார்கள். காட்டு ராசாவின் பகுதிக்குள் அவர் நுழைந்த போது அங்கு ஒருவரும் இல்லே. சில களவுப் பொருள்கள் மட்டும் சிக்கின. அதே நேரத்தில் காட்டுக்குள்ளிருந்து தன் மகனே நோக்கி வேகமாக ஓடி வந்த பணிப் பெண் குப்பி அவரால் கைது செய்யப்பட்டாள்.

## அத்தியாயம் 29

# "துபாஷ் முத்து"

"மிஸ்டர் மொட்டு!'' என்றுர் துரை.

'''மொட்டு' இல்லே, ஸார். மொட்டு என்றுல் அரும்பு என்று பொருள். நான் முத்து!''

''எஸ் மொத்து!''

''நோ. நோ. மொத்து என்றுல் அடி என்று பொருள்.''

'' 'அடி' என்றுல்?''

'பெண்டாட்டி என்று அர்த்தம்.''

''அப்படியானுல் யு. ஆர் மை பெண்டாட்டி!'' என்று தோளில் கை போட்டான் துரை.

முத்துவுக்கு சந்தோஷம் தாங்க முடியவில்லே. ஆதலால் துரையின் பையில் கை போட்டான் முத்து.

''நோ, மனைவி வேறு. மணிமாட்டர் வேறு'' என்று கூறிவிட்டுப் பையில் கை போட்ட முத்துவின் கையை 'ஷேக் ஹாண்ட்' செய்துவிட்டு அவன் கையைப் பிடித்துக் கொண்டே நடந்தான் துரை. வெள்ளைக்காரன் கை தன் மேல் படுவதை இந்திரபோகமாக எண்ணி எல்லாரையும் முறைத்துப் பார்த்துக் கொண்டு நடந்தான் முத்து.

முத்து ஒரு ஜாலிப் பேர்வழி. அவனுக்கு உடம்பில் பலம் கிடையாது. ஆனால் மூளையில் பலம் அதிகம்.

உடலில் பலம் இல்லாததால் படையில் சேர்ந்து கூலி பெற முடியவில்லை. அவன் கையில் தடி இல்லை. ஆதலால் அவன் தண்டல்காரனாக முடியவில்லை. தேசத்தில் அவனை மதிப்பவர்கள் இல்லை. ஆதலால் அவனுக்குத் தேச பக்தி இல்லை.

அவன் சும்மா இருந்தாலும் அறிவு சும்மா இருக்குமா? அவன் 'டுவிபாஷி' வேலையில் இறங்கினான். முளையில் போட்ட முடிச்சை மாடுகூட அவிழ்த்து விடும். ஆனால் இவனைப் போன்றவர்கள் மூளையால் போட்ட முடிச்சை அவிழ்க்க முந்நூறு ஆண்டுகளாகும்.

போர்க்களங்களின் மேலே கழுகுகள் வட்டமிடுவதைப் போல் அப்போது உட்பகை மிகுந்த நம் நாட்டில் எங்கு பார்த்தாலும் பல அன்னிய நாட்டினர் வட்டமிட்டுக் கொண்டிருந்தார்கள். அவர்களில் ஒருவர்தான் நமது பாண்டிச்சேரி துரை. அவன் தமிழ் நாட்டின் கட்டடங்களைப் பார்க்க வந்தவன்.

தென்பெருகும் காவிரியின் தென்கரையிலே ஒரு மலை. அது கணபதியின் உருவில் அமைந்த மலை. அம் மலையிலிருந்து இரண்டு அருவிகள் ஓடிக்கொண்டிருக்கின்றன. ஒன்று கருணை அருவி. மற்றொன்று தமிழ் அருவி. இவையிரண்டுமே தாயுமானவரிடமிருந்துதான் வெளிவருகின்றன. திருச்சி மலைக்கோயிலில் குடிகொண்ட தெய்வத் தாயுமானவரின் கருணையும் அதே திருச்சி அரண்மனையில் பணிபுரிந்த சைவத் தாயுமானவரின் பாடலும்தான் நாம் குறிப்பிடுபவை! தென்னாட்டுக்கே திலகமாகிய திருச்சிராப்பள்ளி தெருவில்தான் துபாஷ் முத்துவும் பாண்டிச்சேரி துரையும் பவனி வந்தார்கள்.

துபாஷ் முத்துவும், தமிழ்நாட்டுக் கட்டடக் கலையைப் பார்க்க வந்த பாண்டிச்சேரி முசே துரையும் சின்னக் கடைவீதி வழியாக நடந்து செல்லும் போது அவர்கள் எதிரில் இன்னுமோர் அந்நியக் கோஷ்டி வந்துகொண்டிருந்தது. அது தேவனாம்பட்டினம் ஆங்கிலேயனும் இந்தியனும்தான். அவர்கள் வியாபார விஷயமாய்ப் பேசிக் கொண்டு வந்தார்கள்.

''மேன் இடு என்ன?'' என்று பண்ணைக் காட்டு மலையிலிருந்து வந்து இறங்கியிருந்த ஒரு பழக் குவியலைக் காட்டிக் கேட்டான் தேவனாம்பட்டினம் துரை.

''இது பழம்!'' என்றான் துபாஷ். ஆங்கில துரைக்குத் தமிழின் சிறப்பு 'ழ'கரம் உச்சரிக்க வரவில்லை.

அவன் 'ப்ளம்' என்றான்.

இதைக் கேட்டு விட்டுக் கொடைக் கானலிலிருந்து வந்த அவ்வகைப் பழங்களெல்லாம் ஆங்கில மோகத்தில் தங்கள் பெயரையே 'ப்ளம்' என்று அன்றுமுதல் மாற்றிக்கொண்டு விட்டன.

எதிரில் வந்த ஆங்கிலேயத் துரையைப் பார்த்தவுடனே பிரஞ்சுத்துரை துப்பாக்கியில் கை போட்டான்.

இதன் நடுவே, ''ட்ராங்க்யூபார்'' டச்சு துரை வந்து சேர்ந்தான். இவனோடு கூடவும் நம் துபாஷி ஒருவர் வந்தார். இவன் தெப்பக்குளத்தில் கப்பலை விடலாமா என்று பார்க்க வந்தவன்.

டுட்டிக்கோரின் போர்ச்சுகீசிய துரை ஒருவன் ''எலிமூஞ்சூர் எங்கே இருக்கிறது?'' என்று கேட்டுக் கொண்டே வந்தான். அக்காலத்தில் அவர்கள் இருவெறும்பூரில் இருக்கும் எறும்பீசரை எலிமூஞ்சூர் என்று தங்கள் மொழியில் சுத்தமாக உச்சரிப்பார்கள். இவன் வாஸ்கோடிகாமாவின் வழியில் வந்தவன். கப்பல் கட்டுவதிலும், கடல் வேட்டையாடுவதிலும் இவர்கள் நிபுணர்கள். ஆதலால், கொள்ளிடத்தில் அப்போது நடைபெறும் பரிசல் விடும் போட்டியைப் பார்க்க வந்ததாகக் கூறினான்.

இவ்வாறு கட்டடங்களைப் பார்க்க ஒருவரும், கடை வீதியைப் பார்க்க ஒருவரும், கப்பலைவிட ஒருவரும், பரிசல் போட்டியைப் பார்க்க ஒருவரும் ஆக நான்கு நாட்டினர் வந்தாலும், எல்லாரும் காரியக் கண்ணோடு வந்தவர்களே.

இதனிடையில் ஆஜானுபாகுவாய் ஆறடி உயரத்தில் இடையில் பஞ்சகச்சமும், அதன்மேல் உத்தரீயமும் கட்டிக் கொண்டு கையில் கமண்டலம், வெண் தாடி மார்பில் புரள, மேலே பூணூலுடன் நெற்றியில் சந்தனப் பொட்டுடன் ஒருவர் பத்தாயக் கடைச் சந்திலிருந்து வெளியே வந்தார். இவர் தம்மை 'ரோமாபுரி முனிவர்' என்று சொல்லிக் கொண்டார். அவருடன்கூட 'தத்துவ போதக பண்டாரம்', 'வேதநாத ஐயர்', 'ஞானபிரகாச சாஸ்திரி

யார்', 'சத்தியநேய சாமியார்' முதலிய நம் நாட்டுப் பேர்களைக் கொண்ட பல அயல்நாட்டுத் துறவிகளும் வந்தனர். அவர்கள் முறையே தக்க ஆசிரியர்களிடம் தமிழ் பயின்று நமது ஆகம புராணங்களை யெல்லாம் ஓதி உணர்ந்தவர்கள். தங்கள் உடல் பொருள் ஆவி அனைத்தையும் ஏகநாதரின் போதனைகளைப் பரப்பும் பணிக்கே அர்ப்பணித்துக் கொண்டவர்கள்.

அவர்களைக் கண்டவுடன் அங்கிருந்த நாலு நாட்டவரும் தங்களுக்குள் உள்ள வேற்றுமைகளை யெல்லாம் மறந்து ஒன்று போல் அவர்களுக்கு வணக்கம் செலுத்தினார்கள்.

அது மதவெறி மிகுந்திருந்த காலம். உலகுக்கு ஒரு பொது மொழி இல்லாத காலம். ஒருவர் சமயத்தை மற்றொருவர் புரிந்து கொள்ள ஆசைப்படாத காலம். புரிந்து கொள்ளாமலேயே சந்தேகப்பட்ட காலம்.

இவ்வாறு ஒரு கூட்டமாக அயல் நாட்டார் நிற்கும் இடத்தை நோக்கி முருங்கக் காய் பறிக்க இருவர், மூங்கில்

## குளுக் சுளுக் சிரிப்!

'நான் ஹாஸ்யக் கதை எழுதியிருக்கிறேன். படித்து உங்கள் அபிப்பிராயத்தைச் சொல்லுங்கள்' என்று பலபேரிடம் கொடுத்தேன். பலரகப்பட்ட அபிப்பிராயங்கள் கிடைத்தன. அபிப்பிராயங்கள் யார் யார் சொன்னார்கள் என்று உங்களால் சொல்ல முடிகிறதா, பாருங்கள். இல்லாவிட்டால் 79-ம் பக்கம் புரட்டுங்கள்!



கம்புகளுடன் வந்தார்கள். இதைப் பார்த்து விட்டு ஒரு கூட்டம் ஓடி வந்தது. உடனே நால்வரும் பிரிந்து வெவ்வேறு வழியாக விரைந்தனர்.

முத்துவும் பாண்டிச்சேரி துரையும் கீழ ஆண்டார் தெருப் பக்கமாகப் போகும் போது ஒரு கோழி வியாபாரி தைரியமாக அவர்களை நெருங்கினார்.

''கொக்கரக்கோ'' என்று கூவி, ''வேண்டுமா?'' என்று கேட்டார்.

''எஸ்! 'காக் காக்'!'' என்றான் துரை. உடனே கூடையில் அவன் கைவிட்டான். சேவல் ஒன்றை எடுத்து அவனிடம் கொடுக்க, அது இந்தச் சமயம் பார்த்துத்தானா கத்தவேண்டும்? ''கொக்கரக்கோ!'' என்று கூவாமல் 'பீ' என்று அகவியது.

வெள்ளைக்காரன் விழித்தான். 'இது சேவலா? வேறு ஏதாவது பறவையா?' என்று அவனுக்குப் புரியவில்லை. முத்துவைப் பார்த்தான். முத்து கெட்டிக்காரன் அல்லவா? சமயோசித புத்தியால் உடனே சமாளித்தான்.

''எஸ், துரை. இது பீ—காக்!''

கோழியின் விலைக்கு விராலி மலை மயில் குஞ்சுகளை விற்றுவிட்டுக் குதூகலமடைந்தான் வியாபாரி. அன்று முதல் மயில் 'பீ—காக்' ஆக மாறியது. வியாபாரியின் கையிலிருந்து துபாஷ் முத்துவின் கைக்குச் சில்லறை மாறியது. தன் சமயோசித புத்தியை மெச்சிக் கொண்டான் துபாஷ்.

''மிஸ்டர் மொட்டு, நாம் வண்ட டெரு நேம் வாட்?'' என்று வந்த தெருவின் பெயரைக் கேட்டான் துரை.

''சின்னக் கடை வீதி'' என்றான் முத்து.

துரை ஒரு காகிதத்தில் அதை ''எஸ் ஹ என் ஏ பஜார்'' என்று எழுதிக் கொண்டான். முத்து அந்தக் காகிதத்தை வாங்கித் திருத்தமாக 'சைனா பஜார்' என்று படித்தான்.

'சைனா பஜார் ட்ரிச்சி
டெப்பக்குலம் ட்ரிச்சி
ராக் போர்ட் ட்ரிச்சி'

''செரிங்காம் போவோமா?'' என்றான் அவன்.

புதுச்சேரியைப் பாண்டிச்சேரி ஆகவும், அலையெறி தரங்கம்பாடியை 'ட்ராங்க்யூபார்' ஆகவும் பழைய கிணறுகளைத் தூர்த்துப் புதுக் கிணறுகளை அடிக்கடி தோண்டுவதால் தூத்துக்குடி என்று பெயர் பெற்ற நித்தலம், கொழிக்கும் முத்துத் துறையை 'ட்யூடிகோரின்' ஆகவும், திருச்சிராப்பள்ளி என்னும் அழகிய தமிழ்ப் பெயரை 'ட்ருச்சி' ஆக்கியும் ஊரைக் கெடுத்த அப் புண்ணியவான்களிடத்தில் 'அது செரிங்காம் அல்ல, ஸ்ரீரங்கம்' என்று முத்து சொல்வானா?

''எஸ்'' என்றான். இருவரும் திருவரங்கத்தில் நுழைந்தார்கள்.

நிலம், நீர், தீ, வான், காற்று என்னும் ஐம்பெரும் பூதங்களுக்கும் ஆதாரம் இறைவன் என்று மக்களுக்கு எடுத்துக் காட்டுவது போல் பஞ்சப் பிராகாரங்கள் என்னும் ஐம்பெரும் திருச்சுற்றுக்களை அணியாகக் கொண்ட சிவத்தலம் திருவானைக்கா.

'ஓம் நமோ நாராயணாய' என்னும் அஷ்டாக்ஷர மந்திரத்தில் ஓம் என்னும் பிரணவத்தை விமானமாகவும், மற்ற ஏழு அட்சரங்களையும் சப்தப் பிராகாரங்களாகவும் கொண்ட பெரியகோவில் திருவரங்கம். சரித்திரத்தைக் கல்வெட்டில் வெட்டிய கோவில்கள் உண்டு. ஆனால் சரித்திரத்தையே கல்லால் கட்டிய கோவில் திருவரங்கம். தமிழை வளர்த்த கோவில்கள் பல உண்டு. ஆனால் தமிழை வளர்த்த பன்னிரு ஆழ்வார்களையும், கவிச்சக்கரவர்த்தி கம்பரையும் கவினுறும் சிலைகளாக ஆக்கி அவர்களுக்குத் திருவிழாவும் செய்து தமிழை வளர்த்தவர்களை வளர்க்கும் திருப்பதி திருவரங்கம். அக்கோவிலில் உள்ள ஒவ்வொரு கல்லும் கதை சொல்லும். ஒவ்வொரு சிலையும் சிற்பிகளுக்குப் பாடம் சொல்லும். ஒவ்வொரு மண்டபமும் பொறியியலைப் போதிக்கும். அது பக்தர்களுக்குக் கோவில்; கலைஞர்களுக்குக் கருவூலம். ஆண்களுக்கு வீரம், பெண்களுக்கு அழகு, அரசர்களுக்கு அறம், துறவிகளுக்கு ஞானம் இவற்றைப் போதிக்கும் ஒரு சர்வகலாசாலை. அதைப் பார்க்கத்தான் முடியும். அதேபோல் மற்றொன்றைப் பண்ணிவிட முடியாது. ஆயிரத்துக்கும் மேற்பட்ட ஆண்டுகளாக அங்கு யார் யாரோ திருப்பணி செய்திருப்பினும் அத்தனையும் ஒரே சிற்ப சாஸ்திர அமைப்பின் கீழ் செய்யப்பட்டு வந்திருப்பதால் ஒரே நாளில் கட்டியது போன்ற ஒரே சீரை அங்கு காண முடியும்.

திருவரங்கத்துக்குள் நுழையு முன் அங்கு பாதியாக நின்ற ராயகோபுரத்தைப் பார்த்தே பாண்டிச்சேரித் துரை பரவசம் அடைந்தான். அவன் சுற்றாத நாடில்லை. வரையாத படமில்லை. ஆயினும் உலகில் எங்கும் இதைப் போல் பார்த்ததில்லை. பையில் இருந்த காகிதக் கற்றையை எடுத்து வைத்துக் கொண்டு, ராய கோபுரத்தின் கம்பீர உருவத்தை வரைய ஆரம்பித்து அண்ணாந்து பார்த்தான். அப்படியே திகைத்துப் போய் நின்றான் அவன்.

(தொடரும்)






# ஆலயப் பிரவேசம்

**நந்தலால்**

**கா**ங்கிரஸ் ஆட்சியில் நிறைவேறிய பல சீர்திருத்தங்களில் ஹரிஜனங்களை ஆலயங்களுக்குள் செல்ல அனுமதித்ததும் ஒன்று.

திருவாங்கூரில் ஈழுவார்கள் என்கிற ஜாதியினர் 1919ல் தங்களை ஆலயங்களில் அனுமதிக்க வேண்டும் என்கிற கிளர்ச்சியைச் செய்தனர். ஸ்ரீமூலம் மன்றத்தைச் சேர்ந்த டி. கே. மாதவன் என்பவர் கிளர்ச்சிக்குத் தலைமை வகித்தார்.

காகிநாடாவில் 1923ல் மௌலானா முகம்மது அலி தலைமையில் நடைபெற்ற காங்கிரஸ் மகாசபைக் கூட்டத்தில் ஆலயப் பிரவேசம் பற்றிய தீர்மானம் ஒன்று நிறைவேற்றப்பட்டது.

இதைத் தொடர்ந்து கேரளாவில் வைக்கம் என்ற இடத்தில் ஒரு சத்தியாக்கிரகம் 1924ல் நடைபெற்றது. அங்குள்ள கோயிலைச் சுற்றியுள்ள வீதிகளில் ஹரிஜனங்கள் வரலாகாது என்றிருந்த அநீதியை எதிர்த்து இந்த இயக்கம் ஆரம்பமாகியது. தலைமை வகித்து நடத்தியவர் பெரியார் ஈ. வெ. ராமசாமி நாயக்கர் அவர்கள்.

குருவாயூர் ஆலயத்தில் ஹரிஜனங்களை அனுமதிக்க வேண்டும் என்று கோரி 1932ல் கேளப்பன் உண்ணாவிரதமிருந்தார். காந்திஜி கேட்டுக் கொண்டதின் பேரில் இவர் அதை நிறுத்தினார். இதே ஆண்டு நவம்பர் 1ந் தேதி டாக்டர் சுப்பராயன் ஆலயப் பிரவேச மசோதா ஒன்றைக் கொண்டு வர முயற்சி செய்தார். ஆனால் வைஸ்ராய் இதற்கு அனுமதி மறுத்து விட்டார்.

காந்திஜியின் யோசனையின் பேரில் ஆலயப் பிரவேசத்தை அனுமதிக்கப் பொதுஜனக் கருத்தை உருவாக்கக் கேரளாவில் ஓர் இயக்கம் 1936ல் துவங்கியது. ராமேசுவரி நேருவும் ஜி. டி. பிர்லாவும் சில கூட்டங்களில் பேசினார்கள். சமஸ்தானத்தில் அப்போது திவானாக இருந்த சர் ஸி. பி. ராமஸ்வாமி அய்யருடைய யோசனையை ஏற்றுத் திருவாங்கூர் மன்னர் 1936 நவம்பர் 12ந் தேதி கேரள ஆலயங்களில் ஹரிஜனங்களை அனுமதிக்க வேண்டும் என்கிற சரித்திரப் பிரசித்தி பெற்ற பிரகடனத்தை வெளியிட்டார். இதையொட்டியே இவரது சிலை சென்னையில் அண்ணாமலை மன்றத்தை எதிர்நோக்கி வைக்கப்பட்டுள்ளது.

ராஜாஜி தன் மகிழ்ச்சியைத் தெரிவித்து வெளியிட்டுள்ள செய்தியில் சென்ற நூறு ஆண்டுகளில் இம்மாதிரி முக்கியமான பிரகடனம் எதுவும் வெளியிடப்படவில்லை என்றும் இந்தியாவுக்கே திருவாங்கூர் வழிகாட்ட, அந்த சமஸ்தான மக்கள் மன்னர் அவர்களுக்குப் பரிபூரண ஆதரவைத் தர வேண்டும் என்று குறிப்பிட்டிருந்தார்.

ராஜாஜி சென்னையின் முதன்மந்திரியாக இருந்த போது 1939 ஆகஸ்டு 4ந் தேதி ஆலயப் பிரவேச மசோதாவைச் சென்னை சட்டசபையில் பிரேரேபித்தார். இது சட்டமாகியதைத் தொடர்ந்து மற்ற ராஜ்யங்களும் இத்தகைய சட்டத்தை நிறைவேற்றின.

இதைத் தொடர்ந்து 1946ல் மகாத்மா காந்தி மதுரை ஆலயத்துக்கும் பழநி ஆலயத்துக்கும் விஜயம் செய்தார்.

மகாத்மாஜி, பல ஹரிஜனங்களுடன் மீனாக்ஷி அம்மனின் தரிசனத்தை முடித்துக் கொண்டு பழநி சென்றார். அங்கு முருகன் சந்நிதியில் அர்ச்சகர் காந்திஜிக்கும் ராஜாஜிக்கும் தலையில் பெரிய முண்டாசு கட்டி மாலை போட்டு மரியாதை செய்தார்.

காந்தி மகானின் மதுரை - பழனி யாத்திரையின் போது சுமார் முப்பது லட்சம் தமிழ் மக்கள் அவரைக் கண் குளிரக் கண்டு தரிசித்தனர். மகாத்மா வார்தா போய்ச் சேர்ந்தவுடன் இந்த யாத்திரையைக் குறிப்பிட்டு 'ஹரிஜன்' பத்திரிகையில் எழுதுகையில் "நான் யாத்திரை சென்ற வழி நெடுக நடந்த பொதுஜன வரவேற்பு ராஜாஜிக்குத் தமிழ்நாட்டு மக்களிடத்தில் உள்ள செல்வாக்கினால். அல்லாமல் எனக்கு மட்டும் கிடைத்தவை அல்ல", என்று குறிப்பிட்டிருந்தார்.



# மனிதன் மன்னித்தான்

கிறிஸ்துமஸ் அலங்காரத்தில் 'சொர்ண வில்லா' ஒளி மயமாகக் காட்சி அளித்தது. அது ஓர் இரண்டு மாடிக் கட்டிடம். ஒவ்வொரு அறையிலும் குழல் விளக்குகள் மின் ஒளியைப் பாய்ச்சிய வண்ணம் இருந்தன. உச்சி மாடியில் வட்ட வடிவத்தில் 'சொர்ண வில்லா' என்ற பெயர் வண்ண விளக்குகளில் துலங்கியது.

எஜமானியிலிருந்து சமையற்காரன் வரை வீட்டு வராந்தாவில் கூடி ஆவலுடன் யாரையோஎதிர்பார்த்துக்கொண்டிருந்தனர். அவர்கள் வீட்டுக்காரரான பச்சை அம்பாஸிடர் காம்பவுண்டுக்குள் நுழைவதற்கும், 'பப்பா தோத்திரம்' என்று சிந்தியா குதூகலிப்பதற்கும் சரியாக இருந்தது. தந்தைக்காகக் காரின் கதவைத் திறந்து விட்டுச் சிறு பிள்ளை போல் தந்தையின் கைகளைப் பிடித்து அன்ன நடை போட்டாள்.

தேவநேசன், 'அம்மா தோத்திரம்' என்று தன் தாயாருக்கு முதல் வணக்கம் செய்து விட்டு, அன்பு ததும்பச் சுற்றி நின்றவர்கள் அனைவரையும் ஒரு கண்ணோட்டம் விட்டார். வாஞ்சையுடன் கடைக்குட்டி பீட்டரைத் தூக்கிக் கொண்டு மனைவியைப் பார்த்து, ''ரோஸி! என்ன உடம்பெல்லாம் நல்லாப் போச்சா?'' என்று கேட்டார்.

அதற்குள் அவர் தாயார், ''அது என்ன! வெறும் ஜலதோஷம்தானே! அதைப் போட்டு உனக்கு எழுதினாக்கும்'' என்று அந்தப் பேச்சுக்கு முத்தாய்ப்பு இட்டாள்.

வேலைக்காரர் ஒவ்வொருவரையும் அன்பொழுக விசாரித்தார். திருமணமான டிரைவரைப் பார்த்து, ''என்ன விக்டர்! உன் கல்யாணத்துக்குப் பெரியம்மா உதவி ரொம்ப இருந்திருக்கும்'' என்று கேள்வியையும் பதிலையும் அவரே சொல்லிக்கொண்டார்.

ஒருவாறு குசலப் பிரச்னம் எல்லாம் முடிந்தவுடன் தம் அறைக்குப் போய்விட்டார். அவரது அறையில் பூச்சட்டியில் செருகப்பட்டிருந்த எட்வர்டு ரோஸின் வாசனை அவரை முகமன் கூறி வரவேற்றது. மனைவியின் கைவண்ணத்தை ஒவ்வொரு திரைச் சீலையிலும் கண்டார். அறை வாசல் திரையில் 'கர்த்தரே! ரட்சியும்!' என்ற மணிமொழி தையலால் சிறைப்படுத்தப் பட்டிருந்தது.

இன்னும் சிறிது நேரம் போனால் ஜெபக் கூட்டத்தார் அவர் வீடு தேடி வந்துவிடுவார்கள். அவர்களுக்குக் கொடுப்பதற்காக அதிரசமும், முறுக்கும் செய்து வைக்கப் பட்டிருந்தன. தேவநேசன் குளித்து எட்டு முழ வேட்டியும், கோட்டும் அணிந்துகொண்டார். ஜெபம் நடத்த வருபவர்களுக்கு உபசாரம் செய்வது போகப் பிரத்தியேகப் பணமும் உண்டு. நினைத்து முடிப்பதற்குள்



ஜெபக் கூட்டத்தார் 'சொர்ண வில்லா' அடைந்தார்கள்.

அன்று பதின்மூன்றுவது தடவையாக 'எல்லாம் ஏசுவே' என்ற துதிப் பாடலை ரேடியோ கிராம் இசைத்தது.

இருக்கூட்டத்தார் சென்று முடிந்தவுடன் வேலைக்காரர்களுக்கெல்லாம்தேவநேசன், முன்னிலையில் அவர் தாயார் மரியம்மாள் உடைகளும், பணமும் கொடுத்தாள்.

பெரிய பெண் சிந்தியாவும் இளைய பெண் மெல்பாவும் ''லல்லல்லா! லலலல்லா! லல்லல்லா!'' என இசைத்தட்டை வைத்துக் கொண்டு நடனம் ஆடினார்கள். எதையோ பெரிதாகத் தன் மக்கள் ஆடிவிட்டதைப் போல், தாய், தந்தை, பாட்டியார் யாவரும் சடசடவெனக் கைகளைத் தட்டினார்கள்.

இரவு வந்தது. வீட்டில் உள்ள யாவரும் ஆனந்த சாகரத்தில் மிதக்கும்பொழுது சிற்சில சமயங்களில் தேவநேசன் மட்டும் முகத்தைச் சுருக்கிக் கொண்டார். சுரத்தில்லாமல் உட்கார்ந்திருந்த கணவனையே கண் கொட்டாது பார்த்துக் கொண்டிருந்த அவர் மனைவி ரோஸி ''என்னங்க! அலுப்பாக இருக்கிறதா? அப்படியானால் நீங்கள் போய் ஓய்வு எடுத்துக் கொள்ளுங்கள்'' என அன்புக் கட்டளையிட்டாள்.

ஓய்வு என்னும் இரையை உள்ளந்தான் விரும்பியதே ஒழிய, அவர் உடல் விரும்பவில்லை. பாவம்! ஐந்நூறு மைல்களுக்கு அப்பாலுள்ள நடப்பு அவளுக்குத் தெரிந்திருக்க நியாயமில்லை. மனைவியின் உத்தரவுக்கு 'மறுத்தளிப்பு' இல்லாது அவர் தமது அறையைச் சரணடைந்தார்.

மங்களம் காசிராஜன்

ஏகத் தடபுடலாகப் பெண்கள் இருவரும் பையனும் அலங்கரித்துக் கொண்டு தங்கள் தாயாருடன் விடியற்கால ஜபத்துக்குப் பாளையங்கோட்டை போய் விட்டார்கள்.

ஒரு வருஷமும் இல்லாத முறையாக இவ்வருடம் தலையை வலிக்கிறதென்று தேவநேசன் ஜெபத்துக்குப் போகவில்லை. மற்றக் காரியங்களில் ஏறுமாறாக இருந்தாலும் ஜெபத்தில்ரொம்ப அக்கறையுள்ளவள் அவர் தாயார். ''ஏண்டா, தேவநேசன்! ஜெபத்துக்குப் போகாது இப்படிப் படுத்துவிட்டாயேடா!'' என பத்து வயதுச் சிறுவனை அதட்டுவதுபோல் அதட்டினாள்.

''அம்மா! அம்மா! பம்பாயிலேயே எனக்குச் சுகமில்லை. அதனால்தான் நான் வர நாளாகி விட்டது. என்னால் ஜெபம் முடியும்

வரைக்கும் இருக்க முடியாதம்மா!'' என்று கெஞ்சலாகப் பதிலிறுத்தார் தேவநேசன்.

''என்னடா அப்படி ஜூரம்! ஒரு மாத்திரையைப் போட்டுக் கொண்டு அரை மணி நேரம் இருப்பதற்கென்ன?'' என்று எரிச்சலுடன் அதட்டினாள் தாயார்.

''சாதாரண ஆட்களாக இருந்தால் நீங்க சொல்லுகிற மாதிரி கோயிலுக்குப் போய் வந்துவிடலாம். என்னைக் கண்டால் கோயில் பிஷப்பிலிருந்து காவல்காரன்வரைக்கும் வந்து குசலம் விசாரிப்பார்களே! அவர்களிடமெல்லாம் பேச வேண்டாமா? தலையை வேறு வலிக்கிறது...'' புஸ்ஸென்று உள்ளத்துக் குமுறலை வாய் வழியாக ஊதித் தம்மை ஆசுவாசப்படுத்திக் கொண்டார் தேவநேசன்.

''சரி! சரி! எதையாவது ஒரு நொண்டிச் சாக்கைச் சொல்லு. வீட்டிலேயாவது ஜெபத்தைப் பண்ணிக் கொள்! நான் போய் உன் சித்தி வீட்டிலே இந்தப் பலகாரத்தைக் கொடுத்துவிட்டு வருகிறேன். அறைகளையெல்லாம் பூட்டி விட்டேன். விழிப்பாக இரு! கோயிலிலிருந்து அவர்கள் வருவதற்குள் நான் வந்துவிடுவேன்'' என வெளியே கிளம்பினாள்.

கோவில் ஜெபம் முடிந்து திமுதிமுவென்று பந்து மித்திரர்களுடன் கோயிலுக்குப் போயிருந்தவர்கள் வந்தார்கள். யாவருக்கும் முன்பாக ஏதோ பறிபோகிற மாதிரி விந்தியா தன் தகப்பனாரிடம் ஓடி வந்தாள். வந்த வேகத்தில் வழியெல்லாம் அவள் தலையில் உள்ள பூக்கள் மலர்ப் பாவாடை விரித்திருந்தன. ''பப்பா! பப்பா!'' என்று காலணியைக்கூடக் கழற்றாமல் நேரே மாடிக்குப் போய்த் தந்தையைக் கீழே ஹாலுக்கு இழுத்து வந்தாள்.

சின்னக் குழந்தை போல் அவர் கழுத்தைக் கட்டிக் கொண்டு, ''நம்ம வீட்டு வேலைக்காரக் கழுதை என் கிறிஸ்துமஸ் கைக்குட்டையைத் திருடி வைத்திருக்கிறாள், அப்பா'' என்று கோபத்துடன் புகார் சொன்னாள்.

''உன் கைக்குட்டை என்று எப்படியம்மா திடமாகக் கண்டுபிடித்தாய்? ஒரு கைக்குட்டையைப் போலத்தான் இப்போது ஒன்பது கைக்குட்டைகள் கடையில் விற்கின்றனவே!''

''போங்கப்பா! உங்களுக்கு எப்போதுமே இந்த வேலைக்காரர்களைக் கண்டிக்கத் தெரியாது. கோயிலில் அவள் என் கைக்குட்டையால் முகம் துடைக்கும்போது என் சிநேகிதி பிளோரா பார்த்து, என்னிடம் வந்து சொன்னாள். ஜெபம் முடிந்து வந்து பிடுங்கிப் பார்த்தால் கிறிஸ்துமஸுக்கென்று 'கட்டிங் வொர்க்' செய்த கைக்குட்டை. பவழ நிற நூலில் கொத்து ரோஜாப்பூ கட்டிங் செய்திருந்தேன். இரண்டு வாரங்களுக்கு முன்பே இயந்திரத்தில் வைத்திருந்ததைக் காணவில்லை. என்னடான்னு பார்த்தா...இந்தத் தடிக்கழுதை எடுத்திருக்கு... இவளைச் சும்மா விடக்கூடாது. இன்னும் என்னென்னவெல்லாம் எடுத்தாளென்று விசாரித்தாகணும்...''

''அப்படி வேறு ஒரு பொருளும் எடுத்திருக்க மாட்டாளம்மா. அதிகமாகப் போனால் ஒரு ரூபாய் பெறாத பொருளுக்கா இந்த ஆர்ப்பாட்டம் பண்ணுகிறாய்? அதை விட்டுத் தொலை. உனக்கு அதைப் போல் எத்தனை கைக்குட்டைகள் வேண்டுமானாலும் நான் வாங்கித் தருகிறேன். நீ போய்த் துணியை மாற்றிவிட்டு வாம்மா.''

மகள் வாதம் இறக்கம் கண்டவுடன் தாயார் ரோஸம்மாள் தன் குரலை உயர்த்தினாள். ''இன்றைக்கு நாம் அவளைச் சும்மா விட்டோமானால், மற்ற வேலைக்காரர்களுக்கு பயமில்லாமல் போய்விடும். அவசியம் நீங்க இன்னும் என்னவெல்லாம் எடுத்தாள் என்று கேளுங்கள்'' என்று கீச்சக் குரலில் கத்தினாள்.

மனைவி மக்களுக்காகக் கடனே என்று சுரத்தில்லாமல் ''நீ என்னவெல்லாம் நம் வீட்டில் எடுத்திருக்கிறாய்?'' என்று வேலைக்காரப் பெண்ணைப் பார்த்துக் கேட்டார் தேவநேசன்.

எஜமான் கேள்வி எழுந்தவுடன் 'நல்லா உள்ள சோற்றில் மண்ணைப் போட்டுக் கொண்டோமே' என்ற நினைப்பில் மூன்று மாதத்துக்கு முன்பு ஐந்து ரூபாய்க்கு வாங்கிய போலி முத்து மாலையைக் குளிக்கும் அறையிலிருந்து எடுத்ததாக ஒப்புக்கொண்டாள்.

டவுனிலிருந்து அப்போதுதான் உள்ளே நுழைந்த அவர் தாயார் விஷயத்தை அறிந்தவுடன், ''இந்தக் கழுதை மேலே எனக்கு இரண்டு மாதமாகச் சந்தேகம். களவு போன வெள்ளி டம்ளர் இவைகளையெல்லாம் இவதான் திருடியிருப்பா! இப்பொழுதே போலீசுக்குப் போன் பண்ணுகிறேன்'' என்று டயலைச் சுற்றினாள்.

அந்நகரத்திலுள்ள பெரும் புள்ளிகளில் விரல் விட்டு எண்ணக் கூடியவர்களில் தேவநேசனும் ஒருவர். மேலும் பொது ஸ்தாபனங்களுக்கு இவர் கைங்கரியம் நிரம்ப இருந்தது. அவ்வளவு பிரக்யாதி பெற்ற வீட்டிலிருந்து ஆதாரத்துடன் கேஸ் ஒன்று வந்துள்ளது என்றவுடன், சடுதியில் இரண்டு கான்ஸ்டபிள்கள் அனுப்பி வைக்கப்பட்டனர்.

தாயின் நடவடிக்கையைத் தடுக்க வழியில்லாது தேவநேசன் மனத்துக்குள் மறுகினார். மானசீகமாக அவர் அறிவு அழுதது, புலம்பியது எனலாம். 'கேவலம் ஒரு கைக்குட்டைக்காகவா இவ்வளவு அமர்க்களம்?' என்று தமக்குள்ளே கேட்டுக் கொண்டார்.

போலீஸ் தரப்பில் கேட்க வேண்டிய கேள்விகள் கேட்கப்பட்டன. கேள்விகளுக்கு எல்லாம் 'ஆம்' என்றே பதிலிறுத்தாள் வேலைக்காரப் பெண். திட்டமிடப்படாத களவு ஆகையால் திரை இல்லை.

போலீஸாரிடம் வீட்டில் உள்ள யாவரும் மொழு மொழுவென்று குற்றச்சாட்டுக்களை அடுக்கும்பொழுது வீட்டு எஜமானன் மட்டும் மௌனம் சாதித்தது அவர்களுக்கு ஆச்சரியமாக இருந்தது. வேலைக்காரிக்காகப் பரிந்து பேசிய எஜமானனைக் கண்டு போலீசாருக்கு வியப்பாக இருந்தது. ''சார்... அவளை ஒன்றும் செய்ய வேண்டாம். ஏதோ அற்ப ஆசையால் எடுத்துவிட்டாள். அம்மா ரொம்

புரட்சி நடிகர் எம்.ஜி.ஆர்

அளிக்கும்

ஜேயார் மூவீஸ்

# புதிய பூமி

டைரக்ஷன்
**சாணக்யா**

தயாரிப்பு
**P.K.V. சங்கரன்-ஆறுமுகம்**

வசனம்: தென்னரசு
இசை: M.S. விஸ்வநாதன்
ஒளிப்பதிவு: P.N. சுந்தரம்
திரைக்கதை: குகநாதன்



NEGATIVE RIGHTS
CONTROLLED BY
**JAYANTHI FILMS**
(M) PRIVATE LTD, MADRAS-34

SEMBI

சென்னை: **குளோப் • ஸ்ரீகிருஷ்ணா • மேகலா • நூர்ஜஹான்** மற்றும் தென்னாடெங்கும்

பக் கோபக்காரங்க? அவசரத்தில் போன பண்ணிவிட்டார்கள்: கேஸைத் தள்ளி விடுங்க'' என்று தாஜா பண்ணி அவரது வழக்கப்படி போலீசாருக்கு 'டிப்ஸ்'கொடுத்து அனுப்பிவிட்டார்.

இங்கு மன்னிப்புப் படலம் நடந்து கொண்டிருந்தபொழுது ஜங்ஷன் போலீஸ் ஸ்டேஷனில் குற்றப் பத்திரிகை ஒன்று 'டெலி பிரிண்டரில்' வந்து பதிவாகியது. 'நெடு நாளாகத் தேடிய குற்றவாளி கிடைத்தான்' என்பதுதான் அது. கட்டுக் கட்டாக மில்லி லிருந்து வாகன்களில் செல்லும் துணி மூட் டைகளைப் பேல் பேலாக 'அபேஸ்' பண்ணி வந்த கும்பல் கண்டு பிடிக்கப்பட்டது. கொள்ளை யடிப்பதிலும் பாகஸ்தர்கள் இருந்தார்கள். அப்பாகஸ்தர்களில் ஒருவர் தேவநேசன் என்றிருந்தது. அவருக்குத்தான் பம்பாயில் ஜவுளிக் கடை.

ஏனெனில் அவர் வீட்டிலிருந்துதானே இப்பொழுது ஒரு கேஸ் வந்தது? தேவநேசன் யார் என்று கண்டு பிடிக்க மூளையைச் செல விட வேண்டிய அவசியம் போலீஸ் இன்ஸ் பெக்டருக்கு ஏற்படவில்லை.

மேலிடத்து உத்தரவின் பிரகாரம் இரண்டு போலீஸ்காரர்களுடன் போய்த் தேவநேசன் கையில் விலங்கு பூட்டினர்.

அதைக் கண்ட வேலைக்காரப் பெண் திடுக் கிட்டு நடுங்கினாள். தேவநேசனின் தாயாரும் மனைவியும் செயலிழந்து வாயடைத்துப் போயினர். பெரிய பெண்ணும் சிறிய பெண் ணும் துக்கம் தாளாமல் கதறிவிட்டனர். ஆனால் தேவநேசன் மட்டும் அமைதியாகத் தலையைக் குனிந்தபடி இருந்தார்.

''ஐயோ! எங்க எஜமானனை விட்டுடுங்க. நான்தான் திருடி. என்னை என்ன வேணு மானாலும் செய்யுங்க. அவர் ஒரு பாவமும் அறியாதவர். செய்யத் தெரியாதவர்....'' என்று வேலைக்காரப் பெண் துடித்தாள்.

அவளை ஒரு கணம் வெறித்துப் பார்த்த தேவநேசன் விரக்தியோடு சொன்னார்: ''உனக்கு இது விளங்காதுதான். இட்ட மிடப்படாத களவு. ஆகையால் இரையில்லை என்று சொன்னேனே. இட்டமிட்ட கள வுக்குத் திரை உண்டு என்று தெரிந்துகொள். அந்தத் திரை மூடியிருந்ததால் நான் யார் என்று உனக்கும் சரி, இந்த ஊரில் உள்ளவர் களுக்கும் சரி, என்னைப் பற்றித் தெரியவில்லை. இப்பொழுது அந்தத் திரை கிழித்தெறியப் பட்டு விட்டது. நான் கயவனாகக் காட்சி யளிக்கிறேன். எனக்குரிய தண்டனையை ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டும்'' என்று தவறுகளை உணர்ந்து கொண்ட பின், அவர் தத்துவம் பேசியபோது.

''எஜமான்... எஜமான்... என்னை நீங்க மன்னிச்சீங்களே எஜமான்... இப்ப உங்களை யாரும் மன்னிக்க மாட்டாங்களா?'' என்று கதறினாள் வேலைக்காரப் பெண்.

''நான் மனிதன்; அதனால் மன்னித்தேன். ஆனால் சட்டம்?'' என்று எழுத்தறிவில்லாத அந்த வேலைக்காரியிடம் ஒரு பெரிய கேள் வியைக் கேட்டுவிட்டுப் போலீஸ் வானில் போய் ஏறினார் தேவநேசன்.















## போட்டோ நியூஸ்

புதுமுகப் புன்னகை யொன்றை முதல் பக்கத்தில் ஏந்தி வெளிவந்துள்ள புதுப் பத்திரிகையான போட்டோ நியூஸினைப் புன்னகையுடன் வரவேற்கிறோம். முதல் இதழில் பத்திரிகையின் பெயருக்கு ஏற்ப நிறையப் புகைப்படங்களும் செய்திகளும் உள்ளன. சினிமாச் செய்திகள் தவிர மற்ற செய்திகளுக்கும் கொஞ்சம் இடம் கொடுத்திருக்கிறார் ஆசிரியர் என். கே. பாலகிருஷ்ணன்.

போட்டோ நியூஸ், மாதம் மும்முறை, 6-ஏ, நௌரோஜி தெரு, சென்னை—10. விலை 15 காசு.

## மாயத் தாகம்

பல நாவல்கள் எழுதிப் பழகிய கை ஸ்ரீ ஆர். சண்முகசுந்தரத்தின் கை. கொங்கு நாட்டுச் சூழ்நிலையிலே, பாத்திரங்களை உருவாக்கி அங்கு பழகும் பேச்சுத் தமிழிலே உலவ விட்டிருக்கிறார். வட்டாரப் பேச்சிலே தாகம் கொண்டவர்கள் மாயத் தாகத்தைப் படித்து விடாய் தீர்த்துக் கொள்ளலாம். கதைத் தாகம் கொண்டவர்கள் இதனைப் படித்துத் தாகம் தீருவார்களா என்பது சந்தேகமே. ஆயினும் ஆற்றொழுக்கான நடையிலே மனத்தைக் கொடுத்துத் தாகம் நீங்கிய உணர்வைப் பெறுவார்கள் என்பதில் ஐயமில்லை.

## மாஸ்கோ டயரி

'சரித்திரம் ஸ்டாலினை எப்படி மதிப்பிடும்? அவரை நிச்சயமாக மார்க்ஸ், எங்கல்ஸ், லெனின் இவர்களுடைய கூட்டத்தில் சேர்க்க முடியாது. அவர் உயிரோடு இருந்த போது அவர்களுக்கும் மேலான பதவி வகித்த போதிலும், செத்தபின் அவர்களுக்குக் கீழேதான் இருக்க வேண்டும்.'

இப்படி எடை போடுபவர் ருஷ்யாவில் பாரதத் தூதராகப் பணியாற்றிய ஸ்ரீ கே.பி. எஸ். மேனன் அவர்கள். தமது 'மாஸ்கோ டயரி'யை சீர் இலக்கியப் பொக்கிஷமாக, விருப்பு வெறுப்புக்கு இடம் கொடாமல் சிந்தனைக்கு ஒரு செல்வமாகத் தந்திருக்கிறார். தமிழாக்கம் செய்துள்ள ஸ்ரீ கே. வி. சங்கரநாராயணன் தாம் மேற்கொண்ட பணிக்கு வழு கூற முடியாமல் வெற்றி கண்டிருக்கிறார்.

## வாழ்க்கை: ஹிந்துமத நோக்கு

வாழ்க்கைத் தத்துவத்தைச் சிறப்பாக எடுத்து இயம்பும் ஆற்றல் பெற்றுள்ள பெருமக்களிலே டாக்டர் எஸ். ராதாகிருஷ்ணன் அவர்கள் முதன்மையானவர். நமது புராதனமான ஹிந்து மதம் எத்தனையோ புயல்களையும் பேய் மழைகளையும் கண்டாலும், வாழக் கற்றது; கற்ற வாழ்வைத் தத்துவமாக்கி உலகம் நலம் பெற நல்கும் சக்தி வாய்ந்தது. எம்மதத்தையும் சம்மதமாக்கி, 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்னும் கொள்கையை எடுத்து ஓதி, வையகம் துயர் தீர்ந்து வாழ வழிகாட்டுவது. அதன் சிறப்பியல்பை ஆராய்ச்சி நோக்கோடு, பாமரருக்குப் புரியும்வண்ணம் பிட்டுப் பிட்டு வைக்கிறார் ஸ்ரீ ராதாகிருஷ்ணன்.

பொக்கிஷமெனப் பாதுகாக்கக் கூடிய மேற்கண்ட மூன்று புத்தகங்களையும் வாசக வட்டத்தார் வெளியிட்டிருக்கிறார்கள். ஆண்டுச் சந்தா ரூ. 25 கட்டிவிட்டால் ஆண்டுதோறும் இப்படி ஆறு புத்தகங்கள் வீடு தேடி வரும். தேவையான நூல் மட்டும் போதும் என்பவர்கள் 5 ரூபாய் கொடுத்துத் தனியாகவும் பெறலாம்.

பிரசுரம்: வாசகர் வட்டம், சென்னை—17.

## கபாலகுண்டலா

வங்க இலக்கிய வளர்ச்சிக்கு வித்திட்டவர்கள் வரிசையிலே பங்கிம் சந்திரர் முக்கியமான இடம் பெற்றவர். வரலாற்றுப் பின்னணியிலே அவரது நவீனங்கள் இலக்கியப் பரம்பரைக்கு வழிகாட்டியாக விளங்குபவை. கபால குண்டலாவையும் நவகுமாரனையும் இணைத்துப் பிரிக்கும் இந்த நவீனத்தைப் படிக்கும் பொழுது வாசகர்களும் தங்களை அவர்களில் ஒருவராகவே அநுபவிக்கும் வண்ணம் ஆசிரியர் கதையைப் பின்னிக் கொண்டு போயிருக்கிறார். மொழிபெயர்ப்பாசிரியர் ஸ்ரீ த. நா. குமாரஸ்வாமி அவர்களோ வங்கம் — தமிழ் இருமொழிகளிலும் வல்லுநர். இலக்கிய மணம் கமழத் தமிழாக்கித் தந்தவருக்குத் திருப்தி ஏற்படவில்லை போலும்! இல்லாவிட்டால் மொழிபெயர்ப்பு நூலில் தேவாரத்தையும் திருக்குறளையும், புறநானூற்றையும் பரிபாடலையும், பத்துப் பாட்டையும், பெருங்கதையையும் தலைப்புக்கு ஒரு குறுந் தலைப்பாகப் புகுத்தும் பணியை மேற்கொண்டிருப்பாரா? முதற் பகுதி ஒன்பதாம் அத்தியாயத் தொடக்கத்தில், 'கதைக்குத் தொடர்பிராத இரண்டொரு விஷயத்தை நான் நடுவே புகுத்துவதைப் பற்றி உங்களுடைய மன்னிப்பைக் கோருகிறேன்' என்று மூல ஆசிரியர் கூறுவது போலத் தாமும் வாசகர்களின் மன்னிப்பைக் கோரிவிடலாம் என்று தைரியமோ, என்னவோ? 'கபால குண்டலா' மங்களநூலகத்துக்குத்தான் முதற்பதிப்பே ஒழியத் தமிழ் வாசகர்களைப் பொறுத்த வரையில் பழைய பதிப்புத்தான்: பிரசுரம்: மங்கள நூலகம், நுங்கம்பாக்கம், சென்னை—34. விலை: 2.75.



## சிமெண்ட் உபயோகிப்போர்க்கு ஓர் நற்செய்தி!

தென் ஆற்காடு, திருச்சிராப்பள்ளி, தஞ்சாவூர், புதுச்சேரி, பாலக்காடு, கண்ணனூர், கோழிக்கோடு, தெற்கு கனரா ஜில்லாக்களில் நீங்கள் வெகுவாக விரும்பும்

# சங்கர் பிராண்ட் சிமெண்ட்




இப்போழுது தாராளமாகக் கிடைக்கிறது.

எமது சங்கர்நகர், சங்கரி தொழிற்சாலைகளில் உற்பத்தி பெருக்கியதன் மூலம் உங்களது தேவையை எங்களால் பூர்த்தி செய்யமுடியும்.

ஸ்டாக்கிஸ்டுகளாக விரும்புவோர் விண்ணப்பிக்கவும்



இந்தியா சிமெண்ட்ஸ் லிமிடெட்
ரிஜிஸ்டர்ட் ஆபீஸ் : தனபில்டிங்
175/1, மவுண்ட் ரோட், சென்னை-2.
தொழிற்சாலைகள் :
சங்கர்நகர் (திருநெல்வேலி ஜில்லா) மற்றும் சங்கரி (சேலம் ஜில்லா)



# விசிலைக் கொடு!

ஸீயார்



''விசிலைக் கொடய்யா, கண்டக்டர்!''

''இன்னிக்கு ஆபீஸ் போய்ச் சேர்ந்தாற்போலத்தான் போங்கோ!''

''பாருங்களேன்! டிக்கெட் கொடுக்க ஆரம்பித்துப் பதினேழு நிமிஷங்கள் ஆகிவிட்டது! இன்னும் விசில் கொடுத்த பாடில்லே!''

''அரைச்செவிடு, பகல் குருடு இதுகளையெல்லாம் டிரான்ஸ்போர்ட்டிலே இன்னும் வைத்துக் கொண்டு மாரடித்தால் வண்டி எப்படி ஸார், நேரத்துக்குப் போகும்?'' இத்தனை சொல்லம்புகளையும் தாங்கிக் கொண்டு கண்டக்டர் தன் கருமமே கண்ணாக, பஸ்ஸுக்குள் அங்குலம் அங்குலமாக நகர்ந்து கொண்டு டிக்கெட் கொடுத்துக் கொண்டிருந்தார்.

அது ஆபீஸ்காரர்கள் நிறைந்த பஸ். வழக்கமாக 9–20க்குக் காலையில் மாம்பலத்தை விட்டுக் கிளம்பி பாரீஸ் போய்ச் சேருவதற்குள் இந்த 'அர்ச்சனைகள்' கண்டக்டருக்குக் கிடைத்தே தீரும்.

''விசிலைக் கொடுத்துவிட்டு வேலையைப் பாருய்யா! நல்ல ஆளுய்யா, இந்த வண்டிக்கு வந்து சேர்ந்தாயே!''

மணி ஒன்பது–நாற்பது ஆகிவிடவே, பின் ஆசனக்காரர் ஒருவர் அளவு மீறிப் பொறுமை இழந்து விட்டார்!

அவர் என்ன செய்யப் போகிறாரோ என்று நான் பயந்தேன்.

''என்னப்பா, கண்டக்டர்! விசிலைக் கொடுக்கப் போகிறாயா, இல்லே வேறு வண்டியிலேஎங்களைஏற்றப்போகிறாயா!''

''விசிலைக் கொடுத்துட்டு மறுஜோலி பாருய்யா!''

''செவிடன் காதிலே சங்கு ஊதின கதையா இருக்கே! கண்டக்டர், விசிலைக் கொடுக்கப் போகிறாயா, இல்லையா? இரண்டிலே ஒண்ணு சொல்லிட்டு மறுவேலே பாரு!'' ஒரு கூட்டம் பக்கவாத்தியம் வாசிக்க ஆரம்பித்து விடவே கண்டக்டர் எரிமலையாகச் சீறினார்.

''யாரய்யா அது. விசிலைக் கொடுன்னு மிரட்டறது? எங்கேயா அந்த ஆளு?'' என்று கும்பலைக் கலைத்துக் கொண்டு கண்டக்டர் பின் ஆசனக்காரரை நோக்கித் தாவினார்; டிரைவர் தம் இடத்திலிருந்தபடியே, ''இந்தாப்பா, முனுசாமி! வேலையைக் கவனிப்பா! அவங்க அப்படித்தான் பேசுவாங்க. தெரிஞ்ச விஷயம் தானே?'' என்றார் சமாதானப் படுத்தும் முறையில்.

ஆனால், கண்டக்டர் யார் தடுத்தும் நிற்கவில்லை.

''ஏனய்யா! நான்தான் கேட்டவன்! இப்ப என்ன பண்ணப் போறே! தலையை வாங்கிடுவாயோ!'' என்று அவர் அடிக்கப் போவதுபோல் எழுந்தார். அவருக்குப் பக்க வாத்தியம் வாசித்த சிலரில், ''ஆமாம், கண்டக்டர்! நாங்களும்தான் கேட்டோம், விசிலைக் கொடுன்னு! இப்ப நீ என்ன பண்ணிடுவே!'' என்றார் ஒருவர்.

பஸ்ஸுக்குள் பெரிய கலாட்டா ஆகிவிட்டால் என்ன செய்வது என்று சிலர் தடுக்க முயன்றனர். அப்போது, ''இந்தாங்கய்யா! இருக்கிறதோ ஒரு விசில்! ஒண்ணே ஒண்ணுதான் சர்க்காரிலே கொடுத்திருக்காங்க! விசிலைக் கொடு விசிலைக் கொடுன்னு ஒம்பது பேரு சேர்ந்து கேட்டா நான் யாருக்குனு கொடுப்பேன், இந்தா, பிடி! வச்சுக்க விசிலே!'' என்று அந்தப் பின் ஆசனக்காரரிடம் விசிலைக் கொடுத்து விட்டு, ''ஹூம்! இன்னும் யாரு டிக்கெட் வாங்கலே... டிக்கட் டிக்கட்?'' என்று தம் கருமத்திலே கண்ணாகி விட்டார் கண்டக்டர்!

பஸ்ஸினுள் எழுந்த இடியோசை போன்ற சிரிப்பொலியின் அதிர்ச்சி தாங்காமல் பஸ்ஸும் கிளம்பி விட்டது.



சென்னை, P. W. D., எக்ஸிகியூடிவ் என்ஜினியர் திரு ஆர். ராதாகிருஷ்ணன் B. E. அவர்கள் குமாரத்தி செல்வி ஆர். ஜெயலட்சுமி B. Sc.,க்கும், சென்னை, திரு ஏ. கணபதி சாஸ்திரி B. A., L. T., அவர்கள் குமாரர் செல்வன் ஜி. மல்லிகார்ஜுனன் B. Sc., B. E. அவர்களுக்கும் சமீபத்தில் சென்னையில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள்!




(சென்ற வாரத் தொடர்ச்சி)

சிவசாமி வெளியூரிலிருந்து வீடு திரும்பினார். மோகன் சென்னையில் ஜாகை வைத்திருக்கிறான் என்ற செய்தியையும் கொண்டு வந்தார். பெண்களுக்கே உரித்தான முறையில் மீனாட்சி பதில் குரல் கொடுத்தாள்.

''முன்பு வேலையை முன்னிட்டு வந்தபோது நேரே இங்கே வந்தவனுக்கு இப்போது வழி மறந்து விட்டதோ ?''

சிவசாமி சிரித்தார். ''இங்கேயும் உன் அவசர அபிப்பிராயம் தலை நீட்டுகிறதே ! மோகன் தாயைப் பறி கொடுத்தவன். அந்தத் துயரத்திலிருந்து ஓரளவு நீங்கி நாலு இடங்களுக்குப் போக வர இன்னும் சில நாட்கள் செல்லும். சாமான்சட்டுகளோடும், மனைவி, தம்பி இவர்களோடும் வந்தவன் நேரே இங்கே வந்துவிட்டு அங்கே போக வேண்டுமா? மேலும் உன் நினைவுக்கு மாறாக அவன் திருமணம் நிகழ்ந்திருக்கிறபோது பளிச்சென்று மனைவியோடு இங்கே வருவதை நீ எந்த அளவுக்கு விரும்புவாயோ என்பதை அவன் எண்ணிப் பார்க்கமாட்டானா? அதையும் கடந்து, நீ அவனுக்கு விருந்து வைக்கிறாய் என்று வைத்துக் கொள்வோம். இப்போதைய நிலையில் அவன் மனம் அதை ஏற்குமா? இதையெல்லாம் நீ ஏன் எண்ணிப் பார்க்கமாட்டேன் என்கிறாய் ?''

பொங்கி வரும் பாலில் நீர்த் துளிகள் விழுந்தது போல் மீனாட்சியின் படபடப்பு அடங்கிற்று. ''நீங்கள் சொல்வது வாஸ்தவம். நாம் முதலில் அவன் ஜாகைக்குப் போய் அவர்களை அழைத்துவிட்டு வருவோம். இன்று மாலையே போவோமா ?'' என்றாள்.

''இதிலும்கூட அவசரந்தானா? கொண்டு வந்த சாமான்களைச் சரியானபடி பங்கிடு செய்து அவர்கள் குடும்பத்தைத் தொடங்கட்டுமே! நம்மைக் கண்டதும் அவர்களுக்குத் தலைகால் புரியாது. சாப்பிடும்படி வற்புறுத்துவார்கள். சரியாக எதுவும் செய்ய முடியாமல் திண்டாடுவார்கள். நான் வந்த ரயிலில் என்னோடுதானே அவர்களும் வந்தார்கள் ?''

''அதை நீங்கள் இதுவரையில் சொல்லவில்லையே !''

''எங்கே? மோகன் சென்னையில் ஜாகை வைத்திருக்கிறான் என்று கூறி முடிப்பதற்குள்ளேயேதான் நீ அவன் மீது குற்றப் பத்திரிகை படிக்கத் தொடங்கி விட்டாயே ! ஆகட்டும்; நாளை மாலை போய் வரலாம்.''

இந்த உரையாடலைச் செவிமடுத்த லீலா தன் மன உளைச்சலின் ஊடேயும் தகப்பனாரின் விவேகத்தையும் அமரிக்கையான போக்கையும் வியந்து கொண்டாள். அம்மாவின் படபடப்பான இயல்பை எண்ணி நகைத்துக் கொண்டாள்.

நாட்கள் நகர்ந்தன; நகர்ந்து கொண்டே இருந்தன. மோகன் இந்தப் பக்கம் வரவில்லை. அவனிடமிருந்து தகவலும் எதுவும் வரவில்லை.

''இன்று என்ன? அன்று முதலே அவன் சொல்வது ஒன்றும் செய்வது ஒன்றுமாகத் தான் இருக்கிறான்!'' என்று மீனாட்சி அலுத்துக் கொண்டாள்.

அடுத்த முறையாகச் சிவசாமி சுற்றுப் பயணம் முடிந்து வந்து மருமகனைப் பார்க்கப் போனபோது அவன் தன் மனைவியைச் சங்கரன் கோட்டைக்கு அனுப்பிவிட்டுப் பாபுவும் அவனும் தற்போது ஹோட்டலில் சாப்பிட்டுக் கொண்டிருக்கிறார்கள் என்ற தகவல் தெரிந்தது.

'ஏன்....? ஏன்...? ஏன்...?'

தாய் பெண் இருவர் உள்ளங்களிலும் கேள்விகள் எழுந்து துளைத்தன.

'' 'நேற்று வெட்டிய நீர் நிலையில் முந்தாநாள் முதலை வந்தது' என்பது போல் இருக்கிறதே, இந்தக் கதை ! காரணம் என்னவாம் ?''

''அதுதான் தெரியவில்லை. மோகனின் முகம் தெளிவாக இல்லை. பேசுகிறான், குரல் வறண்டு ஒலிக்கிறது; சிரிக்கிறான், அது போலியாக இருக்கிறது.''

இதைச் சொல்லும்போது அவர் முகத்தில் கவலை தேங்கி நின்றது. சொல்லி முடித்ததும் அவரிடமிருந்து நீண்ட பெருமூச்சு வெளிப்பட்டது.

'இப்போது இவரிடம் மிகவும் ஜாக்கிரதையாகப் பேச வேண்டும்' என்று மீனாட்சி தன்னை எச்சரித்துக் கொண்டாள்.

அடுத்த வாரத்தில் சிவசாமி வெளியூர் சென்றார். இடையே இருமுறை மருமகனிடம் போய் வந்தார். அவனிடமிருந்து அவரால் ஏதும் அறிய முடியவில்லை.

அந்தத் திறத்தில் கணவரைவிடத் தான் மேம்பட்டவள் என்று எண்ணிக் கொண்ட மீனாட்சி, அவர் சென்ற அன்று மாலையே மோகனைப் பார்க்கப் போனாள்.

மோகன் அலுவலகத்திலிருந்து வந்திருக்கவில்லை. பாபு மட்டும் பள்ளியிலிருந்து வந்திருந்தான். மீனாட்சி அவன் வாயைக் கிளறினாள். "அண்ணாவும் மன்னியும் சினிமாவுக்குப் போய் வந்தார்கள். வந்தது முதல் ஒருவரோடு ஒருவர் சரியாகப் பேசிக் கொள்ளவில்லை. மறு நாள் இரவு இருவரும் ஊருக்குப் போனார்கள். அண்ணா மட்டும் திரும்பி வந்தான். இப்பொழுதும் அவன் சிடுசிடுப்பாகத்தான் இருக்கிறான். எனக்கு அவனோடு பேசவே பயமாக இருக்கிறது; அவனைப் பார்க்கவே பயமாக இருக்கிறது!" என்ற சிறுவனின் குரலில் அழுகை எட்டிப் பார்த்தது.

சிறுவனின் வாக்குமூலம் மீனாட்சியின் உள்ளத்தில் பயங்கரமான பல சிந்தனைகளைத் தூண்டிவிட்டது: அறையில் வந்து நுழைந்த மோகனின் காலடி ஓசை அவள் சிந்தனையைக் கலைத்தது.

எதிர்பாராத விதமாக அந்த இடத்தில் அவளைக் கண்ட மோகன், "ஓ!...வாருங்கள்" என்றான். அவன் முக மாறுதல்களை அவள் நுணுகி ஆராய்ந்து அறியத் தவறவில்லை.

உடை மாற்றிக் கொண்டு அவள் அருகே வந்து அமர்ந்த மோகன், "எல்லாரும் சௌக்கியமா?" என்றான்.

மீனாட்சி, "உம்" என்றாள்.

கலகலவெனப் பேசுவது தவிர வேறு அறியாத மாமி மௌனத்தைக் கடைப்பிடிப்பது மோகனுக்குப் பெரும் வியப்பை உண்டு பண்ணியது. மேலே தொடர்ந்து என்ன பேசுவது என்று புரியாமல் சற்று நேரம்



தவித்தான். அவன் தவிப்பைப் புரிந்து கொண்டு மீனாட்சியே பேசினாள்: "ஊருக்குப் போயிருந்தாயாமே, என்ன விசேஷம்?"



"அந்தப் பெண்ணைக் கொண்டுபோய்விட."

"'அந்தப் பெண்!' — எந்தப் பெண்? அவளுக்கென்று ஒரு பெயர் இல்லையா?.... இதெல்லாம் கொஞ்சம்கூட நன்றாயில்லை!"

மோகன் சிரித்தான். அதில் சூடு பறந்தது. மீனாட்சி அதை உணர்ந்தாள்.

"பெயரைக்கூடச் சொல்லப் பிடிக்காத அளவுக்கு, கல்யாணம் ஆகி ஒருசில நாட்களுக்குள் அப்படி என்ன கசப்பு?"

மோகன் பாபுவைப் பார்த்தான். அடங்கி ஒடுங்கி மூலையில் பதுங்கியிருந்த பாபு அவன் பார்வையைக் கண்டு நடுங்கினான்.

"வேறுவிடம் போய் உட்கார்ந்து படியடா!" என்றான் மோகன்.

பாபு புத்தகப் பையுடன், 'தப்பினேன், பிழைத்தேன்!' என்று எடுத்தான் ஓட்டம்!

"கசப்பும் இல்லை, இனிப்பும் இல்லை, மாமி. அவள் அம்மாவுக்கு உடம்பு சரியில்லை என்று செய்தி வந்தது."

"தந்தியா, தபாலா?"

"தந்திதான்; 'ஆர்டினரியா, எக்ஸ்பிரஸா?' என்பது அடுத்த கேள்வியா?"

"இப்போது எப்படி இருக்கிறதாம்...? கடிதம் வந்ததா?"

"....ஊ...ம்... வந்தது. பரவாயில்லையாம்."

"மோகன், 'என் சொந்த விஷயங்களில் தலையிட நீங்கள் யார்?' என்று ஒரே வாக்கியத்தில் நீ எடுத்தெறிந்து பேசி விடலாம். அப்படிப் பேசக்கூடிய பிள்ளை அல்ல என்பதனாலும், உன் அப்பா, 'இனி நீங்கள்தான் என் குழந்தைகளுக்குப் பெற்றோர்' என்று மாமாவிடம் அன்று சொன்னதாலும் இவ்வளவு பேசுகிறேன். நீயோ ஒரு பொய் சொல்லி, அதை மறைக்க ஒன்பது பொய்யை உருவாக்குகிறாய். இது நியாயமா? புத்திசாலியான நீ, நான் எல்லாவற்றையும் நன்றாக அறிந்து கொண்டுதான் வந்திருப்பேன் என்பதை ஏன் ஊகிக்கவில்லை? என்னிடம் ஒன்றையும் மறைக்காதே, மோகன்!"

நிமிர்ந்திருந்த அவன் தலை தானாகவே கவிழ்ந்தது.

"மோகன்! பெற்ற பிள்ளையாக நினைத்து உன்னைக் கேட்கிறேன்; கல்யாணிக்கும் உனக்கும் என்ன மனஸ்தாபம்?"

"ஒன்றும் இல்லையே!"

"சினிமாவிலிருந்து வந்தது முதல் நீ அவளோடு சுமுகமாக இல்லை!"

"சினிமாவா?"

''பூலோகமோ கைலாசமோ என்று நடிக்காதே, மோகன். கல்யாணியை அழைத்துக் கொண்டு சங்கரன்கோட்டைக்குப் போவதற்கு முதல் நாள் நீ அவளோடு சினிமாவுக்குப் போகவில்லை ?''

''....நான் வருவதற்கு முன்னால் பாபு அப்படிச் சொன்னானோ?''

''பாபு ஏன் சொல்கிறான்? அங்கே நம் வீட்டுக்கு எதிர் வீட்டு — ''

''எந்தத் தியேட்டர், என்ன படம் என்று அவர்கள் சொன்னார்களா?''

''நீ முன்பு அங்கே வந்து இரண்டு நாட்கள் தங்கியிருந்த போது அந்த அம்மாள் உன்னைப் பார்த்திருக்கிறாள். 'உன் மருமகனையும், அவன் மனைவியையும் தியேட்டரில் பார்த்தேன்' என்று அவள் சொன்னாள். தியேட்டர், படம் முதலிய விவரங்களை அவள் சொல்லவும் இல்லை, நான் கேட்கவும் இல்லை.''

''உண்மைதான் மாமி! மறந்து போய் மறுத்து விட்டேன்.''

''மறந்து போய் மறுக்கவில்லை; மறைக்க முயன்று மறுத்துப் பார்த்தாய்; பலிக்கவில்லை; பொய் நிலைக்கவில்லை; அது போகட்டும். திடீரென்று அவளோடு என்ன சண்டை ?''

''சண்டையாவது, மண்ணாங்கட்டியாவது மாமி? அப்படி யார் சொன்னார்கள்? பாபு சொன்னானா?''

''திரும்பத் திரும்ப அந்தக் குழந்தையின் பெயரை ஏன் இழுக்கிறாய்? வேதாளம் முருங்கை மரம் ஏறின கதையாக மீண்டும் மீண்டும் ஒவ்வொரு பொய்யாக ஏன் சொல்கிறாய்? சினிமாவுக்குப் போகவில்லை என்றது பொய்; கல்யாணியின் அம்மாவுக்கு உடம்பு சரியில்லை என்றது பொய்; தந்தி வந்தது பொய்; பிறகு உடம்பு குணம் என்று கடிதம் வந்ததும் பொய் ! மோகன், உல்லாசப் பறவைகளாக இருக்க வேண்டிய இளம் தம்பதிகள் பிளவு கொண்டு இப்படிப் பிரிந்திருப்பது சரியா? ஹோட்டல் சோறு தின்று நீயும் குழந்தை பாபுவும் உடம்பைப் பாழ்படுத்திக் கொள்வது முறையா? சொல் மோகன், சொல் !''

மோகன் நெடுமூச்செறிந்தான். அறையில் பரவி வந்த இருள் அவனைத் தூண்டவே, எழுந்து விளக்கைப் போட்டான்.

''அடடே!...'' என்று மீனாட்சி எழுந்தாள். ''இருட்டி விட்டதே ! லீலா கவலைப்படுவாள்!'' என்று எழுந்தாள்.

அந்த வெள்ளிக்கிழமை.

மோகனும் கல்யாணியும் அருகருகே அமர்ந்து பஸ்ஸில் போய்க்கொண்டிருந்தனர். பஸ் எழும்பூர், ரயில் நிலைய நிறுத்தத்தை அடைந்து நின்றது. கல்யாணியின் பார்வை ரயில் நிலையத்தின் பக்கம் சென்றது. உடனே அவள் உடல் குலுங்கிற்று. மோகன் அவளைத் திரும்பிப் பார்த்தான். அவள் கண்கள் மூடி இருந்தன.

''என்ன கல்யாணி?''

கல்யாணி கண்களைத் திறந்தாள். பஸ் ஓடத் தொடங்கியது.

''ஏன் கல்யாணி உன் உடம்பு இப்படிக் குலுங்கிற்று ? கண்ணையும் இறுக மூடிக் கொண்டு விட்டாய்; என்ன சமாசாரம்?''

கல்யாணி அவனை மலங்க மலங்கப் பார்த்தாள்; அசடு வழியச் சிரித்தாள். ஆனால் அவனுடைய கேள்விக்கு எதுவும் பதில் சொல்லவில்லை. ஆனால் மோகன் அந்த அளவில் அதை விட்டு விடாமல் ஒரே கேள்வியை மீண்டும் மீண்டும் கேட்டான்.

''அங்கே ஒரு... பிச்சைக்காரன்....''

''ஓகோ!.... பிச்சைக்காரர்களைக் கண்டால் உனக்கு....!''

''அது மட்டுமில்லை; அவனுடைய.... கையும் காலும்.....''

''சரி...சரி....'' என்று அந்தப் பேச்சுக்கு முற்றுப்புள்ளி வைத்தான் அவன்....ஆனால்...

பஸ்ஸிலிருந்து இறங்கித் தியேட்டருக்குப் போவதற்குள் வழியில் எத்தனையோ பிச்சைக்காரர்கள்; அவர்களில் எத்தனையோ தொழுநோயர்கள். மோகனுக்கு அவர்களைப் பார்க்க அருவருப்பாக இருந்தது. கல்யாணியோ அவர்களைப் பார்த்தும் பொருட்படுத்தாமல் அவனோடு நடந்தாள்.

'ஒரு வேளை இவள் எழும்பூர் ரயிலடியில் பார்த்த பிச்சைக்காரன் படுமோசமான தோற்றத்தில் இருந்திருப்பானோ!' என்று எண்ணிக் கொண்டான் அவன்.

திரையில் படம் ஓடிக் கொண்டிருந்தது. மோகனின் மனம் அதில் ஒன்றவில்லை. அவன் உள்ளத்தில் கரட்டோணான் புகுந்திருந்தது. அதற்கு ஏற்ப, கல்யாணியும் மனத்தைப் படத்திலே செலுத்தாமல் அருகே இருந்த அவனுடைய முகத்தைத் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டிருந்தாள். இருட்டில் அவள் கண்கள் பளபளப்பதை அவன் ஓரக் கண்ணால் கவனித்துக் கொண்டேயிருந்தான். அப்போது பளிச்சென்று அவனுக்கு ஒன்று நினைவு வந்தது.

சென்னையில் ஜாகை வைப்பதற்காக மோகன் மனைவியையும் தம்பியையும் அழைத்து வந்தபோது எழும்பூர் நிலையத்தில் இறங்கியதும் கல்யாணி நாற்புறமும் பார்வையை ஓட்டினாள். உடனே கண்களை மூடி உடம்பைச் சிலிர்த்துக் கொண்டாள். மோகன் அதைக் கவனித்தான் ; அப்போது அதைப் பொருட்படுத்தவில்லை. இப்போது அந்தக் காட்சி நினைவில் இடம்பெற்ற போது ஒரு முக்கியத்துவமும் பெற்றது.

'...இன்று நிலையத்துக்கு வெளியே தென்பட்ட தொழுநோய்ப் பிச்சைக்காரன் அன்று நிலையத்தின் உட்புறத்தில் காட்சி அளித்தானோ? அல்லது....

'இல்லை; இவள் வேறு யாரையோ, எதையோ கண்டு மருள்கிறாள்; நம்மிடம் பொய் சொல்லுகிறாள். கள்ளம் கபடம் இல்லாதவள் என்பதெல்லாம் சும்மா. இவளிடம் ஏதோ மர்மம் இருக்கிறது!'

சிந்தனை வளர வளர, சந்தேகம் என்ற வடிவமற்ற ஒன்றுக்குக் கை கால் கண் மூக்கு முதலிய உறுப்புக்கள் தோன்றலாயின.

இடைவேளை வந்தது. ''போகலாமா?'' என்று மோகன் எழுந்தான்.

கல்யாணி அவனைப் பார்த்தாள். அவள் தன் பொட்டுக்களை விரல்களால் அழுத்திக்

கொண்டிருப்பதைக் கண்டான். வாய் திற வாது எழுந்தாள்; அவன் பின்னே நடந் தாள் கல்யாணி.

மோகன் டாக்ஸியை அழைத்தான். இருவ ரும் ஏறி அமர்ந்தனர். அது ஓடத் தொடங் கிற்று. அவர்கள் பேசிக் கொள்ளவில்லை.

டாக்ஸி எழும்பூர் நிலையத்தை அணுகிக் கொண்டிருந்தது. மோகன் மிக்க விழிப் புடன் கல்யாணியைக் கவனித்து வந்தான். அவள் நிலையத்தின் பக்கமே திரும்பாமல் எதிர்ப்புறத்தில் பார்வையைச் செலுத்தி யிருந்தாள். என்றாலும் நிலையத்தை அணுகி அதைக் கடக்கிற போது அவளிடம் சில மாறுதல்கள் ஏற்பட்டதாக அவனுக்குத் தோன்றியது. அது பிரமை இல்லை என்றும் தீர்மானித்துக் கொண்டான்.

எடுத்து வைத்திருந்த உணவை உண்டு விட்டு உறங்கிப் போயிருந்தான் பாபு. மோகன் கதவைத் தட்டியதும் திறந்து விட்டுப் போய்ப் படுத்தான். படுத்த உட னேயே மீண்டும் உறங்கி விட்டான்.

மோகன் உடை மாற்றிக் கொண்டான். கல்யாணியும் உடை மாற்றிக் கொண்டு கலயிட்டு உணவு பரிமாறத் தொடங்கினாள். மோகன் கலத்தின் முன் உட்காராமல் சமையல் அறைக்குள் சென்றான்.

கீழ்ப் பகுதியில் வீட்டின் உரிமையாளர் வசித்து வந்தார். குடும்பத்தோடு அவர் வெளியூர் சென்றிருந்தார். மேற்பகுதியில் மோகனின் ஜாகை. வெளி வராந்தா, முன்புற ஹால், நடுக்கூடம், சாமான் அறை எல்லாம் கடந்து சமையல் அறை. பாபு முன்புற ஹாலில் உறங்கிக் கொண்டிருந் தான். மோகன் முன்புற விளக்குகளை யெல்லாம் அணைத்துவிட்டு, முன்புறக் கதவு களையெல்லாம் மூடிவிட்டுச் சமையல் அறைக் குச் சென்றான். ஏதோ எடுப்பதற்காகக் கல் யாணி அங்கே வந்ததும் அந்த அறைக் கதவையும் மூடினான்.

அவள் அவன் செயலைக் கண்டு திகைத் தாள். தியேட்டரிலிருந்தே அவன் ஒரு மாதிரியாக இருப்பது ஏற்கனவே அவள் உள்ளத்தில் பீதியை உண்டுபண்ணியிருந்தது. இப்போது அது அதிகமாயிற்று.

''இப்படி உட்கார்.'' — மெல்லிய குரலில் அழுத்தமாக அவன் கூறினான். கல்யாணி அவன் எதிரே உட்கார்ந்தாள். அவள் உடம்பு நடுங்கிற்று.

''சினிமாவுக்குப் போகிறபோது பஸ்ஸி லிருந்து இறங்கித் தியேட்டரை அடைகிற வழியில் பல பிச்சைக்காரர்கள், கைகால் குறைந்தவர்கள் தென்பட்டார்களே, அவர் களை யெல்லாம் கண்டு நீ ஏன் கண்ணை மூடிக் கொள்ள வில்லை, உடம்பைச் சிலிர்த்துக் கொள்ளவில்லை ?''

மெலிந்த குரலில் அவள் சொன்னாள். ''நான் அவர்களைப் பார்க்கவில்லையே !''

''பொய்! நீ பார்த்ததை நான் பார்த் தேனே !''

கல்யாணி விழித்தாள். நிலத்தையும் அவன் முகத்தையும் மாறி மாறிப் பார்த்தாள்.

''போகட்டும். ஊரிலிருந்து வந்த அன்று எழும்பூர் நிலையத்தில் இறங்கினதும் இதே மாதிரி கண்ணை மூடி உடம்பைச் சிலிர்த் தாயே, ஏன்?''

''இல்லையே !''

''இதோ பார், இரவு வேளை. இங்கே நடப்பது வெளி உலகுக்குத் தெரியக் கூடாது என்று முன்னெச்சரிக்கையாக எல்லாக் கதவு களையும் மூடி, இந்தக் கடைசி அறைக்கு வந் திருக்கிறேன். ஆகவே, வீணாக எனக்குக் கோபத்தை உண்டுபண்ணிச் சத்தம் போட வைக்காதே. உண்மையைப் பளிச்சென்று சொல்லிவிடு. டாக்ஸியில் திரும்புகிற போது நிலையத்துக்கு எதிர்ப்புறமாக நீ பார்வை யைப் பலவந்தமாகச் செலுத்தியிருந்ததையும் நான் கவனிக்கத் தவறவில்லை. புரிந்ததா?''

கல்யாணிக்குப் பேச்சு வரவில்லை. மருள மருள விழித்தாள்.

''உனக்கு ஒன்று சொல்கிறேன். வாழ்க்கை யில் கணவன் — மனைவியரை இரண்டு உடலும் ஓர் உயிரும் என்பார்கள். அத்தகைய உறவில் ஒருவர் அறியாத இரகசியம் மற்றவரிடம் இருத்தல் கூடாது. ஆகவே, உன்னிடம் உள்ள இரகசியத்தை இப்பொழுது நீ கக்கியே தீர வேண்டும். நான் எவ்வளவு நல்லவனாகத் தோன்றுகிறேனோ அவ்வளவுக் குப் பொல்லாதவனும்கூட. நீ என்னிடம்



எதையும் மறைக்க முடியாது. ரகசியத்தை வெளிப்படுத்த நான் என்ன வேண்டுமானாலும் செய்வேன். கொலைகூடப் புரியத் துணிவேன். ஆகவே, உண்மையைக் கூறு. பிச்சைக்காரன், தொழுநோயன் என்பனவெல்லாம் கட்டுக்கதை. எழும்பூர் ரயில் நிலையத்தில் உன்னோடு தொடர்புடைய எவனோ இருக்கிறான்; அவன் யார்?''

''ஐயோ!'' என்று தலை நிமிர்ந்தாள் கல்யாணி. ''அப்படியெல்லாம் ஒன்றும் இல்லை'' என்னும்போது அவளுக்கு அழுகையே வந்தது.

''பின் அந்த நிலையத்தைக் கண்டு நீ மருள்வானேன்?''

''....அதை.... பார்த்தாலே.... எனக்கு.... பயமாக... இருக்கிறது.''

''ஏன்?... என்ன பயம்?... எதற்காகப் பயம்?''

கல்யாணி சேலைத் தலைப்பை வருடத் தொடங்கினாள்.

''விளையாடுகிறாயா?'' என்று அதட்டினான் அவன். ''கேட்ட கேள்விக்குப் பளிச்சென்று பதில் சொல்லத் தயங்குவதிலிருந்தே, எதைச் சொல்லித் தப்பலாம் என்று யோசனை செய்வதிலிருந்தே உன் நிலை விளங்குகிறதே! உம்... சீக்கிரம் சொல்!''

''முன்பு ஒரு முறை பட்டணம் வந்த போது......''

''எப்போது வந்தாய்?''

''ரொம்ப நாட்கள் முன்பு.''

''அப்போது உன் வயது?''

''ஏழெட்டு இருக்கும்.''

''யாரோடு வந்தாய்?''

''என் அப்பாவோடு.''

''கூட யார் வந்தார்கள்?''

''அம்மா.''

''எதற்காக வந்தீர்கள்?''

''உறவினர் வீட்டுக் கல்யாணத்துக்காக.''

''என்ன உறவு?''

''எனக்குத் தெரியாது.''

''அந்த உறவினர் இப்போது எங்கே இருக்கிறார்கள்?''

''தெரியாது.''

''அப்போது என்ன நடந்தது?''

''ராட்சசன் போல் ஒரு பிச்சைக்காரனைப் பார்த்துப் பயந்து ஓடிக் கால் இடறி விழுந்து காயம் பட்டேன்.''

''அதனால் சிறு வயதில் நிகழ்ந்த அந்தச் சம்பவத்தால் அந்த நிலையத்தைப் பார்த்தாலே உனக்குப் பயமாக இருக்கிறது. இவ்வளவுதானே? இதை எடுத்த எடுப்பிலேயே பளிச்சென்று சொல்லித் தொலைக்கிறது தானே?''

கல்யாணியின் முகத்தில் தெளிவு பிறந்தது. கண்ணில் மங்கியிருந்த நீரைத் துடைத்துக் கொண்டு, ''நீங்கள் அதட்டிக் கேட்டதும்...'' என்று நாத் தழுதழுக்கக் கூறிக் கொண்டே எழுந்தாள்.

''அசடு! படு அசடு!.... உண்மையைச் சொல்லப் பயம் ஏன்?''

கல்யாணி அவனை நோக்கிக் குழந்தை போல் களங்கமற்றுச் சிரித்தாள். ''சாப்பிட வருகிறீர்களா?'' என்று அழைத்தாள்.

''உம்..... சாப்பிட வேண்டியதுதான்'' என்று நெட்டி முறித்த மோகன், ''எதற்காக முன்பு சென்னை வந்தேன் என்றாய்?'' என்று கேட்டான்.

''உறவினர் வீட்டுக் கல்யாணத்துக்காக என்றேனே?''

''மறந்து விட்டது. அப்போது உன் வயது என்ன....? எட்டா?''

''சரியாக நினைவில்லை. ஏழு, அல்லது எட்டு இருக்கும்.''

''ஏனென்றால், பத்து வயதுக்குள்தான் இத்தகைய கிலி மனத்தில் பதியும். அது மிகவும் கெடுதல். சுலபமான மனத் தத்துவ வைத்தியம் மூலம் அதைப் போக்கிவிடலாம். அதற்காகத்தான் கேட்கிறேன். நிச்சயமாகப் பத்து வயதுக்கு மேல் இராதே?''

''ஊஹூம். ஏழு அல்லது எட்டு.''

''யாரோடு சென்னை வந்தாய்?''

''அப்பா அம்மாவோடு.''

இருக்கையினின்றும் விருக்கென்று எழுந்த மோகன் எதிரே நின்ற கல்யாணியின் கன்னத்தில் 'பளார்' என்று ஓர் அறை கொடுத்தான். அவள் 'ஐயோ!' என்று வீறிட்டு அலறினாள்.

''கேடு கெட்ட நாயே! என்னை என்னவென்று எண்ணினாய்? யாரிடம் இந்தக் கதையெல்லாம்? ஐந்து வயது முதல் பத்து வயது வரையில் நீ எங்கே இருந்தாய்? யாரிடம் வளர்ந்தாய்? அப்போது உன் அம்மா அப்பா எந்த ஊரில் இருந்தனர்? எனக்கு எதுவுமே தெரியாது என்று எண்ணி அளக்கிறாய்! நான் வெளியூரில் படித்துக் கொண்டிருந்தாலும் நீ ஐந்து வயது முதல் பத்து வயது வரையில் கேசவபுரத்தில் உன் அத்தை வீட்டில் வளர்ந்து வந்ததை அறிவேன். என் அம்மா சொன்னாள். திருமணம் பேசும்போது உன்னை உயர்த்திப் பேசுவதற்காக உன் மாமா சுப்புரத்தினம் என் அப்பாவிடம் சொன்னார்: 'இந்தக் குழந்தை ஐந்து வயதிலிருந்து பத்து வயது முடிய என் மனைவியின் தயாரிப்பில் வளர்ந்தவள் என்பது உனக்கும் தெரிந்திருக்குமே' என்று. அப்போதெல்லாம் உன் அப்பா பிழைப்பை நாடிப் பட்டமங்கலம் சென்று யாரையோ அண்டியிருந்தார். உன் எட்டாம் பிராயத்தில் நீ உன் அப்பாவுடன் சென்னை வந்திருந்ததாகக் கதைக்கிறாய்! கல்யாணத்தின் போது உன் அப்பா சொன்னதை நீயும் கேட்டுக்கொண்டிருந்ததை மறந்து, நான் அதைக் கவனித்திருக்க மாட்டேன் என்று எண்ணிப் பெரும் புளுகு புளுகி விட்டாய்! 'நான் சென்னைப் பட்டணம் போனதில்லை. இந்தச் சம்பந்தத்தினால் அந்த வாய்ப்பு அடிக்கடி கிட்டும்' என்றாரே, அதை மறந்தாயா? எவ்வளவு ஆணவம் இருந்தால் கட்டின கணவனிடம் நீ இவ்வளவு பெரிய.... உம்... சொல்!.... உண்மையைச் சொல்!.... வீண் ரகளைக்கு அடிகோலாதே!''

கல்யாணி அழத் தொடங்கினாள். மோகனின் ஆத்திரம் மிதமீறியது. தன்னை மறந்த ஆவேச நிலை பெற்றான். அவளுடைய இரு கன்னங்களிலும் மாறி மாறி அறையத் தொடங்கினான். அவள் நிலை தடுமாறித் தரையிலே விழுந்தாள்.

''சொல்லடி, கள்ளி! சொல்! எவனோடு ஓடி வந்தாய் இங்கே?''



# வடிவம்!

முருங்கைப்பூ அத்தனையும் முதிர்ந்து காயாய்
　　முளைப்பதில்லை; ஆழ்கடலின் நீள்வ யிற்றில்
நெருங்கப்பூக் கின்றசிப்பிக் கூட்ட மெல்லாம்
　　நித்திலமாய்த் திரள்வதில்லை; நீலவான் மேட்டில்
ஒருங்கப்பூக் கின்றஉடுக் கூட எல்லாம்
　　ஒளிவிளக்காய்ச் சிரிப்பதில்லை; அதுபோல் நெஞ்சின்
மருங்கிற்பூக் கின்றமன வேட்கை எல்லாம்
　　மாளாமல் நிறைவேறு வதுமே இல்லை!

— தமிழழகன்

அவன் மீண்டும் கையை ஓங்கவே அவள் குலைநடுங்கினாள். ''ஐயோ! அடிக்காதீர்கள்! இனிமேல் என்னால் தாங்க முடியாது!'' என்று அலறினாள்.

''அடி வேண்டாம் என்றால் உண்மையைச் சொல்!''

அவள் எழுந்து உட்கார்ந்து கொண்டாள். நின்றிருந்த அவன் கால்களைப் பற்றிக் கொண்டாள். ''உண்மையைச் சொல்லி விடுகிறேன். என்னை அடிக்காதீர்கள்!'' என்று தேம்பிய வண்ணம் கூறினாள்.

''குற்றம் புரிவது வேறு. அதை மறைக்கப் பொய் சொல்வது வேறு. இப்பொழுது நீ என்னிடம் வாங்கியது பொய் சொன்னதற்காக. முதலிலேயே உண்மையைச் சொல்லியிருந்தால் குற்றம் புரிந்ததற்காக உள்ள தண்டனையோடு போயிருக்கும். ஒருகால் அந்தத் தண்டனை குறைவாகக்கூட இருக்கலாம். குற்றத்துக்கு நீ பொறுப்பாளியாக இல்லாமலிருந்து பிறரால் வஞ்சிக்கப்பெற்றிருந்தால் என் மன்னிப்பைக்கூடப் பெற்—''

கல்யாணி இடைமறித்தாள். ''நீங்கள் தெய்வப் பிறவிதான்! ஞானதிருஷ்டியால் அறிவதுபோல் எல்லாவற்றையும் சொல்கிறீர்கள். நான் குற்றவாளியே அல்ல; மகாபாவி ஒருவனால் வஞ்சித்துத்தான் இங்கே அழைத்து வரப்பெற்றேன். இது சத்தியம்!... முக்காலும் சத்தியம்!''

இதைக் கேட்டதும் மோகனின் இருதய ஓட்டமே 'டக்'கென்று நின்று போனது போல் இருந்தது. மார்பைத் தடவி விட்டுக் கொண்டான். கல்யாணியை ஒருகணம் கூர்ந்து நோக்கினான். அவள் பிடியிலிருந்து தன் கால்களை விடுவித்துக் கொண்டான். பின் நடையாகவே சென்று சுவரில் சாய்ந்து கொண்டான். அங்கிருந்தபடியே அவளை உற்று நோக்கினான்.

''என்னை.... மன்னிப்பீர்களா?....''

மோகன் உமிழ்நீரை விழுங்கி சுர உணர்ச்சியை உண்டுபண்ணிக் கொண்டு வறண்ட குரலில் மெதுவாகப் பேசினான்.

''இது எப்போது நடந்தது?''

''ஏறக்குறைய இரண்டு வருஷங்களுக்கு முன்.''

''இங்கே வந்து எத்தனை நாட்கள் தங்கினாய்?''

''ஒரே ஒரு நாள்; இல்லை — ஒரு பகல்; அவ்வளவுதான்.''

''இது உன் பெற்றோருக்குத் தெரியுமா?''

''முதலில் தெரியாது. பிறகு தெரியும்.''

''இங்கே எங்கே தங்கியிருந்தீர்கள்?''

''ஹோட்டலில் அறை எடுத்துக் கொண்டு. ஆனால் —''

''வேண்டாம்; இனிமேல் ஒன்றும் வேண்டாம்!'' —

அவன் சமையல் அறைக் கதவைத் திறந்து கொண்டு வெளியேறினான். அவள் கண்ணைத் துடைத்துக் கொண்டு எழுந்து அவன் பின்னே சென்றாள்.

''சாப்பிடுகிறீர்களா?''

''வேண்டாம்!''

''நான்தான் உண்மையை.....!''

''வேண்டாம், பேசாதே! என்னைத் தொடராதே! இனி எனக்கும் உனக்கும் ஒரு தொடர்பும் இல்லை. இனி என்ன? இதற்கு முன்பும் தொட்டுத் தாலி கட்டிய ஒரே ஒரு தொடர்பைத் தவிர.... ஹூம். சர்வ வல்லமையுள்ள ஆண்டவன் கருணாமூர்த்தி. அவன் நல்லவர்களைக் கேட்டினின்றும் தடுத்தாட்கொள்கிறான். என் அப்பா சொற்படி, அவர் குறிப்பிட்ட நல்ல நாளில் உன்னை என் மனைவியாக்கிக் கொள்ள இருந்தேன். நல்ல வேளையாக இன்றைய நிகழ்ச்சி உன் கற்பைக் காப்பாற்றி விட்டது. அவன்—அந்த யாரோ ஒருவன் — வேண்டாம் அதெல்லாம் எதற்கு? முடிவை மட்டுமே சொல்கிறேன். நாளை இரவு புறப்படு. உன்னை உன் பெற்றோரிடம் —''

பெரிதாக அழத் தொடங்கினாள் கல்யாணி.

''நான் உன்னைச் சமாதானம் செய்ய மாட்டேன்; கண்டிக்கவும் மாட்டேன். நாலு பேர் உன் முகரையில் காறித் துப்புவதை நீ விரும்பினால் அழுது புலம்பி எல்லாம் செய். இன்னொன்றும் சொல்கிறேன்; 'நான் வஞ்சித்து அழைத்து வரப்பெற்றேனே தவிர தூய்மை கெடாதவள்' என்று நீ கதை அளந்து இனி என்னை நம்ப வைக்கலாம் என்ற நப்பாசையையும் விட்டுவிடு.''

இவ்வாறு கூறி அவன் அங்கிருந்தும் வெளியேறினான். கல்யாணி அழுதாள்; அழுது கொண்டே கிடந்தாள். ஏனென்று கேட்பார் யாரும் இல்லை.

மறு நாள் அவன் கல்யாணியுடன் புறப்பட்டான். அவளை அவள் பெற்றோரிடம் சேர்த்து உடனேயே சென்னை திரும்பினான்.

இந்த விவரம் முழுவதையும் மோகனின் வாய் வழி கேட்ட மீனாட்சி சொல்ல முடியாத வேதனைக்கு உள்ளானாள். ''அடி பாவிப் பெண்ணே!'' என்று கன்னத்தில் கைவைத்துக் கொண்டாள்.

மோகன் விரக்தி தோன்ற நகைத்தான். ''அவள் பாவிப் பெண் அல்ல மாமி; நான் தான் பாவி மகன் அல்லது பாவப் பிறவி!'' என்றான்.

அவன் குரலில் ஒலித்த வேதனை உணர்ச்சியும், முகத்தில் தெரிந்த துயர ரேகையும் மீனாட்சியின் வயிற்றிலே சங்கடத்தை உண்டு பண்ணின. பெரியோர்கள் நிகழ்த்திய அவசரச் செயல் அவனுக்குப் பெரும் துரோகமாக விளைந்ததை எண்ணிப் பெருமூச்செறிந்தாள். அவன் மீது அளவற்ற அநுதாபம் பொங்கிற்று.

சிவசாமி வந்ததும் மீனாட்சி அனைத்தையும் சொன்னாள்; சொல்லிவிட்டு அழுதாள். அவர் உடனே ஒன்றும் பேசவில்லை. நெடுமூச்செறிந்தார். அடிவயிற்றிலிருந்து வெளிப்பட்ட அது சர்ப்பம் சீறுவது போல் இருந்தது.

ஒரு வாரம் தங்கியிருந்தார் சிவசாமி. அந்த ஒரு வாரத்திலும் மீனாட்சி இடைவிடாது அவரைத் துளைத்து எடுத்தாள், மோகனைப் பார்க்கும்படியும் அவன் விஷயத்தில் நன்மை தேடும்படியும். அவர் எதற்கும் மசியவில்லை. அவள் விடாது தொணப்பி எடுத்ததும் சொன்னார்:

''அவனுடைய நெஞ்சம் எப்படிக் குமுறும், அவமான உணர்ச்சியால் அவன் எப்படிக் குன்றியிருப்பான் என்பதை நன்றாக அறிந்திருந்தும் நீ இப்படிப் பேசுவது சிரிப்பையே உண்டுபண்ணுகிறது. இந்த நேரத்தில் நான் அவனைச் சந்திப்பது சரி அன்று. அந்தக் கண்ணைராவி பற்றிக் கிளறுவதும் முறை அன்று. சூடு ஆறட்டும், பார்க்கலாம்'' என்றார். ஆனால்....

மீனாட்சியால் அவ்வாறு அமைதியை மேற்கொண்டு வெறுமனே இருக்க முடியவில்லை. அடிக்கடி மோகனைச் சந்தித்தாள்; ஆறுதல் கூறினாள்.

கல்யாணி கணவனால் புறக்கணிக்கப் பெற்றாள்; அவன் வரையில் அவள் வாழ்விழந்தவள். லீலா வளர்ந்து நிற்கிறாள்; அவள் வாழ்க்கைக்குரிய முயற்சிகள் இன்னும் தொடங்கப் பெறவில்லை. அது எப்போதோ, எப்படியோ!

இவ்விரு பெண்களின் நிலையைவிட மோகனின் நிலையைப் பெரிதாக எண்ணினாள் மீனாட்சி. தாயை இழந்து, தகப்பனைப் பிரிந்து, தாரத்தையும் கைவிட்டு நிற்கும் அவன் நிலை பரிதாபத்துக்குரியதாக அவளுக்குப்பட்டது. எப்போதும் அவள் அவனிடம் அது பற்றியே பேசினாள். எந்த நேரமும் அவள் உள்ளத்தில் அந்த நினைவே புரண்டு கொண்டிருந்தது.

மின்னல் தோன்றுவதுபோல் ஒரு நாள் அவள் மனத்தில் ஒரு பொறி பளிச்சிட்டது. அவளுடைய இயல்பு அந்தப் பொறியை ஊதி ஊதிப் பெரிதாக்கிற்று. தனக்குள் ஒரு முடிவு செய்து கொண்டாள்.

மோகன் நாளடைவில் பழைய கலகலப்பான நிலையை எட்டிக் கொண்டிருந்தான். அதனால் பாபுவும் சற்று அச்சமின்றி அவனிடம் பழகி வந்தான்; மீனாட்சியும் மனம் விட்டு, வாய்விட்டு எதையும் பேச வாய்ப்பு இருந்தது. ஒரு நாள் அவன் வந்தபோது பல செய்திகளைப் பேசிக் கொண்டே வருகையில் அவள் சொன்னாள்.

''தெய்வ சங்கல்பம் வேறு. மனித முயற்சி வேறு. மனிதர்களில் பலரும் இதை அடிக்கடி மறந்து போய் விடுகிறார்கள். அதனால் எத்தனை எத்தனையோ துன்பங்கள் சம்பவிக்கின்றன. துன்பம் துரத்துகிறபோதுதான் மனிதர்களுக்குத் தெய்வத்தின் ஆற்றல் புரிகிறது. உதாரணமாக உன் விஷயத்தையே எடுத்துக் கொள்வோம். 'லீலாவுக்கு, நீ. உனக்கு லீலா' என்பது ஆண்டவனின் திட்டம். அதனாலேதான் அப்படி ஓர் எண்ணம் என் மனத்திலே எழுந்தது; சொல்லிலே வளர்ந்தது. தெய்வ நியதிக்கு மாறாக மனித முயற்சி குறுக்கிட்டு ஒரு செயலை நிறைவேற்றியது. அது விபரீத பலனையே அளித்தது. ஆனால் 'அதற்காக... தீர்வு எதையும் காணாமலே காலத்தை வீணாக்குவது அறிவுடைமை அன்று. ஆகவே, எனக்கு இன்னமும் என்ன தோன்றுகிறது என்றால்.... ஒன்று, கல்யாணியை மன்னித்து அழைத்துக் கொள்ள வேண்டும்; அல்லது உன் வரையில் மறு மலர்ச்சியைத் தேடிக் கொள்ள வேண்டும். வீணே இருபுறமும் பாழ் போவதில் பயன் என்ன? கல்யாணியோடு வாழ்க்கை இல்லை என்றால் நீ.... லீலாவை மணந்து கொள்ளத் தடை என்ன?''

மோகன் தலை நிமிர்ந்தான். லீலாவின் கண்களை அவன் கண்கள் சந்தித்தன. அந்தப் பார்வை! அதில் பளிச்சிட்ட பொருள்! அந்த இள முறுவல்!.... அது குறிப்பித்த பாவம்! அவன் முயன்று தன் பார்வையை மீட்டு வேறுபுறம் திருப்பினான். மீனாட்சி இதையெல்லாம் கடைக்கண்ணால் கண்டாள்; களி மிகக் கொண்டாள்.

''நான் சொல்வது உனக்கு எப்படிப் படுகிறது, மோகன்?''

அவன் சிரித்தான்; பதில் எதுவும் சொல்லவில்லை. கைக் கடிகாரத்தைப் பார்த்தான். ''முக்கியமாக ஒருவரைப் பார்க்க வேண்டும்'' என்று கூறி எழுந்தான். வாசலை நோக்கி நடந்தான்.

மீனாட்சி லீலாவைப் பார்த்தாள்; அவள் நிலத்தைப் பார்த்தாள். 'ஐயோ, அம்மாவே! ஏன்தான் உனக்கு இந்த வீண் அஞ்ஞானமோ?' என்றது அவள் மனம். ஆனால் மீனாட்சியின் நைப்பாசை நிறைந்த உள்ளம் இலேசில் அடங்குவதாக இல்லை:

'பிரமரகீட நியாயம்' என்ற வடமொழி வாக்கியத்தின் பொருளாகிய குளவி புழு

வைக் கொட்டிக் கொட்டி அதன் உருவை மாற்ற முயலும் கதையாக, மீனாட்சி மோகனைத் துளைத்தெடுக்க ஆரம்பித்தாள். அவன் அவள் கூற்றை ஏற்கவும் இல்லை, மறுக்கவும் இல்லை. எதற்கும் ஒரு சிரிப்பு; அதிலே ஒரு விரக்தி. பேச்சிலே மிகச் சிக்கனம், அதிலே மழுப்பலின் இலக்கணம். இப்படியே அவன் பட்டும் படாமலும் பழகி வந்தான். மீனாட்சியோ அவன் இல்லாத இடத்திலும் அவனைப் பற்றியே பேசினாள். அவனையும் லீலாவையும் இணைத்து இணைத்துப் பேசினாள். அதன் விளைவாக, லீலாவின் உள்ளமாகிய கொடி மோகன் என்கிற கொழு கொம்பை இறுகத் தழுவிப் பற்றிப் படரலாயிற்று. மீனாட்சியின் 'பிரமரகீட நியாயம்' மோகன் விஷயத்தில் எந்த அளவுக்கு வெற்றி பெற்றதோ, லீலாவின் பங்கில் அன்றும் வெற்றி! இன்றும் முழு வெற்றி!

மோகனுக்கு வர வர ஓய்வு கிடைப்பதே அரிதாயிற்று. அப்படியே சிறிது ஓய்வு கிடைத்தாலும் அவன் மாமா வீட்டுக்கு வருவதில்லை. 'பருவப் பெண் நடமாடுகிற இடம்; அடிக்கடி நாம் அங்கே போய்ச் சலசலப்பை உண்டுபண்ணுவது சரியன்று' என்று எண்ணி அதற்கேற்ப நடந்து கொள்வது போல் இருந்தது அவன் செயல். அவனுடைய இத்தகைய போக்கினால் அவனுக்கு லீலாவிடம் பிடிப்பு இருக்கிறதா இல்லையா என்பதைத் திட்டமாக அறிந்து கொள்ள முடியாமல் தவித்தாள் மீனாட்சி. இருப்பினும் தன் முயற்சியில் தளர்வின்றிக் கால் ஊன்றி நின்றாள்.

ஒரு நாள் பரபரத்த உள்ளத்துடன் மோகனைத் தேடிச் சென்ற மீனாட்சிக்கு அங்கே பெரும் ஏமாற்றம் காத்திருந்தது.

''தம்பி பாபுவை 'ஹோம்' ஒன்றில் சேர்த்து, வீட்டைக் காலி செய்துவிட்டு மோகன் வெளியூர் சென்று விட்டான். பாபு இருக்கும் 'ஹோம்' முகவரியும் தெரியாது, மோகனின் வெளியூர் முகவரியும் தெரியாது'' என்று அந்த வீட்டின் உரிமையாளர் சொன்னார்.

மீனாட்சியின் உள்ளம் 'சீ' என்று வெறுத்துப் போயிற்று.

'இப்படிக்கூடச் சொல்லாமல் கொள்ளாமல் தலைமறைவாகப் போய்விட வேண்டுமா, என்ன? அந்த அளவுக்கு நான் இழைத்த தீங்குதான் என்ன? பெற்ற குழந்தைகளைவிட ஒரு மாற்று மேலாகப் பாவித்து அன்பைப் பொழிந்தேனே. அதன் பலனா இது? லீலாவை மணந்து கொள்ள விருப்பம் இல்லை என்றால் அதைப் பளிச்சென்று சொல்லி விடலாமே! சேச்சே! கொஞ்சம்கூட நெஞ்சுரம் இல்லாதவன்!' என்று புலம்பிற்று அவள் மனம்.

'இருக்கட்டும்; இவனைவிட ஒரு படி மேலான வரனை லீலாவுக்கு முடித்து இவன் முகத்திலே கரியைத் தீற்றிக் காட்டுகிறேன்!' என்றும் அந்த உள்ளம் சூள் உரைத்தது.

வேசாரிப் போய் வந்த சிவசாமியிடம் மீனாட்சி புலம்பித் தீர்த்தாள். பொறுமையுடன் அனைத்தையும் செவிமடுத்த அவர் அமைதியாகச் சொன்னார்: ''அவன் சரியான காரியத்தையே செய்திருக்கிறான்!'' என்று.



''யோவ்! யோவ்! என்னது என் தலையிலே....''
''சும்மா இருங்க! உங்க தலையிலே ஐஸ் வெச்சா காரியம் நடக்கும்னு சொன்னாங்க!''

மறு நாள் முதலே கணவன் மனைவி இருவருமே வரன் வேட்டையில் முழுமனத்தோடு ஈடுபடலானார்கள். சிவசாமி தாம் செல்லும் இடங்களில் எல்லாம் முயன்றார்; மீனாட்சி தன்னைப் போன்ற பெண்மணிகள் மூலமும் மற்றும் பெரியோர்கள் மூலமும் முயன்றாள்.

தாயின் நிலை கண்டு, செயல் கண்டு மகளின் உள்ளம் சிரித்தது; சிலிர்த்தது. அந்த உள்ளம் இப்போது சூனியத்தால் நிறைந்திருப்பதை மீனாட்சி அறிவாளா?

''மீனாட்சி!...'' என்று குரல் கொடுத்துக் கொண்டே உள்ளே வந்தாள் பக்கத்துத் தெரு பாகீரதி அம்மாள்.

''வாருங்கள்!'' என்று எதிர்கொண்ட மீனாட்சியின் முகம் பாகீரதியின் கையிலிருந்த கடித உறையைப் பார்த்ததும் மலர்ந்தது.

பாகீரதி அம்மாளின் புதல்வன் பாஸ்கர் கோயமுத்தூரில் வேலை பார்த்து வருகிறான். அவன் மணமானவன். அவனோடு வேலை பார்ப்பவன் சங்கர். லீவில் வந்தபோது அவன் சங்கரைப் பற்றிப் பேசினான்.

'கற்றம் அற்றவன். அறிவில் சிறந்தவன். உயர்ந்த உத்தியோகம். நிறைந்த வருவாய். அழகிலும் குணத்திலும் குறிப்பிடத்தக்கவன்' என்றெல்லாம் அவன் வருணித்தபோது பாகீரதி லீலாவைப் பற்றிச் சொன்னாள்.

பாஸ்கர் கோவை சென்று, சங்கரைக் கலந்து கொண்டு கடிதம் எழுதினான். பாகீரதி லீலாவின் படத்தை வாங்கி அனுப்பி வைத்தாள். பதிலுக்குச் சங்கரன் படம் வந்திருக்கிறது. பிடித்தமானால், மேலே பெண் பார்த்தல், திருமணம் நடக்கும்.

'பிராப்தகாலம் வந்துவிட்டால் எதுவும் நில்லாது' என்பது பெரியோர் நாவில் அடிக்கடி இடம் பெறும் வாக்கியம்.

சிவசாமி படத்தைப் பார்த்து, கடிதத்தைப் படித்துத் திருப்தியுற்று லீலாவை அழைத்து, ''பெண் பார்க்க வருமாறு எழுதி விடலாமா அம்மா?'' என்று கேட்டபோது அவள் சரி என்று தலையசைத்தாள்.

அவள் முகத்தில் எவ்வித பாவமும் இல்லாததை அவர் கண்டார். அதற்காக அவர் தயங்கவில்லை; குழம்பவில்லை. 'அப்படித்தான் இருக்கும். புதிய மாறுதலில் பழைய வடுக்கள் கரைந்து மறைந்துவிடும்' என்று தம் மனசைத் தேற்றிக் கொண்டார்.

இருபுறத்திலும் இசைவுக் குரல் எழுந்ததும் திருமண ஏற்பாடுகள் மளமளவென்று தொடர்ந்தன. சிவசாமி அங்கே இங்கே என்று பல இடங்களில் முயன்று பணத்தைச் சேகரித்து வந்து மீனாட்சியிடம் தந்தார். அவள் அக்கம்பக்கம் உள்ள அனுபசாலிகளைக் கொண்டு அனைத்தையும் மிக்க விதரணையாக ஏற்பாடு செய்தாள்.

சங்கருக்கென்று யாருமே இல்லாததால் பாகிரதி அம்மாள், பாஸ்கரன் முதலியோரே பிள்ளை வீட்டுச் சம்பந்திகளாக விளங்கினர். அவர்கள் வீட்டையே பிள்ளை ஜாகையாக ஏற்பாடு செய்யப் பட்டது; அருகே உள்ள சமாஜத்தில் திருமணம் நடத்த ஏற்பாடு. பெண் ஜாகை, பிள்ளை ஜாகை, சமாஜம் எல்லா இடங்களும் நன்கு அலங்கரிக்கப் பெற்றன. நாட்கள் வேகமாகச் சென்று மணநாளை அனுப்பி வைத்தன.

தாலி கட்டும் நேரம். லீலா மணையில் அமர்ந்திருந்தாள். சங்கர் அவள் எதிரே தாலிச் சரடும், கையுமாக நின்று புரோகிதரின் வாயைப் பார்த்தபடி அவர் சொல்வதைச் சொல்லிக் கொண்டிருந்தான். அப்போது....

கார் ஒன்று வந்து பந்தல் முகப்பில் நின்றது. அனைவர் பார்வையும் அங்கே சென்றது. பெரிய மனிதர் ஒருவர் காரிலிருந்து கீழே இறங்கினார்.

சங்கர் அந்தப் பக்கம் நோக்கவில்லை. லீலாவின் கழுத்திலே தாலியைக் கட்டுவதற்காகக் குனிந்தான். அப்போது...

லீலாவின் நிலையைக் கண்டு அவன் திடுக்கிட்டான். அவளது பார்வை பந்தலில் பதிந்திருந்தது. கண்களில் திடீரென்று ஒரு பிரகாசம்; உடம்பிலே ஒரு நடுக்கம்; கண்களின் இதழ்களில் நீர் வளையம்.

'ஏன் இப்படி? — சங்கர் பின்வாங்கினான்; லீலாவின் பார்வை பதிந்த இடத்தில் தன் பார்வையை ஓட்டினான். அங்கே....

அதிகாரி கனகசபை வந்து கொண்டிருப்பதை அவன் கண்டான். அவர் அவனுடைய முன்னாள் அதிகாரி.

'...அவரைக் கண்டு இவள் ஏன் உணர்ச்சி வசம் ஆக வேண்டும்?'

சிந்தனை முடிவதற்குள் கனகசபை அவனை அணுகினார். சங்கர் அவரை நோக்கிக் கரம் கூப்பினான். அவர் அவன் கையைப் பிடித்துக் குலுக்கினார்.

''உன் அழைப்பு வந்தபோது திருமணத்துக்கு வருவேன் என்று நான் நினைக்கவில்லை. வாழ்த்து மட்டுமே அனுப்புவதாக இருந்தேன். தற்செயலாக இவ்வூர் முகாம் நேர்ந்தது. அவசரமாக உடனே போகவேண்டும்'' என்றவர் பரிசுப் பொருளை அளித்து ஆசிர்வதித்தார்.

பாஸ்கரன் அவரை உபசரிக்கஅழைத்தான்.

அவர் அப்பால் நகர்ந்ததும் அவர் பின்னே நின்ற வாலிபன் முன்னேறினான். சங்கரின் கரத்தைப் பற்றியபடி நிமிர்ந்து அவனைப் பார்த்து முறுவலித்தான். பிறகு அதிகாரியைப் பின்பற்றி நடந்தான்.

''உம்உம்... நேரம் கடந்து போகிறது'' என்று புரோகிதர் ஊக்கவே, சங்கர் இப்பால் திரும்பினான். லீலா அந்த வாலிபனையே பார்த்துக் கொண்டிருப்பதைக் கண்டான். சங்கர் தன் பக்கம் திரும்பினதும் அவள் பார்வையை மீட்டு நிலத்தை நோக்கி முகத்தைக் கவிழ்த்துக் கொண்டாள். அவள் கண் மலர்களிலிருந்து நீர்மணிகள் உதிர்ந்ததை அவன் கண்டான்.

அவள் நிலை கண்டு சங்கர் குழம்பினான். அந்தக் குழப்பத்துக்கும் புரோகிதரின் கெடுபிடிக்கும் இடையே மயக்கமான நிலையில் அவன் லீலாவின் கழுத்தில் ஒருவாறு தாலியைக் கட்டி முடித்தான்.

அன்றிரவு. லீலாவும் சங்கரும் தனிமையில் சந்தித்தனர். சங்கர் கட்டிலில் அமர்ந்திருந்தான். லீலா பதுமை போல் சுவரோரம் நின்றிருந்தாள். அவன் அவளையே நோக்கிக் கொண்டிருந்தான்; அவள் நிலத்தையே நோக்கிக்கொண்டிருந்தாள்.

''விடிகிறவரையில் இப்படியே அங்கேயே நிற்பதாக உத்தேசமா?''

அவன் குரலில் ஓரளவு கனிவுதான் இழைந்திருந்தது. ஆனால் அவள் செவிகளுக்கு அந்தக் குரல் ஒலியில் கடுமை இருப்பதாகப் பட்டது. மெல்ல நிமிர்ந்து அவன் முகத்தைப் பார்த்தாள். அதிலும் கடின பாவம் இருப்பதாகவே அவள் கண்களுக்குப் பட்டது. மீண்டும் முகத்தைத் தாழ்த்திக் கொண்டாள்.

முகூர்த்த வேளையில் உணர்ச்சி வசமாகித் தான் புரிந்துவிட்ட மகத்தான தவற்றை அவள் உடனேயே உணர்ந்து கொண்டாள். அதை மட்டுமா உணர்ந்து கொண்டாள்? அவன் பார்வை, பேச்சு, செயல், அனைத்துமே மிக்க பயங்கரமாக இருந்தன அவளுக்கு.

''ஐயோ!... எத்தகைய பிழையைப் புரிந்து விட்டேன். இப்படி உணர்ச்சி வசப் பட்டதால் யாருக்கு என்ன லாபம்? யானை தன் தலையில் தானே மண்ணை வாரிப் போட்டுக்கொள்வது போல் செய்து விட்டேனே!.. இவர் என்னைப் பற்றி என்ன நினைப்பார்! இதனால் என் வாழ்வு நாசம் உறுமோ?'...

இப்படி அவள் நெஞ்சம் கலங்கியது. அப்போது அவளிடம் தோன்றிய கிலி இன்னும் தீரவில்லை. எப்படித் தீரும்? அவன் அழைக்கிறான்; அவள் எப்படித் துணிந்து அவனை அணுகுவாள்?

''இதோ பார், இதோடு நாலு முறை நான் குரல் கொடுத்துவிட்டேன். நீ அசைந்து கொடுக்கவில்லை!''

இப்போது உண்மையாகவே அவன் குரலில் கடுமை இருந்தது. அவள் மறுபடியும் மெல்ல நிமிர்ந்து அவனை நோக்கினாள்.

'இங்கே வா' என்று அவன் ஜாடை செய்தான். இனியும் தான் அவ்வாறு ஒதுங்கி நிற்பது சரியன்று, விபரீதம் விளையும் என்று

எண்ணியவளே போல் அவள் மெல்ல நடந்து அவனை அணுகினாள். அவன் கரம் பற்றித் தன் அருகே இழுத்துக் கொண்டான் அவன்.

''உன் உடம்பு ஏன் இப்படிச் சுடுகிறது? ஏன் இவ்வாறு நடுங்குகிறது?''

அவன் இவ்வாறு கேட்டதும் அவளிடம் அழுகை கருநி கூட்டிற்று.

''முகூர்த்த வேளையிலிருந்து நீ ஒரு மாதிரியாய்த்தான் இருக்கிறாய். ஏன்?''

அவள் என்ன பதில் சொல்வாள்? உமிழ் நீரை மென்று விழுங்கினாள்.

''என் முன்னாள் அதிகாரி கனகசபையைக் கண்டதும்தான் உன்னிடம் சலனம் ஏற்பட்டது. அவரை உனக்குத் தெரியுமா?''

குனிந்த தலை நிமிராது நின்ற அவள், 'தெரியாது' என்று தலை அசைத்தாள்.

''பின்?... அவரோடு வந்தானே வாலிபன், அவனைக் கண்டு கலங்கினாயா?''

அவள் தவித்தாள். உள்ளமும் உடலும் ஒருங்கே நடுங்கின.

''இப்படி மௌனம் வகித்தால் போகிற வழி என்ன?''

அவன் அவள் தோள்களைப் பற்றி உலுக்கினான். அவளால் அதைத் தாங்க முடியவில்லை. இரு கைகளாலும் முகத்தை மூடிக் கொண்டு விம்மலானாள்.

சிறிது நேரம் அவள் செயலுக்கு இடம் தந்த அவன் அவளைத் தன் பக்கமாகத் திருப்பி மீளவும் கடுகடுப்பாகச் சொன்னான்.

''எனக்குப் பிடிக்காத ஒன்று உண்டு என்றால் அது அழுகைதான். நிறுத்து உன் அழுகையை. அந்த வாலிபனை உனக்குத் தெரியுமா?... சொல்!...''

''அவர்.... என்.... அத்தான்...''

''மணமேடையில் இருப்பவர்க்கு உறவினரைக் கண்டால் மகிழ்ச்சி யல்லவா ஏற்பட வேண்டும்?''

''.........''

''மாறாக, உன்னிடம் துயர உணர்ச்சி ஏற்படுவானேன்?''

''அவருக்கு... என்னைக் கொடுப்பதாக இருந்தது.''

''ஓகோ!.. அந்தத் திட்டத்தின் கீழ் நீங்கள் எல்லையைக் கடந்து...''

லீலா சடக்கென்று நிமிர்ந்தாள். அவனை ஏறிட்டுப் பார்த்தாள்.

''அப்படி யெல்லாம் ஒன்றும் இல்லை. ஒருவர் நிழலைக் கூட மற்றவர் தீண்டினதில்லை. ஆனால் பேச்சுவார்த்தை அடிபட்டது. அவ்வளவுதான்!''

அவளுடைய படபடப்பைக் கண்டு அவன் உள்ளுக்குள் சிரித்தான்.

''உனக்கும் அவனுக்கும் ஏன் திருமணம் நடைபெறவில்லை?''

''அம்மா ஏதோ சொல்லிக் கொண்டிருந்தாள். நடக்கும் என்ற நம்பிக்கையில் நான் என் உள்ளத்தை நெகிழ விட்டு விட்டேன். அவருக்கு விருப்பம் இல்லை போலும்; சொல்லாமல் ஊரை விட்டே அவர் போய் விட்டார்!''

நீண்ட நேரம் மௌனம் வகித்ததற்கு வட்டியும் முதலுமாகச் சேர்த்து இப்போது அவன் வெடுக் வெடுக்கென்று பேசினான். அவளா பேசினாள்? மான உணர்ச்சி பேச



'' என் பையன் ஒரு நானூறு பக்க நோட்டு போதும்னுட்டான்.''

'' ஆச்சரியமா யிருக்கே, ஒரு நோட்டு எப்படி சார் போதும் ?''

'' ஏன் போதாது ? என்ன என்ன நோட்டுப் புத்தகம் வாங்க வேண்டும்னு எழுதிட்டு வரத் தானே அந்த நோட்டு.''

வைத்தது. 'கற்பை உயிரினும் மேலாக ஓம்புபவர் பாரதப் பெண்கள்; கொண்ட கணவனேயானாலும் தன் கற்பிலே கறை கூறப் பொறுதவர் பாரதப் பெண்கள்' என்பதை நிரூபித்தது அவள் கூற்று.

''நீ எச்சிற் பண்டம் இல்லை என்று நான் எப்படி நம்ப முடியும்?''

லீலா சட்டென்று அவன் பிடியிலிருந்து விலகிக் கொண்டாள். தள்ளி நின்று அவன் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தாள். அந்த நிலை அவளை எழில் ஓவியமாக உயர்த்தியது. அதை ரசிப்பவன் போல் அவனும் அவளைச் சற்று நேரம் இமையாது நோக்கினான். பிறகு சொன்னான்:

''பரவாயில்லை; நான் உன்னை ஏற்றுக் கொள்கிறேன்.''

அவள் கண்கள் தீப்பிழம்புகள் ஆயின. பேச முயன்றாள்; இதழ்கள் துடித்தன. சொல் வெளிவரவில்லை. அவன் அவள் நிலையை மேலும் ரசித்தான். கிண்டலும் கேலியுமாகப் பேச்சைத் தொடர்ந்தான்.

''காலையில் உன் அத்தானைக் கண்டதும் உன்னிடம் தோன்றிய மாறுதல், 'தாலியைக் கட்டுவதா, வேண்டாமா?' என்று என்னைத் தடுமாற வைத்தது. பின்னர் என்னை நானே ஒருவாறு தேற்றிக் கொண்டேன். உலகில் உள்ள ஆண் – பெண்களில் இப்படி ஏதாவது இருப்பது சகஜம்தான். எனவே முன் நாட்களில் நீ உன் அத்தானோடு...''

அவன் வாழைப்பழத்தில் ஊசியைச் செருகுவது போல் வார்த்தைகளை ஓட்டிக் கொண்டே போகப் போக அவளிடம் ரோஷ உணர்ச்சி பொங்கி எழுந்தது. அழுகையும் ஆத்திரமும் குமுறி வந்தன.



''எங்க பள்ளிக்கூடத்திலே வெறும் படிப்பு மட்டும் சொல்லித் தரதில்லே. வாழ்க்கையோடு ஒட்டின கல்விப் பயிற்சி அளிக்கிறோம். அதோ பாருங்க, குழைக்கூத்தாடிகளைக் கொண்டு ஸ்கூல் புத்தகங்களைக் கீழே விழாமல் லாகவமாகச் சுமந்துகொண்டு போறது எப்படின்னு குழந்தைங்க கத்துக்கறாங்க!''

---

அவன் உள்ளடக்கிய சிரிப்புடன் எழுந்து அவளை அணுகினான். செவிகளைப் பொத்திக் கொண்டிருந்த அவள் கரங்களை அகற்றினான். அவளை அணைத்தபடி மஞ்சத்தின் இடமாக நடக்க முயன்றான். அவள் அவனோடு ஒத்துழைக்கவில்லை. அவளுடைய கால்கள் அடி பெயர்த்து வைக்கவில்லை.

''பைத்தியமே! நான் இவ்வளவு நேரமும் பேசினதெல்லாம் மெய் என்று எண்ணிக் கொண்டாயா? புத்திசாலியான நீ இதை உணர்ந்திருப்பாய் என்று எண்ணினேன். காலையில் முதலில் என்னிடம் ஏற்பட்ட படபடப்பு பிறகு அடங்கியதை நீ ஏன் உணரவில்லை? உன் அத்தான் என்னைப் பார்த்து முறுவலித்துக் கைகுலுக்கியதை நீ கவனிக்கவில்லையா? உன் அத்தான் மோகன் முன்பே என்னிடம் எல்லாம் சொல்லி விருக்கிறான்...''

லீலா வியப்புடன் அவனை நிமிர்ந்து பார்த்தாள். ''அப்படியா!...'' என்றாள்.

அவள் முகத்தில் ஒரு தெளிவு. செவ்விதழ்களில் முறுவல்; கண்ணிதழ்களில் நீர்த்துளி. சங்கர் அவள் கண்களைத் துடைத்தான். ''வா, எல்லாம் சொல்கிறேன்'' என்று அவளை மஞ்சத்தினிடம் அழைத்து வந்தான்.

''காலையில் வந்தாரே, அதிகாரி கனகசபை அவரிடம் நான் வேலை பார்த்துக்கொண்டிருந்தபோது மோகன் இங்கிருந்து மாற்றல் பெற்று அங்கே வந்தான். என்ன காரணத்தாலோ நாங்கள் ஒருவரை ஒருவர் உளமார நேசித்தோம்.

''ஏதோ ஒரு சந்தர்ப்பத்தில் யாரோ ஒருவரின் தர்மசங்கட நிலை பற்றிப் பேசுகிறபோது தன்னைப் பற்றிய ஒரு பகுதியை அவன் சொன்னான். இங்கிருந்து வலிய மாற்றம் கோரி அங்கே வந்ததாகச் சொன்னான். அதற்கு உரிய காரணத்தையும் விளக்கினான். அப்போது அவன் உன் பண்பை எவ்வளவு உயர்த்திப் பேசினான் தெரியுமா? உன் தாயின் அன்பை எவ்வளவு புகழ்ந்தான் தெரியுமா? 'அந்த அன்புத் தெய்வத்தின் ஆசையைப் பனிச்சென்று மறுக்கவும் மனம் வரவில்லை; இணங்கவும் என் நிலை இடம் தரவில்லை. அந்த அன்பு வலையில் என்னை அறியாமலே விழுந்துவிடுவேனோ என்ற அச்சத்தினால்தான் ஓடிவந்து விட்டேன்' என்றான். 'அந்தப் பெண்ணை மணப்பதில் உனக்கு உள்ள தடை என்ன?' என்று நான் கேட்க வாய் எடுத்தபோது அங்கே ஒருவர் வந்து எங்கள் பேச்சைக் கலைத்து விட்டார். மறு நாளே நான் அவனைப் பிரிந்து கோயம்புத்தூருக்கு மாற்றலாகிப் போய்விட்டேன்.

''உன் பெயரை அவன் அன்று சொல்லாததால் நீதான் அவன் குறிப்பிட்ட பெண் என்பதை நான் அறிய வாய்ப்பு இல்லை. இன்று அவன் எதிர்பாராதவிதமாக அதிகாரியோடு வந்தான். அவனுக்கு நான் அழைப்பு அனுப்பத் தவறிவிட்டேன். அனுப்பியிருந்தால் அழைப்பிதழில் உன் பெயரையும் உன் அப்பா பெயரையும் பார்த்துவிட்டு, அதிகாரி அழைத்தாலும் உடன் வர மறுத்திருப்பானோ என்னவோ? விவரம் புரியாத நிலையிலேதான் அவன் இங்கே வந்திருக்கிறான்.

''உன் அப்பாவும் அம்மாவும் பேசி அவனை உபசரித்ததைப் பார்த்து, எனக்குள் சிந்தித்த பிறகுதான் பளிச்சென்று எனக்கு எல்லாம் விளங்கிற்று. சும்மாவாவது உன்னை ஓட விட்டு வேடிக்கை பார்க்க வேண்டும் என்ற ஓர் ஆசை. இதிலே ஒரு தனி இன்பம் இருப்பதாக என் எண்ணம்.''

லீலா நெடுமூச்செறிந்தாள். ''அப்பாடா! நான் பிழைத்தேன். என் வாழ்க்கை பிழைத்தது. அந்த உத்தமப் பிறவி அத்தானை நினைத்துக் கையெடுத்துத்தான் கும்பிட வேண்டும்'' என்றாள். அவள் மார்பகம் விம்மி விம்மித் தணிந்தது.

''அது சரி, லீலா! சாதாரணமாகக் கேட்கிறேன். உன் அத்தான் ஏன் உன்னை மணக்க விரும்பவில்லை?''

''அவர் முன்பே மணமானவர்.''

''அப்படியா!... இவ்வளவு சிறு வயதில் முதல் மனைவி....?''

''இருக்கிறாள்.''

''இருக்கிறாளா!... அப்படி இருக்கும்போது உன் அம்மா...''

''முதலிலேயே அப்படி ஒரு பேச்சு. இடையில் அவர் திருமணம் நடந்தது. அவர்... மனைவியை விலக்கி... ஊருக்கு...''

''அட... இதையெல்லாம் அவன் என்னிடம் சொல்லவே யில்லையே! மனைவியை ஏன் விலக்கிவிட்டான்?'' — அவன் பரபரப்புடன் கேட்டான்.

''அவள் அழகாகவும் குணசாலியாகவும் இருந்தாள். கபடம் அற்றவள் என்றும் சொன்னார்கள். இரண்டு வருடங்களுக்கு முன் கயவன் ஒருவன் அவளை வஞ்சித்து, சங்கரன் கோட்டையிலிருந்து சென்னைக்கு அழைத்து வந்து கெடுத்....''

''என்ன!...சங்கரன்கோட்டையா? அவள் பெயர்?''

''கல்யாணி.''

''ஆ!...''

''ஏன்? அவனை உங்களுக்குத் தெரியுமா?''

''தெரியும் லீலா, தெரியும். அவனையும் தெரியும்; அந்தக் கயவனையும் தெரியும். நடந்த கதையும் நன்றாகத் தெரியும். அந்தப் பாவி அவளைச் சென்னைக்கு அழைத்து வந்தது உண்மை; ஆனால் அவன் அவளைத் தீண்டவில்லை. அந்த விபத்திலிருந்து அவளை மீட்ட நான் இதோ இருக்கிறேன்!...''

''அப்படியா!... அப்படியா!...'' என்று லீலா அவன் கைகளைப் பற்றிக் கொண்டு துள்ளினாள்.

''ஆம் லீலா. கல்யாணி மாசு மறுவற்ற தூய்மையான பெண்! நான் இதைக் கோபுரத்தின் உச்சியில் ஏறி முழங்குவேன். சுருக்கமாகச் சொல்கிறேன்.

''இளமையிலேயே பெற்றோரை இழந்து மாமாவின் ஆதரவில் வளர்ந்து எஸ். எஸ். எல். ஸி. தேறினேன். அதற்கு மேல் படிக்க வைக்க முடியாத நிலையில் மாமா என்னைத் தம் நண்பர் கணேசனிடம் ஒப்படைத்தார். அவர் கடையில் குமாஸ்தாவாக இருந்தபடி தட்டெழுத்து பயின்றேன். சில காலத்தில் மாமாவையும் இழந்து முழு அநாதையானேன். தட்டெழுத்தில் தேறியதும் செய்தித் தாள் விளம்பரங்களைப் பார்த்து மனுச் செய்தபடி இருந்தேன்.

''கணேசனின் அருமை மகள் கல்யாணி பரம சாது. கடையில் இருந்த மற்றொரு குமாஸ்தா சுந்தரம் அவள்மீது கண் வைத்திருந்தான். நான் அதை அறிந்து அவன்மீது கண் வைத்திருந்தேன்.

''கணேசனும் அவர் மனைவியும் தவிர்க்க முடியாத காரியத்தை முன்னிட்டு வெளியூர் சென்றார்கள். இந்தப் பயல் பொய்க் கடிதம் ஒன்றைத் தயாரித்து உள்ளூரிலிருந்தே அவளுக்குத் தபாலில் அனுப்பியிருக்கிறான். 'வந்த இடத்தில் உன் தாய் திடீரென்று நோய்வாய்ப்பட்டு இறக்கும் தறுவாயில் இருக்கிறாள். சுந்தரத்தையோ, சங்கரையோ துணைக்கு அழைத்துக் கொண்டு உடனே வரவும்' என்று கல்யாணிக்கு அவள் அப்பா எழுதியது போல் எழுதியிருந்தான். அதோடு தபால் நேரத்துக்குக் கணேசன் வீடு சென்று கல்யாணியை அழைத்துக்கொண்டு புறப்பட்டிருக்கிறான். தற்செயலாக ரயிலில் கல்யாணியையும் சுந்தரத்தையும் கண்டேன். 'ஐயோ!' என்று கூவிற்று உள்ளம்.

''நான் பாய்ந்து ஓடினேன். அதற்குள் ரயில் போய்விட்டது.

''இருந்தாலும் முயற்சி தளராமல் பஸ்ஸைப் பிடித்து அடுத்த சந்திப்பை அடைந்து டிக்கட் பெற்று போட்மெயிலுக்காகக் காத்திருந்து அதில் பயணப்பட்டேன்.

''இரவெல்லாம் தூங்கவே யில்லை. தூக்கம் எப்படி வரும்? விடியற்காலம் எழும்பூர் நிலையத்தை அடைந்தேன். பாசஞ்சர் இன்னும் வரவில்லை. காப்பி குடித்து வரலாம் என்று போனேன். திரும்புவதற்குள் பாசஞ்சர் வந்து நின்று ஒரே ஆரவாரம். பரபரப்புடன் அவர்களைத் தேடினேன். கிடைக்கவில்லை. தற்செயலாக நிமிர்ந்தபோது கல்யாணியும் சுந்தரமும் வாராவதியின் மறுபக்கத்தில் இறங்கிக் கொண்டிருப்பதைக் கண்டேன். வேகமாக ஓடினேன்.

விடை : 1. மனைவி. 2. சொந்தத் தாயார். 3. கடை பாக்கி வாங்க நடந்துபோன செட்டியார். 4. ஆபீஸில் சம்பள உயர்வு கிடைக்கவில்லை என்று மனக் குறையுள்ள பியூன். 5. பத்து ரூபாய் கடன் கேட்க வந்தவர். 6. பத்திரிகை ஆசிரியர்.

''அவன் ஏதற்காகவோ பின்புறம் திரும்பினான். என்னைப் பார்த்தான்; எடுத்தான் ஓட்டம்! எப்படித்தான் மாயமாய் மறைந்து போனானோ!

''கல்யாணி என்னைக் கண்டதும், அழத் தொடங்கினாள். நாலு பேர் நடுவே அழுவது தவறு என்று அவளை அடக்கினேன். அருகே இருந்த ஹோட்டலுக்கு அழைத்துச் சென்று அறை எடுத்து அதில் இருக்கச் செய்தேன்.

''ரயிலில் வருகையில் 'திருடர் பயம்' என்று அவள் நகைகளை அவன் வாங்கிக் கொண்டு விட்டான். 'எழும்பூர்' என்ற பெயர்ப் பலகையைப் பார்த்து அவள் தகராறு செய்ய முயன்றபோது, அதட்டிப் பயமுறுத்தி அவளை அடக்கி விட்டான்.

''இரவு அவளை அழைத்துக் கொண்டு ஊர் திரும்பினேன். ஊரை அணுகியபோது அவள் அழுத அழுகை! உதிர்த்த சொற்கள்!

'' 'மணமாகும் நிலையில் உள்ள பெண் என்று அப்பாவும் அம்மாவும் வீட்டின் நிலை தாண்டாமல் என்னைக் காப்பாற்றினார்களே! அவர்கள் இப்போது என்ன செய்வார்களோ? ஊரார் என்ன சொல்வார்களோ!' என்று அவள் விம்மிய விம்மல் என் உயிர் நிலையையே பிசைந்தெடுத்தது.

சந்திப்பில் ரயில் மாறும் கட்டம். அங்கே கணேசனைக் கண்டு ஓடினேன். அவர் மனைவி தன் பெண் கல்யாணியை அங்கே கண்டதும் பரபரப்பு!

''செய்திகளைச் சுருக்கமாகக் கூறினேன். பெண்ணை அவர்களிடம் ஒப்படைத்து, 'அப்பாடா!' என்று நிம்மதிப் பெருமூச்சு விட்டேன்.

''ஊரில் எனக்கு வேலைவாய்ப்பு உத்தரவு வந்து காத்திருந்தது. அன்றே சென்னை வந்தேன். சில மாதங்களில் சேலம் சென்றேன். மேலும் சில மாதங்களில் மோகன் அங்கே வந்தான். பின்னர் நான் கோயம்புத்தூர் சென்றேன். இதுதான் நடந்த கதை. கல்யாணி பரம உத்தமி!''

லீலாவுக்கு மகிழ்ச்சித் திணறலால் மூச்சு முட்டிற்று.

''இதை யெல்லாம் அத்தானுக்கு விளக்கி...''

''நாளைக்கே!..முதல் அலுவல் அதுதான்!''

''அத்தானுக்கு நல்வாழ்வு!''

''கல்யாணிக்கு இல்வாழ்வு!''

எங்கிருந்தோ மணி ஓசை கேட்டது. இருவரும் கவனித்தனர்.

''ஆ!.... மணி பதினொன்று!''

அவனுடைய பரபரப்பு அவளை நாணித் தலை கவிழ வைத்தது.

கல்யாணி — மோகன் வாழ்க்கை மலர்ச்சி அவர்கள் உள்ளத்திலே மகிழ்ச்சியை நிறைத்தது. அந்த நிறைவிலே அவர்களின் இன்பம் மலரத் தொடங்கிற்று.




முகமூடிக் கொள்ளைக்காரர்களைப் பற்றிப் பத்திரிகைகளில் தகவல் வெளிவந்த நேரம். ஒரு நாள் மாலை பாண்டிபஜார் சென்றிருந்தேன். அப்போது அங்குள்ள போலீஸ் ஸ்டேஷனுக்குள் கொள்ளைக் கூட்டத்தினரில் மேலும் இருவர் இருப்பதாகத் தெரியவந்தது. அவர்களைப் பார்க்க வேண்டும் என்ற ஆவலில் மக்கள் அங்கு கூடிவிட்டனர். அவசர அவசரமாக அங்கு வந்த நபர் ஒருவர் விஷயமறிந்ததும் மற்றவரிடம், "இனிமேல் மாடி வீட்டுப் பணக்காரர்கள் நிம்மதியாகத் தூங்குவார்கள்" எனக் கூறினார். எனக்குத் திகைப்பு ஏற்பட்டது. நான் மாடிவீட்டுப் பணக்காரனல்ல. நடுத்தர வகுப்பைச் சேர்ந்தவன் தான். இருப்பினும் நமது மக்களிடையே எவ்வளவு பொறாமை மனப்பான்மை வளர்ந்துள்ளது என்பதை உணர்த்திய இச் சம்பவம் எனக்குக் கோபத்தையும் வருத்தத்தையும் ஏற்படுத்தியது. 'மாடி வீட்டில் வாழ்பவர்களெல்லாம் பணக்காரர்களல்ல. குடிசையில் வசிப்போர் எல்லோரும் ஏழைகளும் அல்ல' என்பதே எனது எண்ணம். ஏழைகள் என்று கூறிக் கொள்பவர்கள் கையில் டிரான்ஸிஸ்டருடனும் வாயில் புகையும் சிகரெட்டுடனும் உலாவுகிறார்கள்.

ஏழைகள் யார்? பணக்காரர்கள் யார்? சந்தர்ப்ப வசத்தாலும், சூழ்நிலையாலும் நேற்றுப் பணக்காரர்களாக இருந்தவர்கள் இன்று ஏழைகளாகின்றனர். அதே போல் கடுமையான உழைப்பினாலும் புத்திசாலித்தனத்தாலும், சேமிப்பாலும் இன்றைய ஏழைகள் நாளைய பணக்காரர்களாகிறார்கள். அன்றாட ஊதியம் பெறும் தொழிலாளிகளில் பலர் புகை பிடித்தல், காப்பி குடித்தல், குதிரைப் பந்தயம், திரைப்படக் காட்சிகள் முதலியவற்றில் அதிகப் பணத்தை விரயமாக்குகின்றனர். இந்தத் தீய பழக்கங்களால் உடல் நலமும் கெடுகின்றது. பணத்தைச் சேமித்தால் வசதியாக வாழலாமே!

சென்னை – 44
20–6–68 தருமசீலன்

## திடீர்க் குடியிருப்பும் திடீர்த் தீயும்

சென்னையிலே பல பகுதிகளில் திடீரெனக் குடிசைகள் தோன்றுகின்றன. இந்தக் குடிசைப் பகுதிகளுள் வண்டிகள் நுழைவதும் சிரமமான காரியம்.

வெயிற் காலத்தில் திடீர்த் தீ பரவிக் குடிசைகள் சாம்பலாகிவிடுகின்றன. பற்றிய தீயை அணைப்பதற்குத் தீயணைக்கும் வண்டிகள் வந்தால் அவை உள்ளே போக முடிவதில்லை. எப்படி முடியும்? பத்து அடி அகலத்துக்குக் கூட வழிகள் விடாதிருந்தால்?

போதாக் குறைக்குச் சொந்தக்காரர்கள் பலர் பணத்தாசைப் பட்டுக் கார்ப்பரேஷனிடம் 'லே அவுட்' அனுமதி வாங்காமலேயே தங்களுக்குத் தோன்றியபடி 10 அடி அகலம் பாதைகள் விட்டு மனைகள் விற்கிறார்கள்.

இந்தச் சந்துகளிலும் தீயணைக்கும் வண்டிகள் நுழைய முடியாது. வீடுகள் கட்டுபவர்களும் கட்டட விதிகளை அனுசரிப்பதில்லை.




அதிகாரிகள் அவர்களைக் கேட்பதும் இல்லை. தக்க நடவடிக்கை எடுப்பதும் இல்லை.

தீ ஏற்பட்டால் பெருவாரியான குடிசைகள் எரிந்து சாம்பலாவதில் வியப்பொன்றுமில்லை.

சென்னை–11
20–6–68 எம். திருநாவுக்கரசு

## எலிப்பொறி சர்வீஸ்

இன்றும் பூனாவில் நகரசபை ஆதரவில் வெற்றிகரமாக நடைபெற்று வருகிறது என்பதை மிக்க மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம். ஒரே ஒரு மாறுதல். மசால் வடையை வீட்டில் உள்ளோர்தான் வாங்கி வைக்க வேண்டும்!

பூனா – 11 ம. ரேணுகா
14–6–68 வீ. பத்மா

குன்னூர் நகரசபை சுகாதார பிரிவில் எலிப்பொறிகளை வீட்டுக்கு வீடு வழங்குவதும், எலி விழுந்தால் மறு நாள் எடுத்துச் செல்வதும் 1942ம் வருடத்திலிருந்து புழக்கத்தில் உள்ளது. இம்மாதிரியே ஊட்டி, மேட்டுப் பாளையம் போன்ற ஊர்களிலும் புழக்கத்திலுள்ளது.

குன்னூர் – 2
13–6–68 க. ஸ்ரீனிவாசன்

## கால வித்தியாசம்

"அருமை நண்பன்" என்னும் சிறுகதையில் அண்மைக் காலத்தில் வெளியிடப்பட்ட படங்களாகிய 'காவல்காரன்', 'சரஸ்வதி சபதம்' என்னும் படங்களில் வரும் பாடல்களாகிய 'நினைத்தேன் வந்தாய், நூறு வயது', 'ராணி மகாராணி' ஆகிய பாடல்களைப் பாடிப் பத்மாவை மாணவர்கள் கிண்டல் செய்வதாகக் கூறப்படும் காலம் சுமார் ஐந்து அல்லது ஆறு வருடங்களுக்கு முந்தையது என்பதை அதே கதையில் வரும் 'ஒரு பெண் எத்தனை ஆண்டுகள்தான் காத்திருக்கமுடியும்?' 'அதெல்லாம் பழங்கதை' என்பன போன்ற வசனங்கள் உறுதிப்படுத்துகின்றன. ஐந்து அல்லது ஆறு வருடங்களுக்கு முன்னர் கல்லூரி மாணவர்களாக இருந்தவர்கள் மேற்கூறிய அண்மைக் காலப் பாடல்களை எவ்வாறு பாடிப் பத்மாவைக் கிண்டல் செய்திருக்க முடியும்?

இலங்கை
5–6–68 கு. சிவானந்தராசா

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Kilpauk, Madras-10
Managing Editor: T. Sadasivam

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

# AMCO

## A NAME THAT SPEAKS FOR ITSELF IN THE BATTERY WORLD




**AMCO BATTERIES**
STAY STRONGER LONGER

**AMCO BATTERIES LTD.,
BANGALORE**

AM/56/MAC-B